# முகவுரை.

'அறம்பொருளின்பம் வீடடைதல் நூற்பயனே' என்பப் பெரியார் கூறியிருக்கின்ற வண்ணம் தருமத்தையும் செல்வத்தையும் இகசுகங்களையும் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையும் பெறுவதே ஒரு நூலினாற் பெறப்படும் பயனாகும். மேலும், 'உரத்தின் வளம் பெருக்கி உள்ளிய தீமைப் புரத்தின் வளமுருக்கிப் பொல்லா-- மரத்தின், கனக்கோட்டந் தீர்க்கு நூலஃதே போல் மாந்தர், மனக்கோட்டந் தீர்க்கு நூல் மாண்பு' எனவும் சொல்லப்பட்டிருக்கின்றது. அதாவது எவ்வண்ணம் மரத்தினுடைய அதிகமாகிய கோணலை எற்றுநூல் என்பது போக்குகின்றதோ, அவ்வண்ணமே, உடம்பினுள்ளிருக்கின்ற அறிவினுடைய வளத்தை வளர்வித்துக் கருதப்பட்ட கொடுமையாகிற அறிவின்மையின் பெருக்கத்தை அழித்து, மனிதருடைய மனத்தினது கோணலைப் போக்குவதே கல்விநூலின் மாட்சிமையாகும் என்பதாம். முருகப் பெருமானருடைய திருவருட் பெருமைகளைக் கூறியிருக்கின்ற 'கந்தபுராணம்' என்னும் அரியபெரிய நூல், இந்த வனத்தினை யுடைத்தா யிருக்கின்றதென்பது ஒரு சிறிதும் மிகையாகாது.

ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியர் என்னும் பெரியாரியற்றிய 'கந்தபுராணம்' விரிந்து பரந்ததொரு நூலாதலின், கற்றோர்க்கும், மற்றோர்க்கும் கற்போராகிய மாணவர்க்கும் நன்கு விளங்குமாறு, அப்புரா

ணக்கதைபைச் சுருக்கி இவ்வசன நூன்முகமாக எழுதியுள்ளேன். ஒருநூல் இலக்கிய வகுப்பிற் சரிவரச் சேர்ந்துளதாவதற்கு அது பிழையற்றிருப்பது மாத்திரமே போதியதாகாது என்பதும், அஃது அவ்வாறு இலக்கிய வகுப்பிற் சேர்ந்துள தாவதற்கு அஃது இலக்கியமாட்சி (literary grace) யுடையதாதல்வேண்டுமென்பதும் எனது கொள்கைகளாதலின், அவற்றிற்கியைய இந்நூலை, மாணவர்க்கும் பெரிதும் பயன்தரக் கூடியதோர் இலக்கியவகையில், என்னு லியன்றமட்டும் வரைந்திருக்கின்றேன். கற்றறிந்தோர் இதனை ஏற்றுக் கொள்வார்களாக!

குறிஞ்சிநிலத் தெய்வமாகிய முருகப் பெருமானார் தமிழ்ப்பெருங் கடவுளராக வணங்கப்பட்டு வருகின்றனரென்பது வெளிப்படை. அத்தகைய பெருமானாரது திருவடிகள்பால் நீங்கா அன்பு பூண்டவரும், தமிழ்ப் பல்பெரும் நூல்களின் பதிப்பாசிரியரும், இந்நூலின் பதிப்பாசிரியரும், ஆதி அண்ட் கம்பெனியின் சொந்தக்காரரும், எனது நட்புரிமையாளரும் ஆகிய திருவாளர் ஆதிகேசவலு நாயுடு அவர்களுக்குத் தமிழுலகம் என்ஞான்றும் கடமைப்பட் டிருக்கின்றது.

T. பக்தவத்ஸலம்.




## திரு அவதாரம்

திருக்கைலாய மலையின்கண் நவரத்தின கசிதமான சிங்காதனத்தின்மீது பராசக்தி சமேதராக வீற்றிருந்தருளும் பரமசிவனைத் தரிசித்து, அவர்தம் பொன்னடி பணிந்து தம் குறைகளை நீங்கிக்கொள்ளக் கருதித் தேவர்களனைவோரும் ஒருநாள் ஆங்குச் சென்றனர். அவண் வாயிற் காத்துக்கொண் டிருந்த திருநந்தி தேவரிடம், தேவர்கள், தாம் போந்த காரியத்தைத் தெரிவிக்க, அவரும் பரமசிவத்தின் திருமுன்பு சென்று, தேவர்கள் வந்து காத்துக்கொண் டிருக்கும் செய்தியை அறிவித்துப் பெருமானார் கட்டளையைப் பெற்று அனைவோரையும் அழைத்துப் போய் விடுத்தனர். அங்கே, மரகதக் கொடிபோல் விளங்கும் மலையரசன் புதல்வியோடு, நவகோடி சூரியப்

பிரகாசமாய்த் தரிசனந் தந்துகொண் டிருந்த பரம்
பொருளின் பதமலர் பணிந்து, 'இறைவரே! எந்தை
யீர்! மலையாளரே! கறைமிடற்றண்ணலே! புலித்தோ
லாடை போர்த்த பொன்னார் மேனியினீர்! அன்பே
வடிவமாய் அருளை பொழியும் அற்புதப் பெருந்தகை
யீர்! சூரபதுமன் முதலாகிய கொடிய அரக்கர்கள்,
எங்களை வாட்டி வருத்தி ஏழாட்டங் காட்டுகின்ற
னர்கள்! அவர்களை அழித்து ஒழிக்க அடியோங்களா
லாகவில்லை. ஒரு திருக்குமாரனைத் தந்து, உற்பாதங்
களைத் தொலைத்தருள்வதாகத் தேவரீர் எமக்குத்
திருவாக்களித் துள்ளீர்கள். விண்ணவர்களாகிய
ஏழையேம் படும் துயரம், நெற்றிக்கண்ணரே! நங்
தமக்குத்தெரியாததா? ஆதலின், அழகிய திருக்குமாரனைத்
தந்து அடியோங்களைக் காத்தருள்க!' என்று தேவர்க
ளனைவோரும் திரிபுராந்தகனை வேண்டிக்கொண்ட
னர். உலகங்களெலாம் புரந்தருளும் உத்தமப் பெரு
மானாரும் மனமிரங்கி அன்பு சுரந்து, தமது அறுமுகங்
களையும் தோற்றுவித்து, அவற்றின்கண் விளங்கும்
திருவிழிகளினின்றும் ஆறு தீப்பொறிகளை வெளி
விட்டு, அப்பொறிகளைக் கொடுபோய்க் கங்கையிற்
சேர்ப்பிக்கும்படி வாயுதேவனுக்கும் அக்கினி பகவா
னுக்கும் பணியிட்டருளினர். ஆழியையும் விழுங்கும்
ஊழித் தீயோ வென்னும்படி, தாங்கலாகாத வெப்
பத்தை வீசும் ஓங்காரத் தீப்பொறிகளை, ஏந்தமுடி
யாதபடி ஏந்திக்கொண்டு, வாயு பகவானும் அக்கினி
பகவானும், கங்கைக்குக் கொடுபோய்த் தங்கமாய்
விடுத்தனர். கங்கையும் தீச் சுடர் பொறுக்கலாற்றாது.

பொங்கிப் பெருகிக் கடவுளினருளினால் அவற்றைச் சரவணப் பொய்கையிற் சேர்த்தனள். ஆங்கே, சிவபெருமானுடைய திருநுதற் பொறிகள், ஆறு குழந்தைகளின் வடிவாய் அற்புதமாய்த் தோன்றிப் பொற்புடன் விளங்கின. இந்த அழகிய திருக்கோலத்தைக் கண்டு, அந்தர வானவரெல்லோரும் சிந்தை மகிழ்ந்து, மழை மாரி போன்ற மலர்மாரி பொழிந்தனர். உந்திக் கமலத்தில் உலகத்தைத் தோற்றுவித்த திருமாலும், கடவுட் குழந்தைகளுக்குப் பாலூட்டக் கார்த்திகைப் பெண்களைப் பணித்தனர். அவர்களும் மனமுவந்து அவ்வாறு செய்யக் குழந்தைகளும் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தன. அழகுமிகுந்த சரவணப்பொய்கையில், ஐயனுடைய திருவிளையாடல் ஆதிசேடனாலும் சொல்லமுடியாது. சந்திரனைப் போன்ற சுந்தர முகமானது விளங்க ஒரு குழந்தை தவழ்ந்து ஆடிக்கொண் டிருக்கும்; ஒரு குழந்தை கீதஇனிய நாதம் பயின்றுகொண் டிருக்கும்; பெரிய உருவ மெடுத்துக்கொண்டு ஒரு குழந்தை பேரானந்தமாய் விளையாடிக்கொண் டிருக்கும்; ஒரு குழந்தை குழலினினிய மழலைச்சொற் பயின்றுகொண் டிருக்கும்; அழகிய செங்கரங்களால் தாளம் தட்டிக் கை கொட்டிக்கொண்டு ஒரு குழந்தை பின்னடி நடந்து கொண் டிருக்கும்; ஒரு குழந்தை புன்னகை புரிந்து இன்னருள் விளைத்துக்கொண் டிருக்கும்.

இவ்வாறு சரவணப் பொய்கையில் ஆறு திருக் குழந்தைகளும் அற்புதமாய் விளங்கிக்கொண்டிருக்கப்

பரமனெழுந்தருளிய திருக்கைலையில் என்ன நடந்த தென்று இப்போது நாம் நோக்குவோம். சிவபிரான் நெற்றியினின்றும் அனற்பொறி கிளம்பவே, பார்வதி யம்மையார் பயந்துவிட்டனர். தம்மையும் பரம சிவத்தையும் தனித்தனியாகப் பிரித்துவிடத் தேவர் கள் சூழ்ச்சி செய்தார்களென்று அன்னார்மீது அம் மையார் கடுங்கோபங் கொண்டதோடும், சிவபிரான் மீதும் வருத்தங்கொண்டு, பருவதராஜனுடைய தவ புத்திரியார், காலிற்சிலம்பு கலீரென் றொலிக்கச் சிறிது வேகமாய் நடந்தோடினார். அப்போது அச் சிலம்பி னின்றும் நவமணிகள் சிதறி விழுந்தன; அவற்றி னின்றும் நவசக்திக ளென்கின்ற ஒன்பது பெண்கள் தோன்றினார்கள். அவர்கள்மீது அரனாருடைய திரு வருள் நாடவும், அவர்களும் அங்ஙனமே கருப்பமா யினர். இதனைக் கண்ட உமாதேவியாருக்குக் கோபம் பெருகிக் கொழுந்துவிட் டெரிந்தது. ஆகவே, 'நவசக் திகள் மகப்பெறாது வருந்துவாராக' என்று அம்மை யார் சாபமிட்டனர். இதனைக்கேட்ட நவசக்திகளுக்கு உள்ளம் பதைத்தது, உடலம் நடுங்கினது. அவர்கள் துடிதுடித்தார்கள், பதைபதைத்தார்கள், நடுநடுங்கி னார்கள். வெய்யிலிற்பட்ட புழுக்களைப் போலவும், அனலிற்பட்ட மெழுகினைப் போலவும், அவர்கள் பட்ட துயரம் யாராலும் சொல்ல முடியாது. அன்னார் விதிர்விதிர்த்து மனங்கலங்கவே, அவர்கள் மேனிமுழுவதும் வியர்வை யரும்பிற்று. அதினின்றும் இலக்கவீரர்கள் தோன்றினார்கள். பின்னர், சிவபெரு மானுடைய திருவருளால், உமாதேவியாருடைய கரு

ணைக் கிலக்காகி நவசக்தியர் சாபம் நீங்கப் பெற்றுக் கருவுயிர்த்தார்கள். மேற்கூறியபடி தோன்றிய இலக்க குமாரர்களையும் நவவீரர்களையும் சரவணப்பொய்கை யில் திருவவதாரஞ் செய்துள்ள ஆறுமுகப் பெருமா னுக்குத் தொண்டு புரிந்து அவருடைய படைவீரர் களா யிருக்குமாறு சிவபிரானார் பணித்தருளினர்.

இவையாவும் நிகழ்ந்தானபின், அருளே திருவுரு வமாயமைந்த பெருமானார் பர்வதராஜன் தவபுத் திரியை நோக்கி, 'நாம் சரவணப் பொய்கைக்குச் சென்று, குழந்தையை எடுத்துவர வேண்டாவா?' என்று கேட்கப் பராசக்தியும் அதற் கிசைந்தனர். உடனே சிவபிரானும் பார்வதிதேவியாரும், ஒள்ளிய நல்ல வெள்ளிவிடையீ தமர்ந்து, பூதகணங்கள் சூழ்ந்து வரவும், வேதநாதம் விண்முக டேறவும், ஜயபேரிகை, வெற்றி முரசம், சங்கம், சின்னம், சல்லரி, மல்லரி முதலிய பதினெண் வாத்தியங்கள் பாரெங்கும் கேட் கும்படி முழங்கி வரவும், சங்கரனடியார்கள் கங்கைத் திவலையைப் போன்று துங்க வெண் சாமரைகளை மங்களகரமாய் வீசிவரவும், கைலையினின்று மிறங்கிச் சரவணப் பொய்கை வந்து சேர்ந்தனர். எம்மை யாளும் ஏந்தலும் இறைவியும், குழந்தையைக் கண் டார்கள், பேரானந்தங் கொண்டார்கள். தெய்வப் புதல்வர் திருமுகத்திலும், முத்த நகையானது மிகுத் துக் காட்டியது. அடங்காத மகிழ்ச்சியோடும், உள்ளங் கனிந்த ஆதரத்தோடும் பார்வதிதேவியார் ஆறு குழந்தைகளையும் சேர்த் தெடுத்து மார்போ

டணைத்துச் சீராட்டிப் பாராட்டிப் பாலூட்டினர். இவ்வாறு ஆறு குழந்தைகளையும் சேர்த்தெடுத்தபோது, அவை ஆறுசிரங்களும் பன்னிரு கரங்களுமுடைய ஒரே ஒரு திருவுருவாய் மாறிவிட்டன. இந்தத் தெய்வப் பெருமானுர் தாம் சண்முகக் கடவுள் அல்லது ஆறுமுகக் கடவுளெனப் படுபவர். சிவபிரானுடைய திருநுதற்பொறிகளைக் கங்கையாறு ஏந்திச்சென்ற காரணத்தாலே **காங்கேயர்** என்றும், சரவணப் பொய்கையில் அவதரித்தபடியால் **சரவணபவன்** என்றும், கார்த்திகைப் பெண்கள் பாலூட்டி வளர்த்தமை பற்றிக் **கார்த்திகேயர்** என்றும், உமா தேவியார் விஞ்சிய ஆதரவுடன் சேர்த்தணைத்துப் பற்றியதன் நிமித்தம் **கந்தஸ்வாமி** என்றும். மேற் கூறிய வண்ணம் ஆறு திருமுகங்களுடையவராதலால் **சண்முகன்** அல்லது **ஆறுமுகப் பெருமானுர்** என்றும் அவருக்குப் பலதிருப் பெயர்கள் உண்டு. பொதுவாக அவருக்குத் தமிழ் நாட்டில் **'முருகன்'** என்னும் திருப்பெயரே சாலவும் வழங்கி வருகின்றது. 'முருகன்' என்பதற்கு 'அழகும் இளமையும் ஒருங்கே உடையவன்' எனப் பொருள் கூறலாம். முருகப் பெருமான் திருத்தோற்றத்தைக் கண்டு மகிழாதவரெவருமிலர். உலகக் கொடுமையை ஒழிக்க அழகுத் திருத்தோற்றம் தோன்றினதோ என்று, அந்தா வானவர்களெல்லோரும் சிந்தை களிகூர்ந்தார்கள். ஐயன்மீதும் அம்மையார்மீதும் தேவ குமரனை பாலகுமரன்மீதும் தேவர்களனைவோரும் பூமாரி பொழிந்தார்கள். சாபமயைத்தராய்ச் சரவணப் பொய்கையில் மீனுருவடைந்.

திருந்த பராசர புத்திரர்கள், உமாதேவியார் குமாரக் கடவுளுக்குப் பொற்கிண்ணத்தில் பாலூட்டியபோது சிந்தின பாலைப் பருகிச் சாபம் நீங்கித் தவஞ் செய்வா னேகினர். கார்த்திகைத் திருநாட்களில் விரத மிருந்தோர்க்கு எல்லா நலனும் எல்லாப் பலனும் உண்டாவதாக என்று கார்த்திகைப் பெண்களுக்குக் கடவுட் பெருமானார் திருவருள் செய்துவிட்டு, உடனே, பார்வதிதேவியாரோடும் திருக்குமரனை நடுவில் அமர்த்திக் கொண்டு வெள்விடையேறிக் கைலாயத்திற்குத் திரும்பினர். இத்தோற்றத்தைப் பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும்போல் இருந்தது. பரமசிவமும் பார்வதிதேவியாரும் இருபக்கத்திலும் விளங்க நடுவில் முருகப் பெருமான் தரிசனந்தந்தது, இரண்டு சந்திரர்கள் இருபக்கத்திலும் நிலவெறிக்க, இடையே, உன்னதச் சந்திரன் மற்றொன்று உதயமானதுபோன்றிருந்தது. சூரனாதியோர் கொடுமை யெல்லாமொழிந்து போகக் காலம் வந்ததென்று தேவர்களனைவோரும் திருவருளைச் சிந்தித்தார்கள்.



## திருவிளையாடலும் தேவசேனாதிபதிப் பட்டமும்

கைலைமலையின்கண் முருகன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருங்கால், அவருக்குத் தக்க துணையாளராகவும் படையாளராகவும் இலக்கவீரர்களும் நவவீரர்களும் இருந்து வந்தார்கள். இவ்விளம் பருவத்தில் முருகப்பெருமானார் பற்பல அருமையான திருவிளையாடல்கள் புரிந்து கொண்டுவருவார். நாகலோகத்தையும் நாராயணன் உலகத்தையும் நான்கே விநாடியில் அவர் பார்த்து மீளுவார். ஒருலகத்தினின்றும் ஒருலகத்திற்குச் செல்லுவதும், வானத்தினின்றும் பாதாளத்திற்குக் குதிப்பதும், பாதாளத்தினின்றும் ஆகாயத்திற்கு எழும்புவதும், மலைகளைப் பிடுங்கிக் கடலில் எறிந்து கடல்களை இறைத்து அப்புறம் போக்குவதும், நக்ஷத்திரங்களைக் குண்டுக் கற்கள்போல் பிடுங்கி நாற்பக்கங்களிலும் வீசுவதும், அஷ்டதிக்குக் கஜங்களை ஆட்டங்களாட்டுவதும், உலகத்தைத் தாங்கும் உற்பாதப் பெரும்பாம்புகளைத் தாம்புக் கயிற்றைப்போல் இழுத்திழுத்துச் சாடுவதும், சூரியன் கதியில் சந்திரனை ஓட்டுவதும், சந்திரன் கதியில் சூரியனை நடத்துவதும், ஆடுவதும்,

பாடுவதும், வேடிக்கைகள் பார்ப்பதும், பிரசங்கங்கள் கேட்பதுமாக அவர் எந்நேரமும் விளையாடின திருவிளையாடல்களுக்குக் கணக்கு வழக்கேயில்லை. இவ்வாறு உலகத்தின் நடையே பற்பல விதமாக மாறியிருப்பதைக் கண்ட அசுரர்களுந் திடுக்கமுற்றார்கள். இயற்கைக்கு மீறினவையும் இயற்கைக்கு மாறினவையுமான செயல்களைப் புரிவது அசுரராலும் முடியாத காரியம், தேவர்களாலும் ஆகாத சங்கதியென்பதைச் சூரபதுமனாதிய அரக்கர்கள் நன்குணர்ந்தார்கள். ஆயினும் அவர்கள் அகந்தை அவர்களை விட்டு நீங்கவேயில்லை. தேவர்களைக் காத்து அன்னோருக்குக் கருணைபுரியவே திருவவதாரஞ் செய்த முருகப்பெருமானாருடைய திருவிளையாடல்களைத் தேவர்களும் சரிவர உணர்ந்தாரல்லர். இயற்கைத் தோற்றங்கள் பற்பலவண்ணம் மாறுதல்களடைவதையும், அவைகளினா லுண்டாகும் இடர்ப்பாடுகளையும் தேவேந்திரனும் தேவர்களும் கண்டு உள்ளங் கலங்கி விதிர் விதிர்த்தவராய், அத்தகைய நிகழ்ச்சிகளுக்குக் காரணமா யுள்ளவனைக் கண்டுபிடித்தல் வேண்டுமென்று காடு மாலை எங்கும் தேடித்திரிந்து இறுதியில் முருகப்பெருமானா ராகும் ஒரு சிறுபிள்ளையைக் கண்ணுற்றார்கள். இச் சிறுபிள்ளைதான் இத்தகைய அரிய பெரிய செயல்களைச் செய்வது எனத் தேவர்கள் ஒருவாறாக அறிந்துகொண்டாரேனும், அச் சிறு குழந்தையினுடைய கடவுட் டன்மையை எவரும் ஓர்ந்திலர். தம்மைக் காக்கத் தம் தவத்தின் பலனாகத் திருவவதாரஞ் செய்த கடவுட் பெரியாரே அச்சிறியோராவர்

என்பதை ஒரு சிறிதும் அறியகில்லாத அத்தேவர்கள், அஞ்ஞானவயத்தராய், முருகப் பெருமானை ஓர் அசுரத் தோற்றமென மருண்டு, மதிமயங்கி, அவரை அதட்டி விரட்டி, அவரை வளைத்துக்கொண்டு அவருடன் போர்புரியத் தொடங்கினர். அத் தேவர்களுடைய அறியாமையையும் அகந்தையையும் நோக்கி அறுமுகக்கடவுள் விலாவிறச்சிரித்து, ஒரு கணப்பொழுதிலே அவர்களனைவரையும் கண்ட துண்டங்களாக்கி ஒழித்தனர். இந்திரனுடைய வெள்ளையானையும் வீழ்ந்திட்டு மாளும்படி செய்து, இந்திரனுடனும் பெரும் போர் புரிந்து அவனையும் பெருமானார் மாய்த்தனர்.

மேற்கூறிய சங்கதிகளையும், தேவமாதர்கள் அவை காரணமாக வருந்திப் புலம்புவதையும் நாரதர் அறிந்து மனமும் மிகப் புண்ணாகித் தேவகுருவாகிய பிரகஸ்பதியிடம் சென்று அனைத்தையும் தெரிவித்தனர். இடியைக்கேட்ட நாகம்போலேயும், முரசொலிகேட்ட அசுணப்புள்ளைப் போலேயும், நடந்த சங்கதிகளைக் கேட்டமாத்திரத்தில் பிரகஸ்பதி பகவான் தாயருற்று அடியற்ற பனைமரம்போல் தரையில் விழுந்து அழுது புலம்பிப் பின்னர் மனதை ஒருவாறு திடப்படுத்திக் கொண்டு குமரேசனை நாடிச்சென்றனர். ஐயனைக் கண்டதும் அடிபணிந்து, 'எம்மைக் காத்தருளும் ஏந்தல் பெருமானே, தெரியாமற்செய்த குற்றத்தைத் தேவதேவா பொறுத்தருளல் வேண்டும். தாங்கள் செய்த திருவிளையாடல்களை அறியாமையினாலே அரக்கமாயை யென்று கருதி, இந்தத் தேவர்கள்

அறிவைத் தேடிக் கொண்டார்கள். தேவர்களுடைய குறைகளைப் போக்கியருளத் தேவரீர் திருவவதரித்திருந்தும், இந்தச் சம்பவம் நேர்ந்தது தேவர்களுடைய அறியாமையினாலும் அகந்தையினாலுமே யன்றி வேறன்று. மத்தகஜங்களைப் பொருதல் சுத்த வீரத்தன்மை யாகுமே யன்றி, மசகங்களைப் பொருதலா ஒருவருக்குப் பெருமையாகும்? தேவதேவா, தங்கள் சுண்டு விரலை யசைத்தால் அண்டங்களெல்லாம் புரண்டுபோகுமே! சிந்தையில் நினைத்தமாத்திரத்தில் உலகங்கள் வெந்து நீறாகிப்போகுமே! இதனை யறியாத ஏழை மனத் தேவர்கள், 'ஆய்ந்தோய்ந்து பாராதான் தான் சாகக்கடவன்' என்கின்ற வாக்கியத்திற்கிலக்காகி ஏங்கிச் சாகக் காலம் நேர்ந்தது. ஆதலால், எம்பெருமானே, எமையாளும் பெம்மானே, நீவிர் திருவருள் சுரந்து, இந்த ஏழைத் தேவர்களை எழுந்திருக்கச் செய்யவேண்டும்' என்று பிரகஸ்பதிபகவான் முருகப்பிரானைப் பெரிதும் வேண்டிக்கொண்டனர். அதன் மீது பெருமானார் திருவுள்ள மிரங்கித் தேவர்கள் உயிர்த்தெழுமாறு திருவருள் புரிந்தனர். அங்கணமே தேவர்கோனும் தேவர்களும் கண் விழித்தெழுவது போல் எழுந்தனர், பெருமானடியில் விழுந்தனர். இந்திரனானவன் இறைவனை நோக்கி, 'ஐயனே, பன்னிருகையனே, மெய்யர்க்கு மெய்யனே, அறியாமற் செய்த பிழையைப், பெரியோனே, பொறுத்தருளல் வேண்டும். திக்கு திசை தெரியாமல் தப்பித் தடுமாறின எங்களை நின்றன் திருவருட் கண்ணால் ஒருதரம்நோக்கியருளல் வேண்டும். என்னையும் என்னைச் சார்ந்தோ

ரையும் காக்க அவதாரம் செய்த நின்னிடமே வந்து நீங்காத அபசாரப்பட்டோம். எங்கள் பாவங்களை நின்தன் கருணையாகிற தீயினில் தூசாகச் செய்தல் வேண்டும். சூரபதுமன் எங்களைச் சுட்டெரித்து விடுகின்றான்; சிங்கமுகப்பாவியோ எங்களைப் பங்கப் படுத்துகின்றான்; தாரகாசுரன் எங்களைத் தகித்துப் போடுகின்றான். மற்றப் பாவிகளும் எங்கட்குப் பற்பல விதத்திலும் கொடுமையே புரிகின்றார்கள். ஆகவே, எங்களைக் காப்பது நின்தன் கடன். கருணைவள்ளலே வாழ்க! கண்ணுக் கினியனே வாழ்க! அண்ணலே வாழ்க! அன்பனே வாழ்க!' என்று, ஐயன் பொன் னடியில் ஆயிரமுறை வீழ்ந்து கும்பிட்டான். முருகப் பெருமானும் பெரிதும் மனமிரங்கி, 'தேவர்கோனே, தேவர்களே, நீவிர் யாதொன்றுக்கும் அஞ்சவேண்டுவ தில்லை. அறத்தின் துறை நீங்கி மறத்தின்வழி பாய்ந்த அதருமப் பாவிகளை அதப்படுத்தி விடுவோம் நாம்!' என்று அருண்மொழி புகன்று அதைரியத்தை ஓட்டி னர். தேவேந்திரனும் தேவர்களும் முருகப் பெருமா னுடைய திருவருளைச் சிந்தித்துச் சிந்தித்து அனலின் வாய்ப்பட்ட மெழுகே போலப் பக்தியின் வயப்பட்டு உள்ளம் நெக்கு நெக்குருகி உடலம் சிலிர்க்கவும் கண்ணீர் பெருகவும் ஆனந்தத்தி லமிழ்ந்துகொண் டிருக்கும்போது, அடியார்க்கு அன்பராய பெருமா னார், தமது திவ்விய விஸ்வரூபத்தைக் காட்டினர். அண்டமுகடு கடந்த அற்புதத் திருக்கோலத்தையும், அனைத்தாகும் சராசரங்களும் அதிலடங்கிக் காணு கின்ற பெருங் கோலத்தையும் தேவர்கள் கண்டு திப்

பிரமைகொண்டு, பெருமானாருடைய திவ்விய தேஜோ மயத்தைத் தங்கள் விழிகள் தாங்கு மாற்றலில்லாதன வாதலால் அவர் முன்போலத் தமது அழகுச் சிறு தோற்றத்தையே அடையவேண்டும் என்று வேண்டிக் கொண்டனர். ஆறுமுகப் பெருமானாரும் அதற் கிசைந்து அவ்வாறே தோன்றினர். நிலைமாறியிருந்த உலகத் தோற்றங்களும், நிலைமாறாதபடி மீண்டும் அமையும் வண்ணம் திருவருள் புரிய வேண்டுமென்று தேவர்கள் பிரார்த்திக்க, அவ்வாறே ஆகக் கடவது என்று பெருமானார் பணித்தனர். யாவும் அவ்வண் ணமே நிகழ்ந்தன. அதன்பின்னர், இமயப் பெருமலை யின் ஒருபுறத்தில் தேவர்கள் ஐயனுக்குத் திருக்கோயி லொன்றமைத்து, அதில் பெருமானாருக்குத் திருமஞ் சன முதலியன செய்து, அவரை வந்தித்து வழிபட்ட னர். அவ்வமயம் தேவர்களனைவோரும் கந்தவேளுக் குச் சேனையாக இருக்கக் கடவமென்று தேவேந்தி ரன் பணித்தது மன்றிப் பெருமானார் அச்சேனைக்குத் தலைவராக இருத்தல் வேண்டுமெனவும் விரும்பினன். இவ் வேண்டுகோளையும் ஐயன் ஏற்றுக்கொண்டு ஆத ரிக்கவே, அற்றைநாள்முதல் பெருமானாருக்குத் '**தேவ சேனாதிபதி**' என்கின்ற திருப்பெயரும் உண்டாயிற்று. இப்பொழுது நாம் குறிக்கும் இடத்திற்குக் 'கந்தபரு வதம்' என்கின்ற பெயரும் ஏற்பட்டது. மேற்கூறி யவை யாவும் நிகழ்ந்தானதற்பின், முருகப் பெருமா னார் திடீரெனமறைந்து கைலையங்கிரிக் கேகினர். தேவர்களும் தத்த மிருப்பிடம் சென்றனர்.



## ஆட்டுக்கடா வாகனமும் அயனார் கருவபங்கமும்

நற்றவ முனிவர்களும் நாரதபகவான் தேவருல கத்தில் யாகம் ஒன்று செய்தனர். கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது என்று சொல்கின்றபடி, யாகஞ் செய்ய அதினின்றும் ஆடொன்று கிளம்பிற்று! அந்த ஆட்டின் கொடுமை யாவரால் சொல்ல முடியும்? யாகச் செந்தழலினின்றும் கோர விலங்கு புறப்பட்டுத் தேவரையும் முனிவரையும் ஓட ஓட வடித்து, அகப் பட்டவர்களைக் கொன்று அதப்படுத்திக் கொண்டு வருவதைப் பொறுக்க முடியாதவர்களாய், இருடிகள் பலரும் வேள்வித் தலைவராகிய நாரதரும், முருகப் பெருமான் திருவடி பணிந்து முறையிடலாயினர்; 'ஏழைகள் துயர்ப்பிணி போக்கும் எந்தல் பெரு மானே, அடியேம் செய்த ஓர் யாகத்தினின்றும், அதிக பயங்கரமான ஒரு வெள்ளாடு குதித்தெழுந்தது. செந்தழலினின்றும் செக்கர்வானம் போலத் தோன்றி, அதிக பயங்கரமாய்ப் புறப்பட்டது அந்த ஆட்டுக் கடா! அந்த ஆட்டுக்கடா வெளிப்புறப்பட்டது எவ் வாறிருந்த தெனில், வடவைத்தீயும் பிரசண்டவாயு வும் ஒன்று சேர்ந்து புறப்பட்டது போன் றிருந்தது.

உலகத்தை அழிக்க உற்பாதமாய் அது தோன்றிற் றென்றே சொல்லவேண்டி யிருக்கின்றது. அடித்தும் இடித்தும் உதைத்தும் மிதித்தும், அந்த ஆட்டுக்கடா. இருடிகள் எத்தனை பெயரையோ இயமனுலகஞ் சேர்த்தது; வானவர்கள் எத்தனை பெயரையோ கொன்று வதைத்து வானுலகத்திற்கு அப்புறம் ஓட்டியது. அதன் கொடுமையைத் தாங்க எங்களால் ஆகவில்லை; சூரியனும் வருந்துகின்றான்; சந்திரனும் கடுங்குகின்றான்; ஏழைகள் நாங்கள் என்னதான் செய்வோம்! எங்கள் குறையைப்போக்கி எங்களை எப்படியாவது காத்தருளல் வேண்டும். ஏழைகளைக் காத்தருளவும், ஏழைகளுடைய துயரங்களைப் போக்கவுமன்றோ எந்தல் பெருமானாராகிய தேவரீர் திருவவதாரம் செய்தீர்கள்? அந்தோ! அரக்கரை யழிக்கத் தோன்றிய நுங்களுக்கு, ஒரு ஆட்டை யொழித்தல் தானா பெரியகாரியம்? கடவுட் பெரியீர், காத்தருளல் வேண்டும்!' என்று முனிவர்களனைவோரும் உடல் முழுவதும் நிலந்தோயும்படி வீழ்ந்து பணிந்து விண்ணப்பம் செய்துகொண்டார்கள். இதைக் கேட்ட முருகப் பெருமானார் மனம் மிகவிரங்கி அந்தக் கோர ஆட்டைக் கொண்டுவருமாறு வீரவாகு தேவருக்குப் பணித்தனர். ஓடினார் வீரவாகுதேவர்; தேடினார் எங்கெங்கும்; கொலைபுரிந்து செல்லும் கோர ஆடு நிலவுலகெங்கும் அகப்படவேயில்லை. கடைசியில் அந்த ஆடு, கமலசம்பவனுகிற பிரமனுலகில், மத்தகஜமொன்று குதித்துவருவது போன்றும், மேருகிரி யெழுந்து ஓடி வருவது போன்றும், வீரவாகுதேவர்

கண்களுக்கெதிரே கோர உருவமாய்க் காணப்பட்டது. பார்த்தார் வீரவாகுதேவர்; பற்றினர் ஆட்டுக்கடாவை! இழுத்துவந்து அதனை எம்பெருமானின் முன் விடுத்தனர். அப்பொழுது ஆட்டுக்கடா எப்படியிருந்த தென்றால், அக்கினி பகவானுக்கு அபிஷேகம் செய்ததுபோல் நின்றுவிட்டது. அடங்கிநின்ற ஆட்டுக்கடாவைத் தேவர்களும் முனிவர்களும் ஆச்சரியமாய் நோக்கினார்கள். பெருமான்தன் பேராற்றலும் ஆற்றலைக்கண்டு தேவர்களும் முனிவர்களும் திருப்புகழ் பாடினார்கள். 'நீவிர் சென்று யாகத்தை நிறைவேற்றுக!' என்று பெருமானார் நாரதருக்கும் ஏனைய இருடியருக்கும் கட்டளையிட்டனர். ஆட்டுக்கடாவை வாகனமாய்க் கொண்டு ஆரோகணித்தல் வேண்டுமென்று தேவர்களும் முனிவர்களும் விண்ணப்பித்துக் கொள்ள, 'அவ்வாறே செய்வோம்' என்று அரனார் தந் திருமகனார் திருவுள்ளம் பற்றினர்.

ஆட்டுக்கடாவை வாகனமாய்க்கொண்ட அரனார் திருமகனார், ஒரு நாள், கைலைமலையில் உலாவிக் கொண்டிருந்தனர். சிவபெருமானைத் தரிசித்துத் திரும்பிவந்து கொண்டிருந்த பிரமனாகிய நான்முகக் கடவுள், அப்போது, ஆறுமுகப் பெருமானைக் கண்டு, அவரை ஓர் அற்பமான குழந்தையைப்போல் பாவித்து அகந்தையையும் மமதையையும் அகம் நிறையப்பூண்டு செருக்கித் திருக்கி நின்றனர். சகல ஜீவராசிகளையும் படைக்கும் பிரமதேவர், மும்மூர்த்திச் சொரூபமாகிய ஓங்காரத்தின் உட்பொருளாகவே விளங்கும் முருகப் பெரு

மானுடைய பெருமையை ஓராமலும் அவர் தம் பொன்னடிகளில் வீழ்ந்து வணங்காமலும், கள்ளி வளர்ந்தது போல் காட்சிதந்தது என்ன விந்தை! இதனைக் கவனித்த குமரவேள், பிரமனை நோக்கி 'நீ யாவன்?' எனக் கேட்க, 'எல்லா உலகங்களையும் அனைத்தாம் ஜீவராசிகளையும் படைக்கும் பிரமதேவன் யான்' என்று அயனார் மறுமொழி கூறினர். 'அப்படியானால் பிரணவத்திற்குப் பொருள் கூறமாட்டுவையா?' என முருகப்பெருமானார் கேட்டனர். இந்தக் கேள்வியைக் காதில் வாங்கினதும் பிரமதேவர் இடியைக் கேட்ட நாகம்போலாயினர். அந்தோ! அயனார் என் செய்வார் பாவம்! அதுகாறும் தமக்கு நிகரில்லாது அரசோச்சிக் கொண்டிருந்த பிரமதேவர் அற்றைப் போது சின்னஞ் சிறுகுழந்தை முன்னம் தன்னந் தனியாய்ப் பசபசவென்று விழிக்கலாயினர். 'ஓஹோ கொடிது கொடிது, அறக் கொடிது, பிரணவத்தின் பொருளறியாது பிரமதேவனா யிருந்து படைத்தற் றொழிலை நீ புரிவது, சால அழகிது! இதற்காகத்தானா நின் மனத்தில் இத்துணை அகந்தை கோயில்கொண்டு கூத்தாட நிற்கின்றது!' என்று அறுமுகப் பெருமானார் ஆக்ரோஷத்துடன் சினந்து, பிரமதேவரைக் குட்டி, அவரது கைகளைக்கட்டி, விலங்கினைப் பூட்டிச் சிறைச்சாலைக்குள் ஓட்டிவிட்டனர். பின்னர் முருகக் கடவுள், தாமே, நான்முகத்தினராய், நான்மறை வடிவினராய், கண்டிகையும் குண்டிகையும் கரங்களிலேந்தி, வரதமும் அபயமும் மற்றிருகரங்களிற் காட்டிக் கந்தவரையில் வீற்றிருந்து, காசினியின் படைப்புத் தொழிலை நிறைவேற்றி வந்தனர்.

இஃதிங்கிவ்வாறாகத் திருமால் முதலியோர் பிரமதேவனுக்கு நேர்ந்த இடையூற்றை நோக்கி மனம் மிக வருந்திக் கைலையங்கிரிக்குச் சென்று ஆங்குப் பரமசிவத்தின் திருமுன்பு நின்று நடந்தவற்றை விண்ணப்பித்துப் பிரமதேவனைச் சிறைச்சாலையினின்று விடுவிக்கும்படி பெரிதும் வேண்டிக் கொண்டனர். சிவபெருமானார் நந்திதேவரை முருகப் பெருமானிடமனுப்பிப் பிரமதேவனைச் சிறையினின்றும் விடுவிக்கும்படி கேட்டுக்கொள்ளப் பணித்தனர். அப்படியே நந்திதேவரும் முருகப் பெருமானிடம் சென்று எவ்வாறு சங்கதியைத் தெரிவிப்பதென்று மயங்கித் தியங்கிப் பின்னர் ஒருவாறு தேறி, அனைத்தையும் கூறித் திசைமுகனைத் தளைநீக்கி விடுக்கும்படி வேண்டினர். குமாரக்கடவுளும் அதைக்கேட்டு மிகப் பெரிதும் வெகுண்டு, நந்திதேவரை நனிமிக முனிந்து, 'இந்தச் சங்கதியில் நீ ஏன் தலையிட்டுக் கொள்கின்றனை? கருவம் பிடித்த பிரமனுக்கு அதுவே தகுந்த தண்டனை. அளவுகடந்து நீ எனக்குப் புத்தி புகட்ட வந்தனையேல் உன்னையும் பிடித்துச் சிறைச்சாலையில் அடைக்கின்றேன் பார்' என்று கோபக்குரலோடு கூச்சலிட்டுப் பேசவே, நந்திதேவரும் நடுநடுங்கித் திரும்பிவிட்டனர். கைலையங்கிரிக்குத் திரும்பிவந்து, நந்திதேவர் சிவபெருமானிடம் எல்லாச் சங்கதிகளையும் கூறவே, சிவபெருமானார் தாமே சென்று பிரமதேவனை விடுவிப்பதாய்க் கூறிக் கந்தமாதன பருவதத்தை நோக்கிப் புறப்பட்டனர். பூதகணங்கள் சூழ்ந்துவரவும், சாமகீதம் வேதியர் பாடவும், நாரதர் தும்புரு கந்தரு

வர் வித்தியாதரர்கள் நல்லிசை பயின்று நான்கு பக்கங்களிலும் தோன்றவும், கவரிவீசவும், சாமரைபோடவும், தேவர்கள் பூமாரி பெய்யவும், அன்பர்கள் யாவரும் திருக்கோலங்கண்டு உய்யவும், வெள்விடையேறிச் சிவபிரானார் வேளிருக்குமிடம் வந்துசேர்ந்தனர். தந்தையாரைக் கண்டதும் மைந்தனாரெழுந்து மலரடி பணிந்தனர். 'அப்பா குழந்தாய், அயனை நீயேன் சிறையிலடைத்தனை? மும்மூர்த்திகளி லொருவரா யிருந்து முப்புவனங்களையும் அவற்றிலுள்ள ஜீவராசிகளையும் படைத்தருள்கின்ற வேதியனை நீயேன் வீணிற் றளைபூட்டிச் சிறையிட்டனை ?' என்று பரமன் குமரனைக் கேட்க, முருகப்பிரானாரும், 'தந்தையீர்! என்னைத் தேவரீர் கோபித்தலாகாது. பிரணவப்பொருளைத் திரணமேனு மறியாத இந்தப் பிரமன் எந்தவாறு உலகத்தைப் படைத்தல்கூடும்? குயவன் சட்டிப்பானை செய்வது போன்றன்றே இருக்கும் இந்தப் பிரமன் எழுலகங்களையும் படைத்தல்? அதனாற்றான் அவனைத் தளையிட்டுச் சிறையிட்டேன் யான். அகங்காரத்தாலே இந்தப் பிரமன், தலை கால் தெரியாது ஆடுகின்றான். ஆகவே, அவன் சிறையிருப்பது அவனுக்குத் தகுதியே' என்று திருவாய் மலர்ந்தருளினர். ஆயினும், ஆதிமத்தியாந்த ரகிதரான அற்புதக்கடவுள், அயனைச் சிறையினின்றும் விடுவிக்குமாறு தமது திருக் குமாருக்குக் கூறியதால், முருகக்கடவுளும் அவ்வாறே செய்தனர். சிறை நீங்கி வந்த சிரநான்குடையாரும், எந்தைபெருமான் திருவடிகளையும், கந்தவேளின் கழலிணைகளையும் பணிந்து,

'அறியாமையினாலே அபசாரப்பட்டேன் யான். அகன்ற உலகினைப்படைத்தும் என் அகந்தையும் என் அறியாமையும் அகன்று பெருகினவே யன்றி, அவை அகன்றொழிந்தபாடில்லை. அருளே திருவுருவங் கொண்ட அற்புதப் பெரியீர், உருவத்தாற் சிறிய ரென்று, முருகப் பெருமானைக் கருவத்தாற் சிறிது மதியா தொழிந்தது என்மீது பெருங்குற்ற மாகு மென்பதற்கு எள்ளளவும் தடையேயில்லை. 'சிறியார் செய்த சிறுபிழையெல்லாம் பெரியோராயிற் பொறுப் பது கடனே' என்கின்றபடி, பிழைகளைப் பொறுத்து என்னைக் காத்துக் கரையேறும்படி செய்தல், எந்தை யீராகிய நுங்கள் கடனன்றோ? அருண்மடை திறந்தா லென்னக் கருணைச் சுரப்பெடுக்கும் கண்ணிணைகளா லென்னை நன்றாய்க் குளிர நோக்கி யருள்புரிக! கோடி உலகத்தை நான் படைப்பது குயவன் செய்கையைப் போன்றும் கோபுரந்தாங்கிய பதுமையின் நிலைமையைப் போன்றும் இருக்கின்றதேயன்றி வேறன்று. கடவுட் பெரியீர், நுந்தம் திருவடிகளுக்கு உகந்த வந்தனை புரி கின்றேன்' என்று மொழிந்து, விடைகொண்டு தம் முலகு ஏகினர். பின்னர், சந்திரனை வேணியி லணிந்த எந்தை பெருமானார் சுந்தர மைந்தனை நோக்கி, 'குழந் தாய், பிரமதேவனுக்குப் பிரணவத்தின் பொருள் தெரியவில்லை யெனக் கூறினையே! அதன்பொருளை நீ அறிந்திருக்கின்றனையோ சொல்க!' எனக் கேட்ட னர். 'அடியேனுக்குத் தெரியும் அதன் பொருளெல் லாம்' என்று அறுமுகப் பெருமான் திருமொழி பகர வும், 'ஆயின் சொல்க!' என்று ஈசனார் நேசமாய்க் கூறி

னார். என்ன விந்தை! எந்தை பெருமான் இந்த வண்ணம் கூறவும், சிந்தைமகிழ்ந்து, முகம்மலர்ந்து, முருகப் பெருமான், 'நான் அதை நவிலவேண்டு மெனின், சொல்லவேண்டும் முறையினன்றோ சொல்லல் வேண்டும்?' என்று கழறவும், 'அவ்வண்ணமே செய்க!' என்று சிவபெருமானார் கூறித் தம்மைச் சீடன் நிலைமையிலிருத்திக் குமாரக் கடவுளைக் குருவின் நிலைமையிலமர்த்தினார். 'இஃதன்றோ காணரும் காட்சி, பெறலரும் மாட்சி' என்று ஆகாயத்தினின்றும் வானவர்கள் பூமாரி பொழிந்தார்கள். முருகப்பெருமானும் முப்புரமெரித்த கடவுளும், முறையே, குருசீடராக விருந்து, பிரணவோபதேசம் மிகவும் நன்றாய் நிறைவேறினது. 'மகன் தந்தைக் காற்று முதவி யிவன் தந்தை என்னோற்றான் கொல்லென்னுஞ் சொல்' என்பது மானிட உலகத்திற்கே மாண்புவாய்ந்ததா யிருப்பினும், அலகிலா விளையாட்டுடைய அற்புதக் கடவுளர் மாட்டும் அந்தச் சமயம் அது மிகுந்த பொருத்தமாய்க் காணப்பட்டது. மைந்தன் உபதேசத்தை எந்தை பெருமானார் சிந்தைமகிழக் கேட்கவே, அவர் உள்ளம் பூரித்தது; உடலம் புளகித்தது; அஞ்சாது பேசிய குமரனை நெஞ்சாரத் தழுவிக்கொண்டார் சிவபெருமானார்! இவ்வாறு தம்மைக் குருவின் நிலைமையில் வைத்துக்கொண்டு தந்தையைச் சீடன் நிலைமையில் இருத்தி முருகப்பெருமானார் பிரணவோபதேசம் செய்த காரணத்தாலே, அவருக்குச் **சாமிநாதன்** அல்லது **தகப்பன் சாமி** என்கின்ற திருப்பெயரொன்று மிகப் பெருமையாய்க் கிடைத்தது. பிரமதேவனுக்குக் குமாரக்கடவுள் மீண்டும் படைத்தற் றொழிலைத்தந்து

அன்னான் தனதிருப்பிடமேகப் பணித்தனர். சிவபெருமானும் தமது பக்தகணங்களுடன் கைலயங்கிரிக்கு ஏகினர்.

இவையாவும் நிகழ்ந்தானதன் பின், குறுமுனிவர் என்னும் திருப்பெயர் படைத்த அகத்திய முனிவர் முருகப்பெருமானின் திருவடி பணிந்து, அக்கடவுளர் பால் அனேக சாத்திரங்களை உபதேச மூகத்தான் அறிந்து சென்றனர். திருமால்தன் திருப் புதல்விகளும் அழகின் மிக்க பவழக்கொடிகளுமாகிய அமிர்த வல்லி, சுந்தரவல்லி என்னு மிருவரும், முருகப்பெருமானைத் திருமணம்புரியப் பெரிதும் அவாவி நீண்ட காலம் தவமியற்றினர். குமாரக் கடவுளும் அதற்கு மனமிரங்கி, மேற்கூறிய இருவர்களில் மூத்தவராகிய அமிர்தவல்லி யென்பாரைத் தேவேந்திரன் குமரியாக வளரும்படி உத்தரவளித்து, இளையவராகிய சுந்தரி என்பவரைப் பூமண்டலத்தில் சிவமுனிவ ரென்பார் திருக் குமரியாகத் தோன்றி வேடுவர்பால் வளரும்படி கட்டளை யிட்டனர். அவ்வண்ணமே அமிர்தவல்லி யென்பார் தேவேந்திரனிடம் தோன்ற, அவனும் தனது வெள்ளையானையை அழைத்துக் குழந்தையைச் சீரும் சிறப்புமாக வளர்க்கும்படி உத்தரவிட, அந்த யானையும் அமிர்தவல்லியைப் பிரமன் பட்டணமாகிய மனோவதி நகரத்தில் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தது. இதனால் அமிர்தவல்லிக்குத் தெய்வயானை யென்கின்ற பெயர் கிடைத்தது. சுந்தரியாரும் சிவமுனிவர் திருக்குமரியாய்த் தோன்றி, வள்ளிமலையில் வேடுவரிடம் வளர்ந்து வந்தனர்.

## தளமேழு காட்சியும் தாரகன் மாய்ந்தொழிதலும்

தேவர்களுக்கு அசுரர்கள் செய்யும் கொடுமை நாளுக்கு நாள் அதிகப்பட்டுக் கொண்டே வந்தது. எத்தனையோ நாட்களாக ஈசனை வேண்டியும், இன்னும் அவர் மனமிரங்கவில்லையே, பரிகாரம் செய்யவில்லையே என்று தேவர்கள் ஏங்கி ஏங்கித் திகைத்துத் திகைத்து, இன்னு மொருதரமாவது சென்று அரன்பொன்னடி பணிந்து விண்ணப்பித்துக் கொள்ளலாமென உறுதிப் படுத்திக்கொண்டு திருக்கைலையை நண்ணினர். ஆங்குச் சிவபிரானைத் தரிசித்து, அவருடைய திருவடித் தாமரைகளில் வீழ்ந்து, தேவர்கள் தமது குறைகளைக் கூறி முறையிடலாயினர்: 'திரிபுராந் தகனே, தேவர்கள் சகாயனே, ஆலமர நீழலில் அறம் நால்வர்க் குரைத்தவனே, நாகமாலையனே, நீலகண் டனே, எங்கள் குறையைப்போக்க இன்னும் ஏனோ திருவுள்ளம் பற்றவில்லை? தேவர்களாகிய எங்களைப் பாவிகளாகிய அசுரர்கள் வாட்டுகின்றார்கள், வருத்து கின்றார்கள், பதைபதைக்கப் படுத்தாதபாடு படுத்து கின்றார்கள். தேவதேவா, திருவுள்ள மிரங்கல் வேண் டும். சங்கரா, எங்கள் கோரிக்கையை நிறைவேற்

றுதல் வேண்டும்! எங்குப் பார்த்தாலும் அசுரர்கள் பிரபஞ்சமாய்ப் போய்விட்டது! கிளியைவளர்த்துப் பூனைவசம் ஒப்புவிக்கலாமோ? வரிப்புலி துரத்திய மான்போல் மிகத் துயர்பட்டுவந்த எங்களை இப்போதே காத்தருளல் வேண்டும்! அரசனிருக்கப் பட்டணம் கொள்ளைபோமோ என்கின்றபடி, மூவுலகையும் படைத்தளித் தழிக்கும் தேவதேவ னிருக்கும்போது, எந்தக்குறைதான் எங்களுக்கு எப்படி உண்டாகும்? தேவதேவா, தீனரக்ஷகா, கடைக்கண் பார்க்க வேண்டும், திருக்கருணை புரியவேண்டும்!' என்று தேவர்கள் ஈசனை ஏத்தித் துதித்தார்கள். பத்திக்கு வயப்படும் பரமனுதலால் சிவபெருமானார் உடனே மனமிரங்கித் தேவர்களுக்கு அபயமீந்து, முருகப் பிரானைத் தேவசேனாதிபதி யாக்கினார். பதினோர் உருத்திரர்களை ஒன்பது படைக்கலமாகவும், சக்தியை வேலாகவும் " இயற்றி அவற்றைச் சிவபெருமானார் தமது திருக்குமாருக்குத் தந்து, 'அருமருந்தன்ன எனது ஒருபெரும் புதல்வனே, இந்தத் தேவர்கள் துயரை இந்தக்கணமே போக்கவேண்டும் நீ! வேதத் திறம், பஞ்ச பூதத்திறம், வானோர் ஓதிய விஞ்சை நாதத்திறம், மனோவேகத்திறம்—இவை யெல்லாவற்றையும் ஒன்றாய்க் கூட்டி, லக்ஷம் பரிபூட்டிய திருத்தேர்மீதேறி, யானைப்படையிற் சிங்கம் புகுவதுபோன்றும், சிங்கப் படைமீது சரபம் பாய்வதுபோன்றும், அரக்கர் கூட்டத்தில் அற்புதமாய் நீ நுழைந்து, அன்னோர்கள் வாடியோடச் சாடியடித்து, அவர்கள் படையைக் கலைத்து, அவர்கள் மானத்தைக் குலைத்து,

அவர்களை அடியோடே தொலைத்து வெற்றிவாகை
சூடி, வீரவேலை ஏந்தவேண்டும் நீ! ஓதமுடியாத
பெரும் பூதப்படைகள் உன்னைச் சுற்றி எந்நேரமும்
காத்துக்கொண் டிருக்கும்; இலக்கவீரர்கள் உனது
பக்கத்துணையா யிருப்பார்கள்; நவவீரர்கள் எக்கா
லும் உனக்கு நல்ல உதவி புரிந்துகொண் டிருப்பார்
கள். ஆகவே, தூயனே, என் அருமைச் சேயனே,
தேவர்கள் நேசனே,—இப்போதே நீ சென்று இராக்
கதரை ஒழித்துவரக் கடவை!' என்று முருகப்
பிரானை நோக்கி முறுவலோடு கூறினர்.

உடனே முருகப்பெருமானுர் இலக்ஷம் பரி பூட்
டிய தேர்மிசை யேறிப் போருக்கு ஆயத்தமாய்ப் புறப்
பட்டனர். என்றென்றும் அழியாதிருக்க வரங்கள்
பெற்று, மூவுலகத்தையும் தவிடுபொடியாகக் கலக்கி
யழித்துத், தேவருலகத்தைத் தீயினுக் கிரையாக்கித்,
தேவர்களை வாட்டி வருத்தி, மூவர்களையும்முக்கரணம்
போடவிட்டுத், தேவேந்திரன் குமாரனுகியஜயந்தனைச்
சிறையிட்டுக் கோரமான செயல்களைச் செய்யும் சூர
னவன் இனி மாய்ந்தொழிவான் என்று தீரங்
கொண்டு அனைவோரும் அரஹர வென்னும் பெரிய
தொரு கோஷ மிட்டனர். எந்தை பெருமானைச் சுற்றி
வந்த பூதப் படைகளின் விந்தையை என்னவென்று
சொல்லலாம்! செக்கர்வான்* நிறம்போலச் சிவந்த
மணிச் சடையை உடையவர்களாயும், உருண்டு
திரண்டு சுருண்ட குழலை உடையவர்களாயும், உருத்தி
ராக்கமும் பவழமும் கோத்த உன்னதமான மணிமாலை
யை உடையவர்களாயும், நெருப்புப் போன்ற விழி

யையும், இடியைப்போன்ற மொழியையும், வெண்பிறை போன்ற கோடுவாட் பல்லையும், மலை போன்ற தலையையும், அலைபோன்ற மூக்கையும், குகைபோன்ற வாயையும், விபூதியை அணிந்த மேனியையும் உடையவர்களாயும் பார்க்கப் பயங்கரமாய்த் தோன்றிய பூதர்கள் இரண்டாயிரம் வெள்ளம் எண்ணிக்கையுள்ளோர்கள், சங்கநாதம் செய்துகொண்டும் சிங்கநாதம் புரிந்துகொண்டும் சாமிநாதன் பக்கல் காவலாய் வந்தனர். இவர்கள் ஏந்திக்கொண்டு வந்த ஆயுதங்களோ எண்ணிக்கை யில்லாதன. அங்குசங்கள், முசலங்கள், அத்திரங்கள், வேலாயுதங்கள், பரமனருள்பெற்ற பாசுபதங்கள், கொடுமை வாய்ந்த குலிசாயுதங்கள், பாசங்கள், பிண்டிகள், வாளாயுதங்கள், தோமரங்கள், பரிசைகள், நேமிகள், சூலாயுதங்கள், இவைகளையும் இன்னும் பல திறப்பட்ட ஆயுதவகைகளையும், அந்தப் பூத கணங்களும், இலங்க வீரர்களும், மற்றுமுள்ள நவ வீரர்களும் உக்கிரத்தோடு தாங்கியவர்களாய், அண்டமுகடுகள் துண்டம் துண்டமாய் வெடித்துப்போகும்படி, சங்கத்தை முழக்கி ஆர்ப்பரித்துச் செந்தூள் பறக்கும் வண்ணம் நெருங்கி வருவதைச் சண்முகனார் கண்டு அளவுகடந்த பெருமகிழ்வு கொண்டனர்.

இவ்வித திருக்கோலத்தோடு படை யெடுத்துவரும் முருகப் பெருமானார் முதலில் கிரவுஞ்சமலையைக் கண்டனர். அப்போது திரிலோக சஞ்சாரியாகிய நாரத பகவான், அந்த மலையின் தன்மையைப் பற்றிக் கிழ்து கந்தவேளுக்குக் கூறத் தொடங்கினார்:

சண்முகப் பெருமானே, இந்தக் கிரவுஞ்ச மலையைப் பற்றிய விருத்தாந்தத்தைச் சற்றுங் கவனமாய்க் கேட்டருள்க! இந்தப் பாவி ஓர் இராக்கதப்பாவி! ஏறுமாறான குணத்தையும் தாறுமாறான சூழ்ச்சிகளையுமுடையவன் இவன்! இவனிடம் சிக்கிக்கொண்ட இருடியர்களையும் தேவர்களையும், இவன், ஏழாட்டமாட்டிப் போராட்டஞ் செய்ய வல்லவன்! பற்பல வழிகளையும் பற்பல துறைகளையும் பற்பலவிதங்களாகவும் பற்பல சுழல்களாகவும் கட்டி அந்தச் சுற்றுச் சுழற்சியில் இருடியர்கள் மெத்தவும் தவிக்கும்போது, அவர்கள் ஆவியை வாங்கி இவன் 'அனர்த்தப்' படுத்துபவன். அந்தோ! இந்தப் பாவியிடம் அகத்திய முனிவர் ஒருசமயம் எப்படியோ சிக்கிக்கொண்டார்! வழி தெரியாமல் துறைதெரியாமல், மயக்கமுற்றுத் தியக்கமடைந்து மாமுனிவர் தவிக்கின்றார்! பின்னர் குறுமுனிவர், தமது ஞானதிருஷ்டியால், இவையெல்லாம் கிரவுஞ்சப் பாவியின் காதகச் செயல் என்பதை அறிந்து, அவன் இந்த மலையாகும்படி சபித்தனர். இந்த மலைக்குச் சிறிது அப்புறமிருக்கும் மாயமாபுரி என்னும் நகரத்தில், தாரகாசுரன் என்னும் பாதக அரக்கன், கொடுங்கோன்மை செலுத்திக் கடுமை புரிந்து வருகின்றான்! இந்தத் தாரகன் யாவனெனின், இவன் தான் சூரபதுமனுடைய ஒரு தம்பி! இவன் அற்ப சொற்பமானவனல்லன். மும்மூர்த்திகளி லொருவராகிய நாராயண மூர்த்தியோடு ஓயாத போர்புரிந்து ஒரு சிறிதும் சளைக்காமல், அவருடைய உயிரைப் பிடுங்குகின்றவண்ணம் அவருடைய சக்கராயுதத்தைப்

பிடுங்கிக் கழுத்தில் அணியாகத் தரித்துக்கொண்டவன் இவன்! இப்போது இவ்விருவரையும் தப்பாது எமனுலகத்திற்குத் தேவரீர் செலுத்திவிடுவீர்களாயின், முக்காலே மூன்று வீசம் வேலையும் முடிந்துவிட்டதென்றே சொல்லலாம்! ஆதலின், தேவதேவா, திருவருள் புரிக! தெவிட்டாத அமிர்தமே, தேவரைக் காத்தருள்க! ஆவிக்கொரு துணையே, அன்பு. சுரந்தருள்க! ஒருபற்றுமின்றி உன்னையே நாடினம் நாம்: ஓங்காரப் பொருளானோய், ஏங்கவிடாது எம்தமைப் புரந்தருள்க! சரவணபவனே போற்றி, சங்கரன் மகனே போற்றி, அன்புருவானுப் போற்றி, அருண் மறைமுடிவே போற்றி! திக்குத்திசை தெரியாமல் தேவர்களும் இருடியர்களும் தத்தளித் திருக்கின்றார்கள்! தாய்முகம்கண்ட சேயைப் போன்றும், கடலின் நடுவில் பாய்மரம் கண்ட பறவையைப் போன்றும், தேர்ந்த வைத்தியனைக் கண்ட தீராத பிணியாளனைப் போன்றும், பெருஞ் செல்வத்தைக் கண்ட பெரும் தரித்திரனைப் போன்றும், பெருமானே, அருளாளா, நின் முகத்தைக் கண்டே இன்னும் நாங்கள் உயிர் வாழ்ந்துகொண் டிருக்கின்றோம், ஏழைகளைக் காக்க வேண்டுமென்றே எழிலார்ந்த கங்கணம் பூணடிருக்கும் எந்தையே! இப்போதே இந்தத் தாரகனை எப்படியாவது தொலைத்தருளல் வேண்டும். அப்புறம் சூரபதுமனை வெல்வது அரிதான காரியமன்று. ஆதலின், பெருமானே, திருவருள் புரியவேண்டும்!' என்று நாரதபகவான் சண்முகப் பெருமானைச் சாலவும் வேண்டிக் கொண்டார். அதன்மீது அறுமுகப் பெரு

[ளமெழு காட்சியும் தாரகன் மாய்த்தொழிதலும்]

மான் வீரவாகுதேவர் முதலில் போருக்குப் புறப்பட வேண்டுமென்று திருவுள்ளம்பற்ற, வீரவாகுதேவரும் விச்சுவ கருமனால் நிருமிக்கப்பட்ட திருத்தேர்மீதேறி யுத்தத்திற்குப் புறப்பட்டனர்.

கிரவுஞ்சகிரிக்கு அப்பாலிருந்த மாயாபுரிப் பட்டணத்தைப் பூதப்படைகள் சுற்றிவளைத்துக்கொள்ள, வீரவாகுதேவர் ஆரவாரம்புரிந்து அரக்கர் கூட்டத்தை நசுக்கத் தொடங்கினர். இதைக் கேட்டதும், தாரகாசுரனுக்குக் கோபச் செந்தீ கொழுந்துவிட்டெரிய வாரம்பித்தது! கோப நகையுடன் ஆவென வாய்திறந்து, பல்லைக் காட்டி நறநறவெனக் கடித்துக் கண்களினின்றும் தீப்பொறிகளைச் சிந்திக் கோர அரக்கனை தாரகாசுரன், ஆயிரம் சிங்கம் பூண்ட அழகான இரதமேறி, வீரவாகு தேவர்முன் தீரமாய்த் தோன்றினன். உடனே சங்கநாதம் சிங்கநாதம் செய்து, தாரகாசுரன் வீரவாகுதேவரை நோக்கி, "ஏடா, வீரவாகு மத்தயானையின்முன் மசகம் போல்வாராகிய நீங்கள் யாது செய்தல் கூடும்? அஞ்சா நெஞ்சத்துடனும், அரண்மனையை நெருங்கி ஆரவாரம் புரிகின்றீர்களே! உங்களைப்போல் ஊரெல்லாம் திரண்டு உருண்டு புரண்டுவரினும், ஒரே விநாடியில் ஊதி விடுவேன் யான்! அண்டாண்ட சராசரங்களையும் அதோகதிப் படுத்தவல்ல என்னை, மாயன் திகிரியை மார்பில் அணியாக அணிந்து கொண்ட என்னை, மாயத்தாலும் உபாயத்தாலும் மந்திரத்தாலும் தந்திரத்தாலும் தேவர்களையும் மூவர்களையும் திகைக்கச் செய்து விழிக்கச் செய்யும் என்னை, ஆயுதவகைகளை ஆயிரமாயிரமாய்

வருத்து அண்டர்களையும் மிண்டர்களையும் கண்டித்துத் தண்டிக்கும் என்னை, ஒருபொருட்படுத்தாது ஒரு சிறிதும் மதியாது, செருக்கென்னும் நஞ்சு தலைக்கேறப் பெற்று, அமருக்கென்று நீங்கள் வந்தது மிக நன்றாயிருக்கின்றதடா! இப்போதே நீங்கள் தப்பி ஓடினால் ஓடுங்கள்! இல்லையேல், உங்கட்குத் தொல்லையே வந்து நேரும். கையில் வைத்திருக்கும் கதாயுதம் தன்னால், உங்களைக் காற்றிற் பஞ்செனை ஓட்ட வல்லேன் யான்! அத்திர சத்திரங்களினால் உங்களைக் குத்திக் கொல்ல வல்லேன் யான்! மாயப் போரினால் உங்களை மருட்ட வல்லேன் யான்! இது மாத்திரமா! நினைத்த மாத்திரத்தில் உங்களை நீறாக்கிவிடவே வல்லேன் யான்! ஆதலால், சிறுமையல் பேச்சை மிகப் பெருமையாய்க் கேட்டுச் சீரழிந்து நீ பேரழிந்து போகாதே! தெரியுமா, வீரவாகுவே, தெரியுமா?' என்று கோபப் பேச்சைக் கொடுமையாய்ப் பேசினன். இதனைக் கேட்ட வீரவாகு தேவருக்கு எரியுந் தணலில் விறகிடுவதுபோன்றாயிற்று! மூவுலகையும் அவர் தீயினுக்கு இரையாக்கி விடுவாரோ என்று, கண்டோரெல்லோரும் நெஞ்சம் துணுக்குறும்படி, தாரகாசுரனை நோக்கி, வீரவாகு தேவர், காரப் பேச்சைக் கடுமையாய்ப் பேசினார்: 'ஏடா! தாரகாசுரா! உடும்புப் பிடியாய் இடும்புகள் செய்து, கர்தகத்தொழிலிலேயே காலங் கழிக்கும் கபோதியான விரோதி அரக்கனே! எந்தை பெருமானருள் எனக்கு நேர்ந்திருக்கின்ற போது, உன்தன் மிரட்டினாலா சிந்தை நான் கலங்கப்போகின்றேன்! ஒருபோதுமில்லை, ஒருபோது

யில்லை! உன்தனாலான தந்திரவித்தைகள், மந்திரவித்தைகள், மாய வித்தைகள், ஜால வித்தைகள் எல்லாவற்றையும் நீ எப்படியெப்படியோ செய்தபோதிலும், ஒருபோதும் நான் உளங்கலங்க மாட்டேன், ஒருபோதும் நான் மனம் மயங்க மாட்டேன்! அறத்தின் எல்லையைத் தாண்டி, மறத்திற்கே உரிமைபூண்டு, எப்போது நீ தப்பானவழியில் நடக்க ஏற்பட்டனையோ, எப்போது நீ, இருடியர்கள் மனம் நோகவும், தேவர்கள் வருந்தி வருந்திச் சாகவும், மூவர்கள் ஒன்றும் செய்யமுடியாது விழித்தேகவும், தருமமென்பதே தலைசாய்ந்துபோகவும், தீமைபுரியவே தீரநெஞ்சுடன் தலைப்பட்டனையோ, எப்போது நீ நல்லவர்களுக்குத் துன்பஞ் செய்வதும் பொல்லாதவர்களுக்கு இன்பம் விளைப்பதுமே உன் அரசாட்சியின் நோக்கமாய் உள்ளத்தில் பதித்து நிற்கத் தொடங்கினையோ, அப்போதே உன் கழுத்திற்கு ஆபத்து நேர்ந்து விட்டதென் றெண்ண வேண்டும், அந்தரத்திற் கத்தி யொன்று உன்தன் கழுத்திற்கு நேராய்த் தொங்கிக்கொண் டிருக்கின்றதென் றுணரவேண்டும்! அதைவிட்டு நீ அகந்தை பூண்டு, ஆரவாரஞ்செய்து கோலாகலம் விளைப்பையானால், உன்னையும் உன்னைச் சார்ந்த உற்றார் உறவினரையும், காற்றிற் பஞ்செனத் தூற்றிவிட, ஐயனிருக்கின்றான் கையில் வேல் தாங்கிக்கொண்டு! அவன் அருளால் உரம்பெற்று, அவன் பணியைச் சிரமேற்கொண்டு, உன்னை நாசப்படுத்தவே இங்கு நான் வந்திருக்கின்றேன்! உன் கொட்டமும் உன் சட்டமும் உன் திட்டமும் உன் அத்திர சத்திர மந்திர தந்திர வித்தைகளும்

சூரியனைக் கண்ட பனிபோலே ஒரு விநாடியில் ஒழிந்து போக அடிக்கின்றேன் பார்! ஒரே விநாடியில், உன்னையும் உன் சேனைகளையும் பஞ்சுபஞ்சாய்ப் பறக்க அடிக்கின்றேன் பார்!' என்று வீரவாகு தேவர் தாரகாசுரனை நோக்கிக் கோபப் பேச்சைக் கொடுந்தணலாய் வாரிக்கொட்டினதும், இருவருக்கும் மூண்டு கொண்டது சண்டை, தொடங்கிவிட்டது பெரும் போர்! கணக்கற்ற பூதப்படைகளை, அரக்கர்கள் மையப் புடைத்து நமனுலகம் சேர்த்தார்கள். சொல்ல முடியாத எண்ணிக்கை யுடைய அரக்கர் படைகளைப் பூதகணங்கள் மிதித்துத் துவைத்துத் தரையுடன் தரையாய்த் தேய்த்து விட்டார்கள். வீரவாகு தேவருக்கும் தாரகாசுரனுக்கும் நெடுநேரம் பெரும்போர் விளைந்தது; இறுதியில் தாரகாசுரன் ஏதொன்றும் செய்ய வகை அறியாது, இளைத்துச் சளைத்துக் களைத்துப்போய் மீண்டும் ஒருவாறு தைரியமடைந்து, தந்திரமாய் வீரவாகு தேவரைப் பக்குவமாய் வெல்லு வதே வழியென்று திடங்கொண்டு, அஞ்சன மலை போற் கர்ச்சனையிட்டெழுந்து, 'ஆறுமுகனை வெல்கின்றேன் இனிப் பார்க்கலா'மென்று, விண்ணை நோக்கிப் போய் வேகமாய் மறைந்தனன். அவனைத் தொடர்ந்து சென்ற வீரவாகு தேவரும் வீரர்களும் பூதர்களும் கிரவுஞ்சத்திற் சிக்கி வலையில் அகப்பட்ட பறவைகள்போல் எப்பக்கம் போகவும் திக்குத்திசை தெரியாமல் ஏங்கித் தவித்துக்கொண் டிருந்தார்கள்.

இந்தச் சங்கதிகளை யெல்லாம் இறைவனாகிய முருகப்பிரானுக்கு நாரதர்கூற, அப்பெருமானார் கனி

மிகச் சீறிமுனிந்து, தமது படைகளுடன் சென்று தாரகனுடைய படைகளைத் தாக்கிக் கலக்கினர். இதைக் கண்ட தாரகாசுரனுக்கு உண்டான கோபத் திற்கு அளவில்லை. மேககர்ச்சனை யிடுவதுபோல அப் பாதகன் ஆர்த்தெழுந்து, குமரக்கடவுளை எதிர்நோக்கி நின்று, 'ஏடா! சிறுபையலே! இளங்கன்று பய மறியாது என்பதுபோன்று, முன்பின் நோக்காமலும், என் வன்மையும் தன்மையும் இத்தகையன என்பதை ஆய்ந்துணர்ந்து பாராமலும், அறியாப்பிள்ளையாகிய நீ அவசரப்பட்டு வந்தாய். என்னைத் தாக்கிப் பொருவதற்கு நின்னாலே யாகுமா? நீ ஒரு சிறு குழந்தை. இந்தப் போருக்கும் உனக்கும் எவ்வளவு தூரம் இருக்கின்றது? அண்டத்தைக் கலக்குவேன் நான், ஆகாயத்தைப் புரட்டுவேன் யான்! கோரமான என்னுடைய ஆரவாரத்தாலே, சப்த சாகரங்களும் சாக்கடைச் சேறுபோல வற்றிப் போய்விடும், அஷ்ட திக்கஜங்களும் ஆதிசேடன் முதலிய நாகங்களும் அலறிக்கொண்டு பிராணனை அப்பொழுதே விட்டு விடும்! திருமாலின் திகிரியைப் பிடுங்கிக், கழுத்தில் அணியாகப் பொருத்திக்கொண்டிருக்கின்றேன் பார்! என்னை எதிர்க்க உன்னாலே யாகுமா, அல்லது உன் னைப் பெற்ற தந்தையால்தான் ஆகுமா? ஆதலால் இளம் பிள்ளையாகிய குழந்தை வடிவேலா! உன் தந்தை மடியிற் போய்ச் சுந்தரமாய்ப் படுத்துக் கொள். அதைவிட்டு இங்கு வந்து ஆபத்தில் ஏன் சிக்கிக்கொள்ளுகின்றாய்? ஆகவே, முருகா, அகன்று விடு இக்கணமே! இல்லையேல் உனக்குத் தொல்லையே

வந்துநேரும். மீண்டனைப்போல என்னிடம் சண்டைக்கு நீ வருவையாயின், திடமுள்ள உன் படைகளையெல்லாம், காற்றிற் பஞ்செனத் தூற்றி யடிப்பேன் நான். இணையே யில்லாத என் கணைகளின் கூட்டங்களாலும், அவைகளின் ஓட்டங்களாலும், உன் சேனைவீரரின் தலைகளைப் பனங்காய்கள்போலப் பாரினில் விழச்செய்து, குருதி வெள்ளத்தைப் பெருநதிபோலப் பாயவிடுத்து, உன்னையுங் கொன்று உன்னைச் சேர்ந்தோர்களையும் மாளவடித்துப் பருந்து முதலியவற்றிற்குப் பெரு விருந்தளிப்பேன். என்ன சொல்லுகின்றாய், குமரா? யாது செய்யப்போகின்றாய்?' என்று பெருமழை பெய்ததுபோலப் பேசி முடித்தான்.

இதனைக் கேட்டதும் எந்தல் பெருமானார், அரக்கனுடைய அறியாமைக்காகப் பெரிதும் இரங்கினபோதிலும், "அன்னவனு லுண்டாகும் கொடுமைகட்காகச் சின மிகக் கொண்டு, தாரகாசுரனை நோக்கி, 'ஏடா! துன்மார்க்கப் பதரே, துஷ்ட சிகாமணியே! அறநெறி விலகி நீ மறநெறி புகுந்து ஏழுலகத்தையும் பாழ்ப்படும்படி வாட்டி வருத்துகின்றனை. உலகத்திற்கெல்லாம் ஊறுவிளைக்கும் உன்னையும் உன் உடன்பிறந்தார்களையும் கூற்றுவ னுலகத்திற்கு மாற்றிவிடக் கருதுகின்றேன். என்னை ஒரு குழந்தை யென்று எளனஞ் செய்கின்றாய் நீ. உன்னுடைய அகந்தையைப் போக்கி, உன்னுடைய அறியாமையை யொழித்து, உங்கள் ஆரவாரத்தை யெல்லாம் வேரறக் களைறி உன் சேனைகளையும் உன்னையும் கண்டதுண்ட

மாக வெட்டி யெறிகின்றேன்பார்! நீதியின் எல்லையைக் கடந்து, நியமத்தின் விதிகளைத்தாண்டி, இரக்க மென்பதையும் உருக்க மென்பதையும் எள்ளத்தனையும் இதயத்திற் கொள்ளாமல், நல்லவர்களுக்கு நாச மிழைத்தும், இருடியர்களின் இதயத்தை வாட்டியும், தவசியர்கள் தலைக்குத் தாம்பூலம் பிடித்தும், தேவர்களை வருத்தியும், மூவர்களைத் துரத்தியும், பாவமே செய்துவரும் பாதகனாகிய உன்னைத் தொலைக்கவே, தரும வேலினைத் தடக்கையில் ஏந்தினேன்; வெற்றி வேலை வீரமாய்த் தாங்கினேன்; பாவமே திரண்டு ஏமனாய்த் தோன்றிய உன்னைக் கொல்லவே, பரமனாரிடத்தில் தரும ரூபமாய்த் தோன்றினேன். என் வேலாயுதமே உனக்குக் காலாயுதமாகப் போகின்றது பார்! என்னை நீயா மருட்டுவதும் வெருட்டுவதும்? தருமவழியில் இப்போதாவது தலையிடப் போகின்றனையா, அல்லது "என் கருமம் இதுதான்" என்று காலமாகப் போகின்றனையா?" என்று நற்புத்திகளை நானாவிதமாய்க் கூறினார். அவ் வார்த்தைகளைக் கேட்ட தாரகாசுரனுக்கோ அவை யெல்லாம் நாராசத்தைக் காய்ச்சி நடுச்செவியில் ஊன்றுவதுபோன் றிருந்தன.

குமரப் பெருமான் கூறிய சொற்களனைத்தும், 'கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்றன்றே' என்கின்ற விண்ணம் தாரகனிடம் யாதும் பயன்படா தொழிந்தன. உடனே, அக் கொடியோன், வெஞ்சினம் கூறி வீராவேசங்கொண்டு, சங்கரன் மகனொடு சமரிடத் தொடங்கினான். இருவருக்கும் சமர் கொடுமையாய்

மூண்டு கொண்டது! நெடுநேரம் இருவரும் போ ராடின பின்னர், தாரகாசுரன் முருகனுடன் எதிர் நின்று போர்செய்ய முடியவில்லை. மாயப் போரினால் அவன் மாசாலஞ் செய்யக் கருதிக் கிரவுஞ்சமலையி னுள் புகுந்து நின்று, மேகங்கள் இடிப்பது போன் றும், நாகங்கள் சீறுவது போன்றும், கடல்கள் புரண்டு உலகின்மேல் வருவதுபோன்றும், வடவா முகாக்கினியே படையெடுத்து வருவதுபோன்றும், பற்பல மாயைகளைப் பலபல விதமாய்ப் புரிந்து, பல பல தோற்றங்களைப் பலபல விதமாய்த் தாங்கிச் சமர் முகத்தில் நின்று சமரிடத் தொடங்கினான். இவற்றை யெல்லாம் ஒரு கணத்திற் போக்கத் திருவுளங் கொண்டு, முருகப் பெருமானார் தாரகாசுரன்மீது தன் வேலாயுதத்தை விட்டனர். அவ் வேலாயுத மானது ஆழாழி முழுவதும் ஏழேழு புவனமும் ஊழிக்கனலென ஓடி எதிர்த்து, மாயை அத்தனையும் மாயவடித்துக் கிரவுஞ்ச மலையைப் பல துண்டுக ளாய்ப் பிளந்து, யானைமுகங் கொண்ட தாரகாசுர னுடைய துதிக்கையை அறுத்து அவனுடைய கொம் புகளை முறித்து, அவன் தலையைக் கொய்து வீழ்த்தி, மறுபடியும் வேலவனிடம் வெற்றியோடு வந்து சேர்ந் தது முருகப் பிரான் அருளின் தன்மையையும், வெற்றிவேலின் வீர வன்மையையுங் கண்டு மகிழ்ந்து தேவர்களெல்லோரும் பூமாரி பொழிந்தனர்!

தாரகாசுரன் இறந்துபட்டதைக் கேட்டு அவன் மனைவி சவுரி யென்பாள், மிகவும் புலம்பி அழுதனள். அவள் கணவனுடைய வன்மையும் வரங்களும் அளவு

கடந்து எண்ணிறந்தனவாக இருந்தபோதிலும், அவன் தகாத வழி நடந்ததே அவனுக்கு முடிவுகாலமாய்விட்டது என்பதை அவள் சொல்லிச் சொல்லி வருந்தினள். திருமாலின் திருச் சக்கரத்தைப் பிடுங்கிக் கழுத்தி லணியாகத் தரித்துக் கொண்டதாய்ப் பெருமைப்படுத்தி அவன் என்னென்னவோ பேசிக்கொண்ட போதிலும், அஃதே அவனுக்குக் கழுத்தறுக்கும் கத்தியாய்விட்டதென்பதாய் வாய்விட்டுக் கூறி வாட்டமுற்றுக் கதறினள். அடாது செய்தவர்கள் படாதுபடுவரென்பதுபோல, அக்கிரமம் செய்த தனது கணவனுடைய விக்கிரமம் முற்றும் பாழாய்விட்டது என்பதை முடிவாகக் கூறிச் சவுரி பலவாறாக அழுது போயினள். இஃதிவ்வாறாகச் சூரபதுமனும் தனது தம்பி இறந்த செய்தி கேட்டு, ஓடிவந்து ஓலிவனைப் புலம்பினன். கோபக் கனல்மீது குடம்குடமாய் நெய் பெய்ததுபோல, பெருமானார்மீது கடுஞ் சினங்கொண்டு, அவரை அக்கணமே முடித்து விடுவதாக வீரம் பேசி ஆரவாரம் செய்து தீரனாகிய சூரனும் துடித்துக் குதித்தான். அதனைக் கண்ட அவனது மந்திரிமார்கள், அவ்வாறு அவன் ஆத்திரப்படுவது சரியன்று என்றும், தனது வலியும், துணை வலியும், மாற்றான் வலியும் நன்கு தெரிந்துகொண்ட பின்னரே யாதொன்றையும் செய்யத் துணிதல் நன்றாகுமென்றும் பலவாறாக நன்மதி கூறவே, அவன் ஆத்திரம் ஒருவாறு அடங்கிற்று. தேவர்கள் பூமாரி பொழியவும், தும்புரு நாரதர் துதித்துப் பாடவும், வீரமுரசம் வெற்றிமுழக்கஞ் செய்யவும், பூதகணங்கள் புடை சூழ்ந்து வரவும், கந்தவேளும் அந்த இடம் விட்டுப் பெயர்ந்தனர்.

## மாபாவிகள் வரலாறும் மார்க்கண்டர் சரிதமும்.

குமரக் கடவுள், சேய்ஞலூர், திருவிடை மருதூர் முதலிய சிவதலங்களைத் தரிசனஞ் செய்துகொண்டு பின்னர் மதுரைமா நகரை யடைந்து சுந்தரேஸ்வரரைப் போற்றி வணங்கி ஆங்கு நின்றும் புறப்பட்டு அருகிலிருந்த பாலை நிலத்தைத் திருத்தி அதனைத் திருப்பரங்கிரித் தலமாகச் செய்து, பராசர முனிவன் புதல்வர்களுக்குத் திருவருள் புரிந்து, இந்திரன் முதலான தேவர்களுடனும் சென்று, கடற் கரையில் விளங்கும் செந்தின்மா நகரடைந்து அடியார்க்குக் காட்சி தந்துகொண் டிருந்தனர். அப்போது ஒருநாள் முருகப் பெருமானார் தேவேந்திரனை நோக்கி, அசுரர்கள் பலர் இவ்வுலகில் எவ்வாறு தோன்றினர்க ளென்னும் விவரங்களைத் தெரிவிக்குமாறு கேட்கப் பொன்னாட்டிற் கிறைவன் தனது குலகுருவாகிய பிரகஸ்பதி பகவானை வினவினால் தெரியுமெனப் பகர்ந்தனன். அதன்மீது ஐயன் பிரகஸ்பதியை நோக்கி, அசுரர்கள் வரலாற்றை விவரித்துக் கூறும்படி கட்டளையிட, அவரும் அதனைக் கூறலுற்றனர். அது பின் வருமாறு:—

தக்கனுடைய யாகத்திலே, வாய்மதம் கொண்டு நிந்தித்ததன் காரணமாக, நந்திபகவானிட்ட சாபத்தினால் தேவர்களை அலைத்துக் குலைத்த விருத்தச் சுரசை என்னும் பெண் தோன்றி, அனைவோரையும் மயக்கம் செய்யும் அழகிய நல் வடிவம் பெற்று அசுர குருவாகிய சுக்கிரனிடம், இந்திர ஜாலம் மஹேந்திரஜாலங்களைக் கற்றுக்கொண்டு காசிபர் தவம் செய்யும் ஆச்சிரமம் நண்ணினள். அவளுடைய சுந்தர வடிவத்தைக் கண்டு அவ்விருடியும் சிந்தைமயங்கி, அவளைத் தனது மனைவியாயேற்க, அவளிடம் முதலில் சூரபதுமனும் அனேக வெள்ளம் எண்ணிக்கைக் கொண்ட அசுரர்களும் உதித்தனர். பின்னர் ஆயிரஞ் சிரங்களோடும் இரண்டாயிரம் கரங்களோடும் சிங்கமாமுகச் சூரனும் பல வெள்ளக் கணக்கான அசுரர்களும் பிறந்தனர். அதற்குப் பிறகு, யானைமுகத்தோடும் நான்கு கொம்புகளோடும் தாரகாசுரனும், அனேக வெள்ளம் அசுரர்களும் ஜனித்தனர். பின்னர் அஜமுகி என்கின்ற அகோரப்பெண் ணொருத்தியும், அனேக ஆயிரவெள்ளம் அரக்கர்களும் தோன்றினர். இவ்வாறு பூவுலகத்தில் அதருமமெல்லாம் திரண்டு வந்ததுபோலத் தோன்றிய அரக்கர்களைப் பார்த்து அவர்கள் அன்னையாகிய சுரசை என்பவள் 'நீவி ரெல்லீரும் நுமது தந்தையாகிய காசிபரைப் பணிமின்' எனச் சொற்றனள். அவ்வாறே அவர்களும் தமது தந்தையாகிய காசிபரைப் பணிந்து நிற்க, அவரும் அன்னோர்களுக்கு ஆசிகூறி, 'நீங்கள் யாவரும், எக்காலும் நல்வழியி லுறைந்து சிவ பெருமானை

நோக்கித் தவஞ்செய்து பூசனை புரிவீர்களாயின், நுமக்கெல்லாம் நற்கதியும் மிக்க புகழும் கிடைக்கும். ஆதலின் நீவி ரவ்வாறே செய்தல் வேண்டும். மாநிலந் தன்னில் இதற்கெல்லாம் மார்க்கண்டர் சரிதமே சான்றாகும்' என மொழிந்து, அம் மார்க்கண்டர் சரிதையை விவரமாகச் சொல்லுகின்றேன் கேளுங் கள் என்று சொல்லலுற்றனர்.

கடக நகரில் திடமான தவம் புரிந்து கொண் டிருந்த குச்சக முனிவரென்பவர் ஒருவர் இருந்தனர். குச்சக முனிவருக்குக் கவுச்சிகனெனும் ஒரு புதல்வன் பிறந்தனன். சிறிய உருவும் பெரிய நிலையும் படைத்த கவுச்சிக ரென்பார், தாம் பிறந்த நாள் தொடங்கி ஊணுறக்கத்தையும் மதியாதவராய், அரனையே நோக் கிப் பெருந்தவம் புரிந்துகொண் டிருந்தனர். இந்தக் காணருங் காட்சியையும் பெறலரும் மாட்சியையுங் கண்டு, மாயப்பிராணுகிய மாதவப்பிரான் திருவுள முவந்து, அக்குழந்தை புரிந்துகொண்டிருந்த தவத் தின் அழகைக் கண்டு வியந்து, 'குழந்தாய்! அரனை நோக்கி நீ தவம் புரியும் அழகைக் கண்டு மனமிக மகிழ்ந்தோம். மிருகண்டுயெனென்னும் திருப்பெய ரோடு மேதினியில் நீ விளங்கக்கடவை. கரியுரி போர்த்த கருணாகரன், அஞ்சத்தக்க நஞ்சினை வாரி நெஞ்சு நிறையப் பூண்ட நீலகண்டன், கழலை விளக்கச் சுடலையிலாடி, அன்பர் மனத்தகத்தில் ஆனந்த நடமிடுவோன், கங்கையும் திங்களும் தங்க மா மௌலியிற் சூடி இங்கிதம் விளக்கும் ஈசனெம்

பெருமான், உனக்குத் திருவருள் உண்மையாய்ப் புரிவர்!' என்று வரத்தைக் கொடுத்து வானத்தே மறைந்தனன். இந் நிகழ்ச்சியை மிருகண்டுயோர் தமது தந்தையாராகிய குச்சகருக்குத் தெரிவித்தனர். அவரும் மிக்க களிப்படைந்து, தமது புதல்வருக்குத் திருமணமுடித்தல் தக்கதொரு கடமையாகு மென நினைத்துத் தமது கருத்தைத் தன் குமாரனுக்குப் புலப்படுத்தினர். இதைக் கேட்டதும் மவுச்சிகருக்கு மன வருத்த முண்டாயது. உலக சுகங்களை நீக்கி உத்தமன் திருப்பாதங்களையே சித்தத்தில் பொருத்த நினைத்தத் தமக்கு இகசுகமும் இல்லற வாழ்க்கையும் ஏற்றுக்கு எனச் சிந்தித்தவராய்க் கவுச்சிகர் தமது தந்தை சொற்படி நடக்கச் சம்மதித்திலர். இதனால் தந்தையார் மைந்தனுரைக் கடியும்படி நேரிட்டது. ஆகவே, குச்சகர் தமது புத்திரரை நோக்கி, 'இல்லற மல்லது நல்லற மன்று' என்றும், தவமியற்றுதற்கும் இகவாழ்க்கையே சுகமாகு மென்றும் கூறி அவர், திருமணம் செய்துகொள்ளுதலே சால்புடைத்தாகு மென வற்புறுத்தினர். இதைக் கேட்டதும் கவுச்சிகருக்கு ஒன்றுந் தோன்றவில்லை. தந்தையார் வார்த்தையை மறுத்தல் மிகுந்த பாவம் தருவதாகு மெனக் கருதி மிருககண்டுயோர் ஒருவாறு மனமிசைந்து, தமது தந்தையை நோக்கி, 'எம்மைப் பயந்த ஏந்தலே கேட்டருள்க! நுங்கள் கட்டளையை மறுத்தல் கொடும் பாவமாகு மெனக் கருதுகின்றேன். ஆயினும் உலகத்தில் மிகக் கொடிய பெண்களிருக்கின்றார்கள். அத்தகையினரை வீட்டிற் கொண்டுவந்து வைத்

திருத்தலக் காட்டினும் வேறு நெருப்பு வேண்டுவதே யில்லை. அவ்வாறில்லாது உத்தமப் பெண்ணை விவாகம் செய்வித்தால், தமது கட்டளைப்படியே நடக்கத் தமியேன் காத்திருக்கின்றேன்' என்று மிகப் பணிவோடு புகன்றனர்.

அதன்மீது குச்சகர் தீர்க்காலோசனை புரிந்து, அநாமய வனத்தில் வதியும் உசத்திய முனிவரன் பெண்ணைத் தம் புத்திரனுக்கு மணம் புரிவித்தலே விரும்பத்தக்கதாகு மென்னும் முடிவிக்கு வந்தனர். ஆகவே, குச்சகர் உடனே புறப்பட்டு அநாமய வனம் சேர்ந்து உசத்திய முனிவரைக் கண்டதும், அவரும் அருங்கலை பயின்ற பெருந்தவ முனிவருடைய பொன்னடி பணிந்து போற்றித் துதித்து, அவர் வருகையின் காரணத்தை வினவினர். குச்சகர் தமது செல்வப் புதல்வராகிய மிருககண்டேயருக்கு உசத்தியருடைய தவப் பெரும் புதல்வியாகிய விருத்தை யென்னும் மங்கையைத் திருமணம் முடிப்பான் கருதியே ஆங்குத் தாம் போந்ததாகத் தெரிவிக்க, உசத்தியரும் மிகக் களிப்புடன் அதற்குச் சம்மதித்தனர்.

இஃதிங்ஙனமிருப்ப, அருமைபெருமை வாய்ந்த விருத்தை யென்னும் பெண், ஒருநாள் பகற்போது நீர் திரட்டி வரத் தனது தோழிகளுடன் வனத்திற் சிறிது தூரம் சென்று, நீராடி விளையாடிப் பூச்சூடி, ஐயன் புகழ்பாடி, அவன் திறல் கொண்டாடித் திரும்பிவரும்போது, எதிரே மிகப் பருத்த யானையொன்று, அதிக மதத்துடன் ஓடிவருவது கண்டு,

அளவுகடந்த திகில் கொண்டு, மெய்ம்மறந்து ஓடும் போது, அக் கன்னியரசி தவறிக் கிணற்றில் வீழ்ந்து உயிர் துறந்தனள். இதனைக் கேட்ட உசத்தியரும் அவர் தம் மனைவியாரும், மிகத் துயருழந்து தளர்ந்து வெம்பி வெய்துயிர்த்து, 'ஐயையோ! குழந்தையே, அருமந்தச் செல்வமே, ஆராவமுதமே, கல்விக் களஞ்சியமே, கற்பினுக் குறைவிடமே! உன்னை இழக்க என்ன பாவம் செய்தோம் யாம். மணக் கோலத்துடன் உன்னைக் காணவிருந்த எமக்குப் பிணக்கோலத்துடன் பேரருள் புரிந்துவிட்டனையே! ஐயகோ! கொடிது கொடிது! அந்தக்கோ! என்ன செய்வோம்!' என்று புலம்பிப் புலம்பிக் கலங்கி அழுதுகொண் டிருந்தனர். குச்சக முனிவரும் மிக்க மனவருத்தமடைந்து, 'இஃதென்னை! நாம் நமது புத்திரனுக்கு இவளை விவாகம் செய்விப்பதாகச் சொல்லிவிட்டோமே! இனி நாம் என்ன செய்வோம்! எவ்வாறுய்வோம். இனி எப்படியாயினும் ஈசனைத் துதித்து, இவளுக்கு உயிர் கொடுத்துத் திருமணம் செய்விப்பதே தகுதி' என மனவுறுதிப் படுததிக் கொண்டு தவஞ் செய்யச் சென்றனர். சிவபிரானை நோக்கி, இவர் தவம் புரிந்துகொண்டிருந்த காலை, அந்த யானையே விரைந்தோடி வந்து, இவரைத் தூக்கி முதுகில் போட்டுக்கொண்டு, வாயுவேக மனோவேகத்துடன் காடு முழுவதும் ஓடி, மண்ணை வாரி யிறைத்தும் மரங்களைப் பிடுங்கி யெறிந்து எதிர்ப்பட்டவைகளை மிதித்தும் துவைத்தும் அனைத்தையும் தவிடுபொடி யாக்கிக்கொண்டு வந்தது. குச்சக முனி

மிக்க திகிலடைந்து, தமது ஞான திருஷ்டியால் இதன் காரணத்தை ஆராயும்போது, அந்த யானையினுடைய பூர்வோத்தரம் அவருக்கு நன்றாகத் தெரிய வந்தது. அதனை இங்கு நாம் மிகச் சுருக்கமாய்க் கூறுவோம்.

கலிங்கிலரிபுர மென்னும் பட்டணத்தில் மிகச் செல்வ வந்தனான தேவதத்தனென்பான் ஒரு வணிகனிருந்தான். அவன் பெரிய சிவபக்தனா யிருந்ததோடும் சத்திரங்களும் சாலைகளும் அமைத்துக் கோயில்களும் குளங்களும் நிருமித்தான். அவனுக்குத் தருமதத்தனென்னும் ஒரு புத்திரன் உண்டு. அப்பிள்ளை சிறுவயதாயிருக்கும்போதே தாய் தந்தையர் உயிர்துறந்தனர். அதனால் அச் சிறுபிள்ளை மிகத்துயரடைந் திருக்கும்போதே, மோசம் செய்ய வெண்ணி வேஷதாரியாய் ஒருவன் வந்து சேர்ந்தான். அவன் தாடியும் விபூதியும் மணியும் மாலையும் சடையும் நடையும் வேஷமும் கோஷமும் அறியாப்பிள்ளையை அரை விநாடியில் ஏமாற்றிவிட்டனன். நம்பினான் சிறுவன், வணங்கினான் வேடச்சாமியாரை! வேடச்சாமியாருக்கு அவன் சோடசோபசாரஞ் செய்து, என்ன வேண்டுமென்று ஏற்றிப் போற்றிக் கேட்டனன். 'அப்பா தம்பீ அறைகின்றேன் கேள்! உன்னிடமிருக்கும் பொன்னை யெல்லாம் என்னிடம் கொடுத்தால், ஒரு பொன்னை ஒன்பதுகோடி பொன்னாக்கித் தருவேன்!' என்று சாமியாய்வந்த பொய்யன் கூறக் கேட்டு, ஆசையானது தருமதத்தன் அகத்தைப் பிடித்துத் தள்ளவே, தன்னிட மிருந்த பொன்னை

யெல்லாம், தருமதத்தன், உருண்டையாக்கிக் கொண்டு வந்து கொடுத்தனன். இதில் தருமச் சொத்தும் மிகவாய்ச் சேர்ந்திருந்தது. ஓரறையில் அனல்மூட்டிப் புகையெழுப்பிப் புடமிடுவதுபோல வேடிக்காரன் பாசாங்கு செய்தனன். புகைமிகுதியால் வணிகப் பிள்ளை கண்களினின்றும் வான்மழைபோல் நீரருவி பொழியக், கண்களைத் திறக்க முடியாமல் அவன் கபோதிபோலிருந்த சமயம் பார்த்து, இரும்பு உருண்டை ஒன்றை நெருப்பில் வைத்து விட்டுப் பொன்னுருண்டையைத் திருடன் தந்திரமாய் எடுத்துக் கொண்டான். பிறகு வணிகப்பிள்ளையை வாதியானவன் நோக்கி, 'அப்பா, மூன்று நாள் அனலிலிட்டு ஊதி நீ வருவையானால், பொன் உனக்குக் குவியல் குவியலாய்க்கிடைக்கும். ஆனால், நீ மிகுந்த பக்தி சிரத்தையோடும் என்னை நோக்கித் தவம் புரிய வேண்டும். நானும் வேறிடம் சென்று ஏறார்தியாகிய பரம சிவத்தை நோக்கித் தவம் புரிந்து வருகின்றேன்!' என்று மெள்ளக் கூறிக் கள்ளத்தனமாய் வெளித் தோன்றி விட்டான். மூன்று நாள் வரைக்கும் வணிகப்பிள்ளை அவ்வாறேசெய்து, நான்காம் நாள் புடத்தினின்றும் எடுத்துப் பார்க்க, இரும்புருண்டையைக் கண்டு அவன் வருந்திச் செத்தனன். தன் சொத்தோடு தருமச் சொத்தையும் பாழாக்கினதால், இந்த யானை யுருவம் அவனுக்கு வந்து நேர்ந்தது.

இந்த விருத்தாந்தத்தைக் குச்சகமுனிவர் ஞான திருஷ்டியால் அறிந்து கொண்டார். உடனே தமது

தவத்தில் ஒருநாள் தவத்தைத அவனுக்குக்கொடுக்கவே அவன் யானையுருவம் நீங்கித் தேவவுருவம் பெற்று, உத்தமப் பதவியை உன்னதமாய் அடைந்தனன். இவை யெல்லாம் நிகழ்ந்தான பின், குச்சகமுனிவர், எருமைவாகனக் கடவுளாகிய யமதருமராஜனை நோக்கித் தவம் புரிந்து, விருத்தைக்கு உயிர்கொடுத்துப் பிழைக்கச் செய்தனர். அப்போது அப்பெண்ணின் தந்தைதாயர் உவகைக்கடலில் முழுகிக் குளித்தார்கள். அவர்கள் மாத்திரமா! அநாமய வனத்துள்ளோ ரெல்லோருமே ஆனந்த சாகரத் தழுந்தி மகிழ்ந்தார்கள். பிறகு, விருத்தைக்கும் கவுச்சிகருக்கும் திருமணம் நிகழ்ந்தது. இவர்கட்கு மிருகண்ட ரென்னும் புத்திரர் பிறந்தனர். இவருக்குத் தக்க வயது வந்ததும் உபநயன முதலிய சடங்குகளை யியற்றி, இவரது தந்தையார் இவருக்குக் கலைஞான முற்றிலும் உண்டாகும்படி செய்து இவரை வேத சாஸ்திர புராணங்களில் மிகவும் வல்லுநராக்கினர். பின்னர் மிருகண்டருக்கு மருத்துவதி யென்னும் பெண்ணைத் திருமணஞ் செய்வித்து, கவுச்சிகரும் விருத்தையும் தவம் செய்ய வனத்துக் கேகினர். மிருகண்டருக்கோ பன்னெடு நாள் மகப்பேறில்லா திருந்தது. புத்தென்னும் கொடுமையைப் போக்கப் புத்திரனுண்டாக வில்லையே யென்று மிருகண்டர், மனம் வருந்தித் துயருழந்து மிகத்தளர்ந்து, அக்குறையைப் போக்கிக் கொள்ள மணிகர்ணிகை யென்னுமிடத்தில் மாசிலாமணியாகிய பரமசிவத்தை நோக்கிப் பெருந்தவம் புரிந்தனர். தூய்யன் புரியும் தவத்திற்கு ஐயன் மன

மகிழ்ந்து, மிருகண்டருக்கு என்ன வரம் வேண்டு மெனக் கேட்டனர். மகப்பேறு வேண்டுமென்று மாதவன் மறுமொழி புகல, 'பக்தியில்லாதவனாகவும் பரம சண்டாளனாகவும், அங்கஹீனனாகவும் அற்பத் தொழில் புரிபவனாகவு மிருந்து நூறுவயது தீர்க்காயு ளுள்ளவனாக ஒரு மைந்தன் வேண்டுமா, அன்றி, அர னடியைத் தினம் பணிபவனாகவும், அன்பும் அரு ளும் அகமெலாம் நிறைந்தவனாகவும், ஞானமென் பது பழுத்த நற்றவச் செல்வனாகவும், வேதாக மங்களை ஓதியுணர்ந்த வித்தக மூர்த்தியாகவு மிருந்து அற்ப ஆயுளையுள்ள அருமந்தப் புதல்வன், பதினாறு வயதே பாரினிலிருக்கக் கூடியவன் ஒருவன் வேண்டுமா' என்று சிவபெருமான் பக்திவயப்பட்ட மிருகண்டுவை வினவினர். அதற்கு மிருகண்டு முனிவர், 'ஐயனே, நீறுபூசிய மெய்யனே, மான்மழுவேந்திய கையனே, கங்கையும் திங்களும் முடியிலணிந்த துய்யனே, அடியேன் செய்யும் விண்ணப்பத்தை அடி பணிந்து நவில்கின்றேன் கேட்டருள்க! கள்ளியானது நெடுக வளர்ந்ததாலே காயுண்டாகுமா, கனியுண்டா குமா? ஓதியென்பது பருத்து உலகிற்கு யாது பயன் தரும்? அறிவில்லாத அசட்டுப் பிள்ளை ஆயிரம்வருட மிருந்துதான் யாது பயன்? அறிவுசான்ற புத்திரன் அற்ப ஆயுளுள்ளவனா யிருப்பினும் போதும். ஆதலின், தாங்கள் அவ்வண்ணமே தண்ணளி செய்தருள்க!' என்று சிவபெருமானை மிகவும் வணங்கிக் கேட்டுக் கொண்டனர். அவ்வண்ணமேயாகுக வென்று இறை வர் அருண்மாரி பொழிந்து, இமைப் பொழுதில்

மறைந்தனர். இறைவர் அருளியவாறே, அருமைப் புதல்வரொருவர் மிருகண்டருக்குப் பிறந்தனர். இவருக்கு மார்க்கண்டர் என்னும் திருநாமமளித்து, மகிழ்ந்தனர் தாய் தந்தையர்.

மார்க்கண்டர் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, எல்லாக் கல்விகளிலும் ஏற்றமுற்று விளங்கி, அரனடிபணியும் பெருநெறியுடையோராயினர். இதைக்கண்ட தாய் தந்தையர், எவராலும் இயம்பமுடியாத பெருங் களிப்புற்றனர். ஆயின், இம்மகிழ்ச்சி நெடுங்கால மிருக்கக்கூடியதாயில்லை. பதினாறாண்டு மைந்தனுக்குப் பாரினில் நெருங்க நெருங்கத் தாய் தந்தையருக்கு மனக் கலக்கம் தானே தோன்றிவிட்டது. 'ஐயகோ! அக்கோ! என் செய்வோம் நாம். ஏதெனக் கூறுவோம் நாம். அரனடிபணியும் அன்பு மிக்குயர்ந்த புதல்வனை, ஞான நூலெலாம் நவின்ற நற்றவச் செல்வனை, அன்பு மருளுமே தரும்பிய அருமந்தப் பிள்ளையை, அறநெறிவழாத திறலுடை மைந்தனை இழக்குங்காலம் மிகச் சமீபித்துவிட்டதே, என்செய்வோம்! எவ்வாறுய்வோம்!' என்று மிருகண்டுவும் அவர் மனைவியாரும் பட்ட வருத்தம் பரமனுக்குத்தான் தெரியும். இதனை மார்க்கண்டர் எளிதிலறிந்து கொண்டார். எல்லா விவரங்களையும் மார்க்கண்டர் தமது தாய் தந்தையர் சொல்லக்கேட்டு, அரனருளால் தமது ஆயுள் வளர்ந்து செல்லுமென்றும், தாம் அற்ப ஆயுளுடையுவரென்று தமது தாய் தந்தையர்

வருந்தவேண்டுவ தில்லையென்றும் உறுதிகூறி அவர்க ளுடைய உள்ளத்தைத் தேற்றினர். பின்னர் மார்க் கண்டர் காசிக்குச்சென்று ஆங்குச் சிவபெருமானை நோக்கி மிகப்பெரிதும் தவம்புரிய, அடியார்க்கிரங்கும் அண்ணலார் பிரசன்னமாய், 'அன்பின் மிக்க அருமந் தச் செல்வனே, என்ன வரம் வேண்டும் கூறுக' என்று வினவினர். அஷ்டாங்கமும் நிலந்தோய மார்க்கண்டர் ஐயனடிபணிந்து, "கருணைததும்பும் கற்பகக் களஞ்சியமே! உன்னருளாலே யன்றோ உலக மெல்லாம் நிலைபெற்றிருப்பது! ஈ எறும்புமுதல் புவன மனைத்தினையும் படைத்த பிரமன் வரைக்கும், எல்லாம் உன் திருவருட் செயலாலே யன்றோ இயங்கிக்கொண் டிருக்கின்றன! ஏழைகள் மனத்தில் ஏழாட்டமிட் டுப் போராட்டம் செய்துகொண் டிருக்கும் இன் னல்களெல்லாம் உன்னருள் பட்ட மாத்திரத்தில், சூரி யனைக் கண்ட பனிபோன்று ஊர்பே ரில்லாது ஓடி யொழிந்து போகவில்லையா! எல்லாத் துன்பத்தை யும் போக்கும் நினக்கு என் துயரத்தைப் போக்கு வதுதானா முடியாத காரியம், சாயாத செய்கை! அகதி களுக்கு அன்னமளித்தும், அற்பருக்கு அறிவுவரச் செய்தும், ஊனக்கண் கொண்டோர்க்கு ஞானக்கண் தந்தும், பக்திச்சுவை தெரியாதார் மனத்திலும் பரமா னந்தத் தேன் சொட்டச் செய்தும், அற்புதங்கள் விளைக்கும் நினக்கு அடியேனைக் காப்பதுதானா முடி யாதசெயல்! தாய்முகம் கண்ட சேய்மனம் போன் றும், தாகவிடாய்க் கொண்டவனுக்குப் பாலைவனத்தில் நீரது கிடைத்தது போன்றும், உன்னைக் கண்ட மாத்தி

ரத்தில் என் மனக்கவலை யெல்லாம் போயொழிந்ததே! உன் அருளை என்னெனப் புகழ்வேன்! உன் கருணையை என்னெனத் துதிப்பேன்! ஐயனே, மெய்யனே, மழுமானேந்திய கையனே, எனக்குப் பதினறு வயது நெருங்கிற்றென்றும், என் ஆவியை எமன் கொண்டுபோகும் காலம் கிட்டிவிட்டதென்றும், என்னைப் பெற்றோர்கள் இதயம் வருந்துகின்றார்கள்! அகிலத்தில் தோன்றிய உயிர்களுக்கு, 'ஆறிலும் சாவு நூறிலுஞ் சாவு' என்பது மிக உண்மையானதே யாயினும், என் தாய் தந்தையர்கள் படும் துயரம் என்னல் சொல்ல முடியாது! ஆதலின், ஈசனே, நேசனே, அடியேனைக் காத்துக் கடைத்தேற்றுவது ஐயனாகிய நின்றன்கடன்!' என்று சொன்மாரி பொழிந்து பொன்னார் மேனியனை வேண்டிக் கொண்டனர். பக்திக்கு வயப்பட்ட பரம்பொருளாதலால், சிவபெருமானர் மனமிரங்கி, 'என் அப்பனே, ஒப்பிலாமணியே, மார்க்கண்டா, உன் அன்பைக்கண்டு உள்ளம் களித்தேம் யாம். யாதொன்றுக்கும் நீ அஞ்சவேண்டுவதே யில்லை. உள்ளத் தூய்மை கொண்ட உனக்கு எள்ளத்தனையும் கெடுதி விளைக்க எவராலு மாகாது; எமனாலும் முடியாது, பிரமனாலும் ஆகாது!' என்று திருவருள் சுரந்து கருணைமொழி புகன்று மறைந்தனர்.

ஐயன் அருளை அகமகிழ்ந்து கைக்கொண்டு, மார்க்கண்டர் காசிக்ஷேத்திரத்தினின்றும் புறப்பட்டுப் பற்பல சிவஸ்தலங்களைத் தரிசித்து, இறுதியில் திருக்கடவூர் சேர்ந்து ஆங்குப் பரமசிவத்தைப்

போற்றிப் பணிந்துகொண் டிருந்தனர். அப்பொழுது மார்க்கண்டருக்கு வயது பதினாறானமையின், அவரை அழைத்துச் செல்ல எமதூதர்கள் நெருங்கும்போது, அண்டையில் வரவொட்டாதபடி, மார்க்கண்டருடைய தவ வலிமை அக்கினிச் சுவாலையாய் வீசிக் கொளுத்தினது. இந்த நெருப்புத் தணலை எமதூதர்கள் பொறுக்கலாற்றாது வருந்தி, மார்க்கண்டருடைய சிவபக்திக்கும் தவவலிமைக்கும் அஞ்சி நடுநடுங்கினவர்களாய் ஓடிச் சென்று எமனிடம் முறையிட்டனர். "எங்களிறைவனே, எமதருமராஜனே, உன்றன் ஆணைசெல்லாத விடம் மூவேழுலகத்தினும் பேருக்கேனும் கிடையாது! உன்றன் ஊழியர்களாகிய எங்களைக் கண்ட மாத்திரத்தானே, உயிர்களெல்லாம் கதறி ஓலமிட்டலறும்; உன்றன் பேரைச் சொன்ன மாத்திரத்தானே வடவைக் கனலைக் கண்டதுபோன்று உயிர்களெல்லாம் நிலைகுலைந்து அலையும்! உண்மை என்னவோ அவ்வண்ணமிருக்க, இந்தச் சுண்டெலி போன்ற சிறுவன், சுண்டைக்காய்ப் போன்ற இளம் பையல், எங்களை எதிர்த்து எங்களை ஏசி ஏதேதோ நியாயம் பேசிப் பக்தியாகிற பெருநெருப்பால் நாங்கள் பதைபதைக்க வருத்தினான்! ஆஹா! அவன் பக்தியும் அவன் பூஜையும் எங்களால் சொல்ல முடியாது: கிட்டப் போகவும் எங்களால் முடியவில்லை; கட்டி இழுக்கவும் எங்களால் ஆகவில்லை. நாங்கள் என் செய்வோம்!" என்று எமதூதர்கள் எமதருமராஜனிடம் குறைகூறிக் கோவெனக் கதறினர். இதைக் கேட்டதும் எமதருமராஜன் பதைபதைத்துத் துடி

துடித்துக் கோபத்தணலை வீசி எறிந்து, அண்டகடா கங்கள் துண்டுதுண்டாய்ப் போகும்படி அட்ட காசம் செய்து ஆரவாரம் புரிந்து, எமபாசத்தைக் கையி லெடுத்துக்கொண்டு எருமைக்கடா வாகனம் ஏறித் தானே போய் அந்தச் ‘ சிறு பையலை ’ இழுத்துக்கொண்டுவருவதாய்க் கூறித் திருக்கடவூரை யடைந்து, ஆங்கு உருக்கமோடு பாடிப் பரவிக் கொண்டிருக்கும் மார்க்கண்டரைக் கண்ணுற்றனன். அன்னவனைக் கண்டதும் அந்தகனுக்குக் கோபச் செந்தீ கொழுந்துவிட் டெரிந்தது. கண்கள் தீப் பொறி சிந்தப் புருவம் நெரிந்து நெற்றிங்கேறக் கோரப்பற்களிற் கொடுமையான நகைதோன்றப் பற்க ளெல்லாம் கற்களை யுடைப்பது போன்று நறநற வென்று நன்றாய்க்கடிக்க ஊழிக்காலத்துத் தீயே உற் பாதமாய்த் தோன்றினதுபோல விளங்கி, எமதரும ராஜன் எருமைக்கடா வாகனத்தின் மீதே யிருந்து, இளம்பிள்ளையாகிய மார்க்கண்டரை ஏற இறங்க நோக் கிப் பாலப்பருவம் வாய்ந்த பிள்ளையைப் பலவிதத்தா லும் பயமுறுத்தி, ‘ அசட்டுத்தனம் மிகுந்த அறியாப் பிள்ளையே, என்னை எதிர்ப்பார் இந்த உலகில் எவ ருமே யில்லை! காலம்முடிந்தால் காலனாகிய என்னிடமே வந்து சேரவேண்டும். இதனை அறிந்த நீ, பரமானந்த பக்தன்போலப் பாரினில் வேடம் பூண்டு அகந்தையை மேற்கொண்டு அரனடி தொழுவதாய்ப் பாசாங்கு செய்யும் நீ, என்றன் பெருமையையும் என்றன் ஏற்றத்தையும், உன்றன் சிறுமையையும் உன்றன் தாழ்ச்சியையும் ஒரு சிறிதும் உணர்ந்தனையல்லை.

ஏடா! பையலே! என்றன் ஆணையை மறுக்க எந்தக் கடவுளுக்கும் வன்மையில்லை. என்னிடம் வருகின்றனையா, இந்தப் பாசத்தை வீசட்டுமோ?' என்று கடிய கொடிய சொற்களால் இடிவிழுவதுபோலப் பேசினன். இதைக்கேட்ட மார்க்கண்டர் இலிங்க வடிவாகிய ஈசனை இறுகத் தழுவிக்கொண்டு, எம தருமராஜனை நோக்கி, 'யாது கூறினை ஏமா? உண்மை அடியாரை நீ ஒன்றும் செய்ய முடியாது. உன் அதிகாரத்தை என்னிடம் நீ காட்ட வேண்டுவதில்லை. கங்கையணிந்த சடைமுடிப் பெருமானார் என்னைக் காக்கக் கங்கணங் கட்டிக்கொண்டிருக்கின்றார். அப்பெருமானை மதியாது அகந்தை நீ படைப்பையாயின், அதோகதியில் வீழ்ந்து அவதிப்பட நேரிடும். இப்போதே நீ ஒழிந்து போகக்கடவை, அன்றேல் நீ அழிந்துபோகக்கடவை!' என்று கூறி எம்பெருமானைத் துதித்துக்கொண்டிருந்தனர். இதைக் கேட்ட எமதருமராஜனுக்கு இவ்வளவுதான் கோபமுண்டானது என்று எவ்வளவேனும் சொல்ல முடியாது. அகங்காரத்துடன் கூச்சலொன்று ஆவெனப் போட்டு, எமதருமராஜன், எமபாசத்தை வீசி இலிங்கத்தையும் இளவலையும் இழுக்கத் தொடங்கினன். அன்பராகிய மார்க்கண்டர் மனத்தைத் துன்பமானது கிரகணம்போலக் கவ்விக்கொண்டது! 'அரனாரே போற்றி, அப்பனே போற்றி, அடியாரின் துன்ப மகற்றுவாய் போற்றி, அண்ணலே போற்றி, ஐயனே போற்றி, அந்தகன் அகந்தையை அடக்குவாய் போற்றி, இன்னல் தீர்த்தருள் இறைவா போற்றி,

கன்னல மருளும் நாதா போற்றி, மறலியுயிர்போக்க மன்னுவாய் போற்றி, என்னைக் காக்க எழுந்தருள் வோய் போற்றி' என்று மார்க்கண்டர் பரமசிவத்தை யிங்ஙனம் போற்றிக் கொண்டிருக்க, எமதருமராஜன் பாசத்தை வீசி இலிங்கத்தையும் இளவலையும் மிக்க வன்மையோடு இழுத்தனன். இழுக்கவும், இலிங்கம் படீரென வெடிக்க அமிர்தலிங்கேசர் அற்புதமாய்த் தோன்றினர். கங்கை யானது சடையில் விளங்கவும், திங்களென்பது அதன் பக்கத்தில் வயங்கவும், நெற்றிக் கண்ணனது நின்மலமாய்ச் சொலிக்கவும், கோபச் சிப்போ கொழுந்தோடிப் படரவும், எம்பெருமா னெழுந்த வேகத்தால் எல்லா உலகங்களும் கிடு கிடுத் துப்போயின. இடக்கர் விளைத்த இயமதருமராஜனைப் பாசத்தால் உதைத்துத் தள்ளினர், சிவபெருமானர், சூலத்தால் குத்தி வீழ்த்தினர்: மண்ணில் வீழ்ந்து மறலியும் புரண்டனன், உயிர்துறந்தனன். அன்பர் தம் பெருமை இன்றுதான் கண்டோமென்று தேவர்க ளெல்லோரும் பூமாரி பொழிந்தனர். என்றும் பதி னறு யிருக்க, மார்க்கண்டருக்கு, எந்தையார் ஆசி புரிந்தனர். இயமனிறந்து பட்டதால் உலகபாரம் மிகுந்துபோகத் தேவர்களனைவோரும் திரிபுராந்தகன் பால் சென்று, இயமனுக்கு மீண்டும் உயிர்கொடுக்கும் படி ஈசனை வேண்டிக்கொண்டனர். 'அவ்வாறே யாகுக' என்று அண்ணலார் அருள்புரிய, இயமனும் உயிர்த்தெழுந்து ஈசனர் பதமலர் பணிந்தனன், உண்மை யடியார்பால் இயமன் என்றும் நணுகா திருக் குமாறு, ஈசனர் பணித்த கட்டளையைச் சிரமேற்றாங்கி

இயமனும் தனதுல கேகினன். மறலியுயிர் குடித்த பெருமானு ரடிபணிந்து, மார்க்கண்டரும் தமது தாய் தந்தைய ரிருக்கு மிடத்திற்குச் சென்று அவ்வோ ரையும் மகிழ்வித்தனர்.

அற்புதமான இந்த மார்க்கண்டர் சரிதையை அருந்தவ முனிவரான காசிபர் தமது புதல்வர்களாகிய சூரன் முதலானவர்களுக்கு நன்கெடுத்துக் கூறி, அவர்கள் நல்வழியி லொழுகித் தேவபக்தியிற் சிறந்து, சிவபிரானை அன்புடன் வழிபடுதலே நன்மையாகும் என்று உபதேசித்தனர்.



## அரக்கரின் கொடுமையும் அமரரின் சிறுமையும்.

சூரபதுமனாதியோர்க்குத் தமது தந்தையாராகிய காசிபர் சொன்னது காதுக்கேறவே யில்லை. ஏனென்றால், அவர்களுடைய தந்தை சொற்படி நடக்கத் தாயாகிய மாயையானவள் விடவில்லை. 'தந்தை சொன்மிக்க மந்திரமில்லை,' என்பது மூதோர் மொழியாயினும், அத்தகைய கொள்கை அந்தச் சந்தர்ப்பத்திற்குச் சரியான தன்றென்றும், சூரனாதியோர் மாய வித்தைகளையும் மந்திர தந்திர யந்திர வித்தைகளையும் கற்றுத் தேவர்களை வாட்டி மூவர்களை வருத்துவதே புகழத்தக்க செயலாகுமென்றும் மாயையான தாயானவள் அவர்களுக்குப் புகட்டினாள். இதனாலேயே சூரன் முதலியவர்கள் தமது தந்தையாகிய காசிபர்கூறிய நன்மதியை ஒரு சிறிதும் மதித்தவரல்லர். ஆகவே, தமது தாயாகிய மாயையினிடத்தில் எல்லாவிதமான மந்திர தந்திர யந்திர வித்தைகளையும் மாசால மகேந்திரஜால வித்தைகளையும் கற்றுக் கொள்ளுவதில் அவர்கள் பேரவா வுற்றனர். சூரனுக்கும் அவன் உடன் பிறந்தாருக்கும் தமது தாய் மொழியே

இனிமையாய்த் தித்திக்கும் மொழியாகத் தோன்றிற்று. ஆகையால் அவர்கள் அவள் உபதேசித்த படியே வடதிசை சென்று ஓமகுண்டங்கள் வகுத்துச் சிவபிரானை நோக்கித் தவஞ்செய்வான் தொடங்கினர். இந்தச் சமயத்தில் துராலோசனை கூறுதற்குச் சுக்கிர பகவானும் வந்து தோன்றினர். பிரகஸ்பதி எவ்வண்ணம் தேவர்கட்குக் குருவாகின்றனரோ, அவ்வண்ணமே சுக்கிரபகவான் அசுரர்களுக்குக் குருவாக இருப்பவர். ஆகவே, தேவர்கட்கு எத்துணைக் கெடுதி செய்யக் கூடுமோ அவ்வளவும் செய்வதில் இடையறாக் கவனம் செலுத்துபவர் சுக்கிரபகவான். ஆதலால், அவர் செய்த உபதேசங்கள் சூரபதுமனாதியர்களுக்கு மகிழ்ச்சியைத் தந்தன.

பதினாயிரம் ஆண்டுகள் அவர்கள் மிகக் கடுமையாய்த் தவம்புரிந்தும் பரமன் வரவில்லை. இதனால் சூரன் மிகவும் துயருழந்து மனந் தளர்ந்து பின்னுமோராயிரம் வருடம் அந்தரத்தினின்றும் கொடுந்தவம் புரிந்தனன். அதற்கும் மனமிரங்கிச் சிவபெருமான் எதிர்ப்படாதது கண்டு, சூரன் மிகவும் வருந்தி யாகத் தழலில் வீழ்ந்து ஆவிதுறந்தனன். இதைக்கண்டதும் சூரன் தம்பிமார்களாகிய சிங்கமுகாசுரனும் தாரகாசுரனும் விழுந்தழுது புரண்டு நைந்தார்கள். பின்னர்ச் சிங்கமுகாசுரன் ஆயிரம் சிரங்களுடையவனாதலால் அவன் தலைகளில் ஒவ்வொன்றாய்க் கொய்து யாககுண்டத்திற்போட்டு அகோர தவஞ்செய்வானாயினன். இதைக்கண்ட சிவபெருமானுருக்கு மனம்

மிக இரங்கிவிட்டது. உடனே அவர் சிங்கமுகாசுர னுக்குப் பிரசன்னராய் அவனுடைய குறைகளைக் கேட்டருளிக் கங்கையாகின்ற துங்கநதியை யாகசாலை யிற் பாயவிடுத்துச் சூரனை யெழுப்பித், தமது சக்தி யாலன்றிச் சூரனை யாராலும் அழிக்க முடியாத பெரும் வரத்தைத் தந்து மறைந்தனர்.

இந்த வரத்தைப் பெற்ற சூரன் இதய மகிழ்ந்து யாகசாலையி னின்றும் திரும்பிச் சுக்கிர பகவானுடைய அடிமலர் பணிந்து அவர் மீண்டும் போதித்த தந்திர மந்திரோபதேசங்களையும் பெற்றுக்கொண்டு, தன் தாயாகிய மாயையிடம் சென்று நடந்த விருத்தாந் தங்க ளெல்லாவற்றையும் சாங்கோபாங்கமாய்க் கூறினன். அவற்றை யெல்லாம் கேட்ட மாயை மன மிக மகிழ்ந்து, சூரன் மனத்தில் தேவர்கள் மீது தீராத துவேஷத்தை உண்டாக்கினாள். சூரன் இதனால் அதிக வீராவேசத்தோடு தன் இராக்கத சைனியங்களுடன் குபேரன், இந்திரன், அக்கினி, வருணன், நிருதி, வாயு முதலானவர்களை எதிர்த்து அவர்களுடைய படைகளைத் தாக்கி அழித்து அவர் களைப் பலவிதத்திலும் துன்பத்திற் குள்ளாக்கினான். அவனுடைய தம்பி தாரகனோ திருமாலுடனேயே பொருதற்குத் தைரியங் கொண்டு அவரிடம் சென்று போராடினான். ஆயிரக் கணக்கான அத்திர சத்திரங் களைப் பிரயோகித்து இருவோரும் நெடுநேரம் போராடின பின்னர், திருமாலானவர் திகிரியாகிய சக்கராயுதத்தைப் பிரயோகித்தனர். திருமால்

கரத்தில் விளங்கும் திருச்சக்கரத்தைக் கண்டு நடுங்காதவர், உலகந்தன்னில் ஒருவருமே யிரார். ஆயினும் தாரகனுக்கோ அஃதொரு பொருளாய்க் காணவே யில்லை. செழுஞ்சுடர் வீசிக் கொழுங்கதிர் பரப்பிச் சக்கராயுதம் அதிக வேகமாய் வந்துகொண்டிருந்த பொழுது, தாரகாசுரன் இளைப்புச் சலிப்பில்லாமல் அதனைப் பிடித்திழுத்துக் கழுத்தில் ஆபரணமாகப் பொருத்திக்கொண்டு நகைத்தனன். பார்த்தார் திருமால்! 'இவனுக்குப் பிரமன் தந்த வரத்தின் வலிமை இது! இவனை யழிக்க முருகன் தோன்றியிருக்கிறான். அவனாலேயே இவன் அழியக்கடவன்' என்று மனத்தில் நினைத்துக்கொண்டு நயமாகப்பேசி நாசகாலனை அனுப்பிவிட்டார். இந்த வெற்றியினால் சூரன் முதலானவர்கள் மிகுந்த கருவங்கொண்டு, அம்புய மலரில் வாழும் அயனிடம்சென்று, அவனையும் எதிர்த்து ஆட்டங்கள் போடத் தொடங்கினர். அப்போது பிரமனும், சூரனை மிகப் புகழ்ந்து, பாட்டன் முறைகூறிப் பக்குவமாய்த் தப்பிப் போயினன். இந்திர னுலகத்திற்குச் சென்று தேவர்களை வென்று ஆடுமாடுகளைப்போல அவர்களை ஓட்டிச் சிறைக்கூடத்தி லடைத்து அவர்களைப் பலவிதத்திலும் சூரன் வருத்தத் தொடங்கினபோது, இந்திரன் அவனடியில் வீழ்ந்து வேண்டிக் கொண்டனன். அதனால் சூரன் கோபந்தணிந்து, அமரர்களைச் சிறை நீக்கி, அவர்கள் யாவரும் இன்னின்ன பணிகள் செய்ய வேண்டுமென விதித்து அவர்களைப் போகும்படி விடுத்தனன்.

இவ்வாறு சூரபதுமன், தனது தம்பியர்களாகிய சிங்கமுகாசுரன், தாரகாசுரன் என்கின்ற இருவர்களுடைய உதவியோடும், தனது படைகளின் துணையோடும், தனக்கு ஒப்பாரும் மிக்காரு மில்லையென்னும்படி தோன்றித் தேவர்களையும் திக்குப்பாலகர்களையும் வென்று, அவர்கள் யாவரையும் ஏவல் கொண்டு திரும்பி, வீரமகேந்திர நகரைப் புதிதாய் நிருமித்து, அதனைத் தனது ராஜதானி நகரமாக வைத்துக்கொண்டு அரசுபுரிய லாயினன். அப்போது அவனுக் கடங்காத தேவர்களும் திக்குப் பாலகர்களும் எவருமே இலர். அக்கினி குளிர்ச்சியா யிருக்கும்படி ஆக்கினையிட்டும், வாயுபகவான் வீதி யெங்கணும் குப்பைகளைக் கூட்டிச் சுத்தமாய் வைக்கும்படி உத்தரவளித்தும், வருணன் பனிநீர் தெளிக்கும்படி கட்டளைசெய்தும், சூரபதுமன் வெகு ஆடம்பரத்தோடு ஆட்சி புரிந்து வந்தனன். சூரபதுமன் தேவநம்பியன் மகளாகிற பதுமகோமளையை மணம்செய்துகொண்டு, வக்கிரகாலன் மகளாகும் விபுதையைச் சிங்கமுகச் சூரனுக்கு மணம் செய்வித்து, நிருதிமக ளாகிற சவுரியைத் தந்திமாமுகனாகிய தாரகனுக்கு மாலையிடச் செய்வித்தான். மேலும், வடகடலசுர புரத்திற்குச் சிங்கமுகனை அதிபனாக்கி, மாயாபுரத்திற்குத் தாரகாசுரனைத் தலைவனாக்கிக் கணக்கு வழக்கற்ற படைகளை அவர்களுக்குக் கொடுத்து எண்டிசைகளையும் காவல் புரியும் வண்ணம் தக்க ஏற்பாடுகள் செய்தான். இவற்றோடு சூரபதுமன் இதயம் குளிர்ந்திராமல், தேவர்களை மிக ஈனத் தொழிலிற் செலுத்தவும்

தொடங்கினன். நாள்தோறும் தேவர்கள். கடலுக்குச் சென்று ஏராளமாய் மீன்களைப் பிடித்துக் கொண்டு வரும்படி, சூரபதுமன் அவர்களுக்கு மிகக் கடுமையான கட்டளை யிட்டனன். அதனல் தேவர்கள் பட்ட துன்பம் இவ்வளவவ்வளவெனச் சொல்லமுடியாது. 'ஐயோ!' ஈசனே, எங்கள் தலைவிதி இவ்வாரு யிற்று!' என்று ஏங்கி அழுவார் சிலர். 'அந்தந்தோ! நாம்பெற்றிருந்த வாழ்வும்போய், மிகத்தாழ்வடைந்து, நந்தியிட்ட சாபத்தினலே நாசமுற்றோம், என்செய்வோம்! எவ்வா றய்வோம்!' என்று திகைத்து வருந்துவார் சிலர். 'ஈசனை முன்பு நாம் வாய்மதங்கொண்டு ஏசிப் பேசியதன் பலனன்றோ இப்போது நாம் அனுபவிப்பது! அயன் முதலானவர்களால் நேர்ந்த சாபமானல் ஐயனருளால் அதனைப் போக்கிக் கொள்ளலாம். ஐயனல் மூண்ட சாபத்திற்கு யார் என்ன செய்யலாகும்! ஆதலால், ஐயனே, அப்பனே, பெருமானே, நீயே எமக்கு அருள்புரிய வேண்டும்; ஆதரவளிக்க வேண்டும்!' என்று கண்களி னின்றும் நீர் பொழிய எல்லாத் தேவர்களும் சேர்ந்து தோத்திரம் புரிந்தார்கள்.

இவ்வண்ணம் தேவர்கள் தளர்ந்து மெலிந்து தரணியில் இடர்ப்பட்டுக்கொண் டிருக்கும் போது, சூரபதுமனுக்குப் பதுமகோமளை வயிற்றில் ஓர் ஆண் மகவு பிறந்தது. அதனல் சூரபதுமன் மிகவும் மனமகிழ்ந்தவனய்ப் பூவுலக முழுவதும் பொன்மலர் வழங்கித் தேசமெங்கணும் திருவிழாக் கொண்டாடி

அக் குழந்தைக்கு வேண்டிய அணிபணிகளையெல்லாம் அழகழகாய்ப் பூட்டினான். நகைகளைப் பூட்டி இந்தக் குழந்தையைத் தொட்டிலில்வைத் தாட்டும்போது, அக்குழந்தையானது, காய்கின்ற சூரியன் மீது பாய்கின்ற புலிபோலப் பாய்ந்து, அவனைக் கையால் அப்படியே பிடுங்கித் தொட்டிலின்மேல கண்ணூடியாய்க் கட்டி வைத்து விட்டது. உலகமெல்லாம் இதனாலே மிகவும் பரதவித்துப் போயிற்று. ஓடிவந்தார்கள் அயன் முதலோர்கள்; ஓலமிட்டார்கள் சூரனுக்கெதிரே நல்ல மொழிகளை நயந்துரையாடிப் பானுகோபன் எனப் பையனுக்குப் பெயரிட்டுப் புகழ்ந்து, சூரியனை விடுவித்துக்கொண்டு அயன் முதலோர் சூரனைப் பணிந்துவிட்டுச் சென்றார்கள். சூரபதுமன் மகன் சூரனாயிருந்தது போன்றே, சிங்கமுகனுக்கும் தாரகாசுரனுக்கும் வீரதீரர்களான புதல்வர்கள் பிறந்தார்கள்.

இஃதிப்படியாகச் சூரன் தங்கையாகிய அஜமுகிக்கும் தூர்வாசருக்கும் வில்வலன் வாதாபி என்கின்ற இரண்டு புதல்வர் பிறந்தனர். அவர்கள் தம் தந்தையாகிய தூர்வாசரிஷியை நோக்கி, அவர் செய்த தவப்பயன் அனைத்தையும் தங்கட்குக் கொடுத்து விடவேண்டுமெனக் கேட்டனர். அதற்கு அம்முனிவர் இணங்கவில்லை. வேறெதனைக் கேட்டாலும் அவர் கொடுப்பதாகவும், அவர் செய்துள்ள தவங்களின் பலனை மாத்திரம் கொடுக்கமுடியாதென்பதாகவும் முனிவர் கூறிவிடவே, கொடிய புதல்வர்களுக்குக் கோபம் அதிகமாய், அவருடன் வம்பும் வாதும்

விளைத்துக்கொண் டிருந்தனர். இதனால் துர்வாசருக்கும் சினம் அதிகமாய்ப் பொங்கி, வில்வலனும் வாதாபியும் அகஸ்தியரால் நாசமடைந்து போவார்களெனச் சபித்தனர். இந்தச் சாபத்தைப் பெற்ற வில்வலனும் வாதாபியும் அந்தச் சமயத்தில் ஒருவாறு அடங்கினரேனும், அவர்களுடைய கெட்ட எண்ணம் அவர்களை விட்டு அகலவேயில்லை. ஆகவே, அவர்கள் அயனை நோக்கித் தவஞ்செய்வா ராயினர். அவர்களுடைய முழுநோக்கமும் தவசியர்களை வதைத்துண்ணவேண்டு மென்பதே யாகும். இந்த நோக்கத்துடனே வில்வலன் தனது தம்பியாகிய வாதாபியைக் கொன்று பலியிட்டு, ஒருயாகம் செய்தான். அதற்குப் பிரமதேவன் மனமிரங்காததால், வில்வலன் தனது உடலிலுள்ள தசைகளை அறுத்தறுத்து யாகத் தீயில் போட்டு மிகப் பக்தியோடு யாகம் நடத்த, அதனால் அயன் மனம் இரங்கி வில்வலன் கோரிய வரத்தைத் தந்து, வாதாபியையும் உயிர்ப்பித்து மறைந்தனன். பின்னர், இருவரும் தமது மாமனாகிய சூரபதுமனிடம் சென்று, தமது பிரதாபங்களை யெல்லாம் எடுத்துக் கூறி, அவனைக் களிப்பிக்கச்செய்து, அவனிடம் விடை பெற்றுக்கொண்டு, குடதிசைக் கேகி, ஓரிடத்தில், கனிகளும் மலர்களும்நிறைந்த கற்பகச்சோலை போன்ற ஒரு நந்தவனம் அமைத்தனர். அங்கே வரும் இருடியரை அதிக வந்தனோபசாரத்துடன் அவர்கள் வரவேற்று, அவர்களை உண்டுபோகும்படி வேண்டிக் கொள்ளுதலும், அதற்காக வில்வலன், வாதாபியை ஓர் ஆடாக்கி அதைக்கொன்று பக்குவமாய்க் கறி

சமைத்து, விருந்துண்ண வரும் முனிவர்களுக்குப் பரிமாறுதலும், அவர்கள் உள்ளங்குளிர உண்டபின், வில்வலன், 'வாதாபி' யெனக் கூவ, அவர்கள் வயிற்றிற் கறியாய்ச் சென்றுள்ள வாதாபி, கூச்சலிட்டு முனிவருடைய குடலைக் கிழித்துக்கொண்டு வெளிவருதலும், உடனே செத்த முனிவனைக் கொத்திக் கறிசமைத்து, வில்வலனும் வாதாபியும் விலாப்புடைக்கத் தின்னுதலும் வழக்கமா யிருந்தது.

அஃதவ்வாறாக, நாரதர் கலகத்தால் விந்தமலையானது ஆகாயத்தை அளாவும்படி மீதூர வளர்ந்து, உலக முழுவதையும் இருளால் மறைக்க, அதைக் கண்ட தேவர் மனிதர் முதல் யாவரும் வருந்த, அந்தக் குறையைப் போக்குதற்கு அகத்திய பகவான் ஞான நிஷ்டையிலிருந்து, சிவபிரா னருளால் விந்தத்தையடக்கும் வன்மையையும் கமண்டலத்தில் காவிரி நதியையும் பெற்றுத் திரும்பி வந்துகொண் டிருந்தனர். வருகின்ற வழியில் கிரவுஞ்சனென்னு மரக்கன் அகத்திய முனிவருக்குத் தவறான வழியைக் காண்பித்து, அவரைப் பலவாற்றானும் மயங்கித் தியங்கச் செய்து, மழையைப் போன்றும் மேகத்தைப்போன்றும் மின்னலைப் போன்றும் இடியைப் போன்றும் பற்பல தோற்றங்களை உற்பாதமாய் விளைத்து அவரைக் கலங்கச் செய்யவே, முனிவர்பெருமானும் தமது ஞான நோக்கத்தால் நன்காராய்ந்து அவையாவும் கிரவுஞ்சப் பாவியின் அதிக் கிரமச் செயலாகுமென்று உணர்ந்து கொண்டு, கிரவுஞ்சன் ஒரு மலையாகக் கடவ

னென்றும் குமாரக்கடவுளால் பின்னர் அழியக் கடவ னென்றும் சாபமிட்டனர். இது நிகழ்ந்தபின் விந்த மலையை அமிழ்த்தி அடக்கிவிட்டு வில்வலன் வாதாபி என்கின்ற கொடியோரிருந்த கடிமலர்ச் சோலையைத் தவமுனிவரான குறுமுனிவர் நண்ணினர். பெரியா ரைக் கண்டதும் கொடியார் எதிர்கொண் டழைத்து அட்டாங்கமும் நிலம்தோய அடிக்கமலத்தே வீழ்ந்து, அசனமுண்ணும்படி பெரிதும் வேண்டினர். வந்தனை வழிபாடுகளால் சிந்தை மகிழ்ந்த முனிவர், அதற்கு உடன்பட்டு ஆங்கே தங்கினர். வழக்கம் போன்றே வில்வலன் வாதாபியை ஆடாக்கி அறுத்துப் பலவகை யாகக் கறிகளைச் சமைத்து இலையிற் பரிமாறி இருடி யர் பெருமானை உண்ணுமாறு கேட்டுக்கொண்டனன். இருடியர் பெருமானும் இதயங்களிகூர உண்டான தற்பின், வில்வலன், 'வாதாபி!' என விழக்கப்படி கூவினன். வாதாபியும் முனிவருடைய வயிற்றைக் கலக்கினன். பயந்தனர் பெரியார், பார்த்தனர் ஞானதிருஷ்டியில்! அனைத்தையும் அரைக்கணப் போதினி லுணர்ந்து கொண்டு, அகஸ்தியமுனிவர் வாதாபி யென்பவன் தமது வயிற்றிலேயே சீரணமாகி நசிக்கும்படி 'வாதாபி' சீரணபி எனச் சபித்தனர். இதுகாறும் முனிவர்களுடைய வயிற்றைக் கீறிக் கொண்டு வெளிவந்த வாதாபி, இப்பொழுது, கடலைப் பருகிய குறுமுனிவர் வாக்கினால், அவரது வயிற்றி லேயே சீரணித்து அதப்பட்டுப் போயினன். வில்வல னுக்கோ கோபமும் வந்தது, கண்களும் சிவந்தன! முனிவரோடு பொருதற்கு மூர்க்கத்தனமாய் அவன்

ஏழவே, 'வல்லவனுக்குப் புல்லுமாயுதம்' என்கின்ற வண்ணம் அகத்தியமுனிவர். ஒரு தருப்பையைக் கிறி 'அவன்மீ தெறிந்தனர்: அரக்கப்பாவியும் இரு கூறுகி அக்கினியா லெரிந்து போயினன். பின்னர், அகத்தியமுனிவர், ஆங்குநின்றும் புறப்பட்டுத் தமது வழி ஏகினர்.

அரக்கருடைய கொடுமையோ நாளுக்கு நாள் அதிகமாய்க்கொண்டே வந்தது. தேவர்களை வாட்டி வதைத்து, மீன்பிடிப்பது போன்ற இழிவான தொழில்களில் அன்னாரைச் செலுத்தித் தேவருலகத்தைக் கொளுத்தித் தொலைத்த தெல்லாம் போதா தென்று, சூரபதுமனுக்கு இப்போது கோரமான மற்றோரெண்ணமும் உதித்தது. அதாவது, இந்திராணியைத் தான் கைக்கொண்டு தனக்கே மனைவியாக வைத்துக் கொள்ளவேண்டு மென்பதுதான். இந்த எண்ணத்தினால் அவன் இந்திரனிடத்திற்குச் சில தூதர்களை அனுப்பலாயினன். இது தெரிந்துகொண்டு இந்திரனும் இந்திராணியும் குயிலுருவமாக மாறிப் பூவுலகத்தில் சீகாழி யென்னும் சிவதலத்திற்கு வந்து ஆங்குச் சிவபெருமானுக்கெனத் தனி நந்தனவன மொன் றமைத்துப் பெருமானிடம் தமது குறைகளைக் கூறி முறையிட்டுப் பூசனை புரிந்து காலங்கழித்துக் கொண்டிருந்தனர். இங்ஙனமிருந்துகொண் டிருக்குங் காலத்தில், ஒரு சமயம், சீகாழியில் மழையே யில்லாமல் நீர் வறண்டு போகவே, இந்திரன் வைத்த நந்தன வனம் சுந்தரம் நீங்கி மலர்களெல்லாம் காய்ந்து சாய்ந்து போக, தேவர்கோன் திராத்துயர மடைந்

திருந்தனன். அவ் வமயம் நாரதபகவான் ஆங்குப் போந்து, இந்திரனுக்காகப் பெரிது மிரங்கி, விநாயகக் கடவுளை ஆராதிக்குமாறு அவனைப் பணித்தருள, அவ னும் அவ்வாறே செய்ய, விநாயகக்கடவுளும் அகத்திய ரிருந்த இடத்திற்கு எழுந்தருளிக் காகமுருக்கொண்டு கமண்டலத்தில் அவர் வைத்திருந்த நீரைக் கவிழ்த்து விட, அது கங்கையிற் புனிதமாய காவிரியாகப் பெருகி, இந்திரன் வைத்திருந்த நந்தனவனத்தைச் சீர்பெறச் செய்து செழுமையுண்டாக்கி விட்டது. அகத்திய ருக்கோ கோபம் அளவு கடந்து எழும்பிற்று. கமண் டலத்தைக் கவிழ்த்துவிட்ட காகத்தின்மீது அவர் கல்லினை எறிந்தார். விநாயகரோ காகத்தின் உருமாறி ஒரு பிராமணச் சிறுவராய் எதிர் நின்றனர். அகத்திய ருக்குக் கோபம் அளவுகடந் துண்டாகிக் குட்டைப் பிராமணனை அவர் குட்டச் செல்லும்போது, விநாய கப்பெருமானார் தமது உண்மை யுருவோடு அகத்திய ரெதிரே தோன்றினர். அகத்தியருக்கு இதனால் அள விறந்த ஆச்சரியமுண்டாய், விநாயகப் பெருமானு ரெதிரே அவர் அட்டாங்கமும் நிலந்தோய அடி பணிந்து தெண்டனிட்டு, 'அருளே யுருக்கொண்ட ஐங்கரனாரே, அரனார் திருமகனாரே, கரிமுகவதன மும் கமலக்கண்களும் தோன்ற அடியேனுக்குத் தரி சனம் தந்து ஆட்கொண்டருளிய கருணைத்திறத்தை என்னென வியப்பேன், யாதெனப்புகழ்வேன்! எக்கா லத்தும் என்னைத் தப்பாது காத்தல் நுமதுகடன்! அண்ணலே போற்றி, அரன்தருமகனே போற்றி, வல் லபை மணாளா போற்றி, வானவர்களுக்கெல்லாம்

தலைவா போற்றி' என்று ஏத்திப் போற்றி இறைஞ்சி நின்றனர். விநாயகப் பெருமானும் மனம் மிகக் களிகூர்ந்து அகத்தியரை அருளுடன் நோக்கி, 'அன்பனே, நின் பக்தியால் அகம் மிக மகிழ்ந்தேன். உன்னைப்போல என்னெதிரே உளங்கனிந்து யாவர் தமது சிரத்தில் குட்டிக்கொண்டு பக்திசெய்து பரமானந்த மடைகின்றார்களோ, அவர்களுக்கு நற்கதி யுண்டாகுமாறு நல்லருள் புரிகின்றேன் யான்! மேலும், என்னாலுண்டாகிய இந்தக் காவிரியில் எவர் முழுகிக் குளிக்கின்றார்களோ அவர்க ளெல்லோரும் தமது விருப்பங்க ளீடேறப் பெறுவார்கள்' என்று திருவாய் மலர்ந்தருளித் தமது திருவுரு மறைத்தேகினர். அகத்திய முனிவரும் திருப்பொதிகைக்குச் சென்றனர்.

இஃதிவ்வாறாகத் தேவேந்திரனைக் காணாது, தேவர்கள் மனம் மிக வருந்திச் சீகாழியை யடைந்து, ஆங்கே இந்திரனைக்கண்டு அவனிடம் தம் குறைகூறி அவர்களனைவோரும் முறையிட லாயினர்: 'எம்மை யெல்லாம்விட்டு ஏந்தல் பெருமானே, இவ்வாறு நீவிர் கரந்துறைவது நமது பெருந்தகைமைக்கு அழகாகுமோ! நமது புதல்வன் ஜயந்தனை அலையவிட்டுத் தலைவனில்லாக் குடியைப்போன்றும் கொம்பில்லாக் கொடியைப்போன்றும் எங்களையும் கலங்கவிட்டு, இங்கே வந்து நீவிர் என்னவோ யோசனை செய்துகொண்டிருக்கின்றீர்களே! எங்கள்கதி அதோகதியாய்ப் போய்விட்டிருக்கின்றதே! மீன் பிடிக்கச் சொல்லித் தீயோன் எம்மை வருத்துகின்றான். ஈனத்தொழில் செய்கின்றோம்; மானமிழந்து மதிகெட்டவ ராகின்

ரோம். நீவிர் இல்லாத தேவருலகம்,பான்மதிய மில்லாத வானம்போ லிருக்கின்றதே. இப்பொழுதே நீவிர் புறப் பட்டு, எம்மையெல்லாம் காக்கவழிதேடல் வேண்டும்" என்று விண்ணவர்கள் பலவாறாகத் தேவேந்திரனிடம் விண்ணப்பித்துக் கொண்டார்கள். தேவேந்திரன் தன் மனைவியாகிய இந்திராணியை, சாஸ்தாவிடம் அடைக் கலமாக வைத்துத் தேவர்களுடன் கைலை சென்றனன். இந்தச் சமயத்தில் சூரபதுமனுடைய தங்கையாகிய அஜாமுகி தனது பாங்கியாகிய துன்முகியோடு இந்தி ராணியை நாடி அவளிறங்கி யிருக்கின்ற இடத்தைத் தேடிவந்தனள். இந்திராணியோ ஒரு சண்பகப் பூங்காவில் சிவபிரானை நோக்கித் தவம் புரிந்துகொண் டிருந்தனள். அவளைக் கண்டதும் அஜாமுகியானவள் பாய்கின்ற புலிபோலத் தீப்பொறி பறக்க ஓடிவந்து, இந்திராணியை நோக்கித் தன் தமயனாகிய சூரபதும னுக்கு மனைவியாகுமாறு தூண்டி வேண்டினள். எவ் வாறு சொல்லியும் இந்திராணி மனமிரங்காததால், அஜாமுகி யென்னும் அக்கிரமப் படுபாவி, தேவ மன்னன் மனைவியைக் கண்டவாறு தூஷித்தனள். சாஸ்தா கோயில் காவல்செய்யும் வீரமாகாளன் இத னைக் கண்டு, தண்டு கொண்டு சண்டை செய்யத் தொடங்கினன். அஜாமுகியும் இந்திராணியை ஆகா யத்தில் தூக்கிப் பறந்தனள். வீரமாகாளனும் விடாது தொடர்ந்து, கொடிய பாவியுடன் நெடிய பெரும்போர் புரிந்து, கடைசியில் அவளுடைய இரண்டு தோட்களையும் அறுத்துத் தள்ளி, இந்திரா ணியை மீட்டுக்கொண்டு இறைவனிடம் சேர்ந்தான்.

தோளறுபட்ட அஜாமுகி, குருதிவெள்ளம் பெரியதொரு யாறுபோலப் பெருகத் தன் அண்ணனாகிய சூரனிடம் அழுதுகொண்டே சென்று, நடந்த சங்கதிகளை ஆதியோடந்தமாகக் கூறினாள். இவையெல்லாவற்றையும் கேட்ட சூரனுக்கு இதயம் வெடிப்பதுபோலாய்விட்டது, கோபமெழுந்து கூத்தாடத் தலைப்பட்டது. 'அமரரையெல்லாம் வென்று கொன்று அதோகதிப்படுத்தி அணு அணுவாய்த் தேய்த்து விடுகின்றேன்!' என்று ஆங்காரத்துடனே, சூரபதுமன், ஆரவாரித்துப் பொங்கினான். இதனைக் கண்ட பானுகோபன் தன்து தந்தைக்கு எவ்வளவோ சாந்தமொழிகள் கூறினான். வீரமாகாளன் செய்த தீங்கிற்கு வானோர்களை ஏன் வாட்டி வருத்தவேண்டுமென்று, பானுகோபன் தன் தந்தையாகிய சூரபதுமனுக்கு எவ்வளவோ சமாதான மொழிகளும் சாந்த வார்த்தைகளும் கூறினான். பானுகோபன் தன்னை எதிர்த்துப் பேசினதற்காகச் சூரன் அவனைக் கடிந்துரையாடிப் பிரமனைக்கொண்டு அஜாமுகியின் கரங்களைச் சரிப்படுத்தி, எண்டிசைப் பாலகர்களையும் நவக்கிரகங்களையும் சின்னபின்னமாயடித்து அவர்களெல்லோரையும் சிறைப்படுத்திச் சித்திரவதை செய்தான். பானுகோபனைச் சூரன் முனிந்து பேசவே, அவனும் எழுந்தான் போருக்கு! இந்திரலோகம் சென்று, தேவேந்திரன் புதல்வனாகிய ஜயந்தனுடன் போராடி ஐராவத யானையின் கொம்புகளை முறித்து, அவனையும் அனேக தேவர்களையும் பானுகோபன் சிறைச்சாலைக்குக் கொண்டுவந்து சேர்த்தான். தேவர்களைச் சூரபது

முன் அங்கஹீனப் படுத்தப்பார்த்து அது முடியாமற் போயிற்று ; ஏனென்றால் அமுத வலிவால், அவர்கள், குறைந்த அங்கங்களை யெல்லாம் மீண்டும் மீண்டும் பெறுவாராயினர். ஆகவே, அவர்களை உறுப்புக் குறை வினராகச் செய்தல் ஆகாத காரியமாகுமெனக் கருதிச் சூரபதுமன் அவர்களெல்லோரையும் சிறைச்சாலையில் வைத்தான். வெண்காட்டில் தவம்புரிந்து வெள்ளை யானையும் மறுப்பைப் பெற்றது. தேவர்கள்படும் துயரம் ஓதற்கரிதாயிராநின்றது.

பிரகஸ்பதி பகவான் இந்தச் சரிதத்தைப் பேரரு ளாளரான அறுமுகப் பெருமானுருக்குக் கூறித் தேவர் களைக் காத்தருளல் வேண்டுமெனக் குமரக்கடவுளைப் பிரார்த்தித்தனர். கந்தப்பெருமானாரும் அந்த விதமே யாகக்கடவது எனத் திருவாக்களித்துத் திருவருள் புரிந்தனர்.



## வீரன் விஜயமும் சூரன் விழிப்பும்.

தேவகுருவாகிய பிரகஸ்பதி பகவான் தேவேந்திரனோடு, முருகப்பெருமான்தன் திருவடி பணிந்து அரக்கரைக் கொன்று அமரரைக் காத்தருளல் வேண்டுமென்று கேட்டுக்கொண்டதற்கிரங்கி அவ் வண்ணமே அரக்கரை யொழித்து அறத்தை நிலை நாட்டுவதாய், ஐயன் திருவாக்களித்ததற் கிணங்க, ஆங்கப்போதே பெருமானார் தமது சகோதராரகிய வீரவாகுதேவரை அழைத்து, 'அருமைத் துணைவனே, நீ இக்கணமே புறப்பட்டுக் கடலைத்தாண்டி மிக்க வீரப் பிரதாபத்தோடு வீரமகேந்திரநகர் சென்று, தீரனாய் அங்கே ஆரவாரித்துக்கொண் டிருக்கும் சூரனென்னும் பாவியைக் கண்டு, அவனுடைய எண்ணத்தைத் தெரிந்துகொண்டு வரக்கடவை. என்னதான் விரோதியாயிருந்தாலும், முன்னம் அவனுக்கு நீதிகளை நன்னயமா யுரைக்காமல், திடீரெனப் படையெடுத்துத் தீவிரமாய்த் தொலைத்துவிடுதல் அறநெறி யாகாது. இந்திரனுடைய சுந்தர மைந்தன் ஜயந்தனென்னும் இளம்பிள்ளையைச் சிறைச்சாலையினின்றும் விடப் போகின்றானோ, தேவர்களெல்லோரையும் சிறைச்

சாலையினின்றும் விடப்போகின்றனா, அமராபுரிப் பட்டணத்தைப் பண்டைய நிலைமைப்படி அமரர்கள் தலைவனுக்கே கொடுத்துவிடப் போகின்றனா, அல்லது என் கை வேலாயுதத்தாலே வெல்லப்பட்டுச் சாகப் போகின்றனா என்பனவற்றை யெல்லாம் நன்கு தெரிந்து வரக்கடவை. உயிர்த்தோழனான உத்தம நண்பனே, சூரபதுமனுக்கு நீதி யெல்லாம் நீ ஓதக் கடவை." அநியாயம் செய்பவனை அறுமுகவன் வேலாயுதம் விடாதென்று வீரமாய் அவனுக்கு நீ கூறக் கடவை. நல்ல வழிக்கு வந்தால் நல்லபடி பிழைத்துப் போகிறான்: தீயவழியிலேயே ஓயாமல் உழல்வானானால், தீ நரகத்திற்கு என் வேல ஆளாக்கிவிடும். ஆகையால், வழியிலென்ன இடர் நேரிட்டாலும், அதற்கெல்லாம் நீ அணுவளவும் பயமுறாது, அதிர்த்து வருகின்ற அக்கிரமப் பாவிகளை உதைத்துத்தள்ளி, மிதித்துத் துவைத்து, அட்டகாசம் செய்து அவர்கள் கொட்டங்களை அடக்கி, அனைத்தையும் தெரிந்து கொண்டு, அருகில் வந்து சேருவாயாக' என்று கருணைமுகம் பொலியக் கட்டளையிட் டருளினார்.

ஐயன் சொல்லி முடிக்குமுன்னமே, ஆகாயத்தி லெழும்பினார் வீரவாகுதேவர். முருகப்பெருமானார் திருவடித் துணைகளை முடிமே லணிந்துகொள்வதாய் மனத்தில் நினைத்து, மகிழ்வுடன் முறுவலித்துக் கந்தமாதன பருவதத்தின்மீ திருந்து வீரவாகுதேவர் தென்கடலைத் தாண்டுவாராயினார். வீரன் கடல்தாண்டும் தீரச்செயலினாலும், அகோர சப்தத்தாலும்

எட்டுத்திக்கு யானைகளும் மட்டில்லாமற் கலங்கின ; நவக்கிரகங்கள் புதைபதைத்து நாலுபக்கங்களிலும் சிதறின ; வேறு நக்ஷத்திரங்களும் தாறுமாறாய்த் தவித்துப்போயின ; திமிங்கிலங்களும் கடலிலமிழ்ந்து உடம்பினின்றும் உயிர்போகப் பெற்றன ; சொல்லவும் வேண்டுமோ தேவர்களுந்தயங்கினர், மூவர்களும் மயங்கினர்.

இவ்வாறு வீரவாகுதேவர் தென்கடலைக் கடந்து இலங்கை முகப்பிற்செல்ல, அங்கு வீரசிங்கன் என்னும் அரக்கன் வீரவாகுதேவரை எதிர்க்க இருவர்க்கும் பெரும்போர் மூண்டுவிட்டது. சண்டையின் கொடுமை மண்டலத்தில் எவராலும் சொல்ல முடியாது. வீரவாகு தேவரை வீரசிங்கன் தாக்கிப் பலத்த காயங்களை விளைக்கப் போகுமளவில், தேவர் தமது திவ்யதிருச் சக்தியால் பாவியை அடித்துப் பாரினில் வீழ்த்தினர். இவ்வாறு வீரசிங்கனை வீரவாகு தேவர் போரினிலடித்து மாளச்செய்தது, பின்னர் விளையும் பெரும்போர்க்கு முன்னர் பலியளித்தது போன்றிருந்தது. பிறகு, வீரவாகுதேவர் வெற்றி மாலை சூடி வீராவேசத்துடன் இலங்கைச் சிகரத்தை மிதித்துச் செல்லும்போது, இலங்கையானது கடற்குள் அமிழத் தொடங்கியது. இந்தக் காட்சி மிகுந்த பயங்கரக் காட்சியா யிருந்தது. அரக்கர்களெல்லோரும் கிடுகிடுவென்று நடுநடுங்கினார்கள். ஆனால் அரக்கரெல்லோருக்கும் தலைவனாயிருந்த அதிவீரனென்பவன், அவர்கள் பயத்தை அடியோடே

தொலைக்கவெண்ணி, ஒரு குதிகுதித்து வீரவாகு தேவரை மிதித்து விடுவதுபோல எதிரே தோன்றிப் பெரும்போர் விளைக்கத் தொடங்கினான். அப்போது வீரவாகுதேவர் கோபாக்கினியானது அதிவீரனையும் அவனைச் சார்ந்தோர்களையும் ஒரு விநாடியில் சுட்டெரித்துச் சுடுசாம்ப ராக்கிவிட்டது. பின்னர் வீரவாகுதேவர் வீரமகேந்திர நகர் சென்று தெற்குக் கோபுரவாயிலிற் காவல்செய்துகொண் டிருக்கும் கஜமுகாசுரனோடு பெரும்போர் புரிந்தனர். இக் கஜமுகாசுரன் மிகப் பொல்லாதவன்; ஆயிரம் சிரங்களும் ஈராயிரங் கரங்களு முடையவன். அவனுடைய துதிக்கையோ மிகப் பயங்கரமாயிருக்கும்; கொம்புகளின் கூர்மையோ சொல்லமுடியாது. இந்தக்கொடிய கஜமுகாசுரன் தான் காவல்செய்யும் தென்திசைப் பக்கத்தில் வீரவாகுதேவர் வேகமா யெழுந்தருளுவதைக் கண்டு அவர்மீது கடுஞ்சினமுற்று, அவரைச் சண்டைக் கழைத்து அவருடன் வாதுசெய்தான். இதனால் வீரவாகுதேவருக்குக் கோபம் மிகவும் மூண்டது. ஆகவே, இருவர்க்கும் கடிய பெரும்போர் விளையத் தருணம் நேர்ந்தது. பெரியகாத்திரமும் கோரஸ்வரூபமு முடைய அசுரன் கணக்கு வழக்கில்லாமல் மலைகளைப் பிடுங்கி வீரவாகுதேவர்மீது எறிய, அவையெல்லாம் பொடிப் பொடியாய்ப் போகுமாறு ஐயன் தூதர் செய்துவிட்டனர். அவன் ஓர் ஆயுதத்தை எறிய இவர் ஒரு படைக்கலத்தைப் பிரயோகிக்க, இவர் ஓராயுதத்தை விடுக்க, அவன் வேறொன்றால் அதனைத் தடுக்கக் கோபங் கொண்டு வீரவாகுதேவர்

கோரப்படைகளை மேலும் மேலும் முடுக்க, அவைகட் கேற்றதுபோலக் கஜமுகாசுரனும் ஆயிரமாயிரம் வாளி களை அடுக்கடுக்காயடுக்க, இப்படியாக இருவருக் கும் சண்டை ஒப்பேது மில்லாதபடி நெடுநேரம் நிகழ்ந்ததற்பின், வீரவாகுதேவர் கஜமுகாசுரனை எம னுலகத்திற் கனுப்பிவிட்டனர்.

அதற்குப் பிறகு வீரவாகுதேவர் அணு ரூபம் தாங்கி, வீரமகேந்திர புரத்துக்குட் சென்று ஆங்கு நிகழும் வைபவங்களை யெல்லாம் காணலாயினர். ஒப்பற்ற அந்தப் பட்டணம் உன்னதமா யமைந்தி ருந்த அழகைக் கண்டு, வீரவாகு தேவரடைந்த ஆச் சரியத்திற்கோ ரளவில்லை. ஆங்குக் காணப்பட்ட ரத கஜ துரக பதாதிகளையும், அற்புதமும் பொற்பும் வாய்ந்த அழகான நவரத்தின மண்டபங்களையும், ஆடல்சாலைகளையும், பாடல் சாலைகளையும், பளிங்கு மண்டபங்களையும், உத்தியான வனங்களையும், ஊஞ்ச லாடும் இடங்களையும், சலவைக் கற்குளங்களையும், மந்திராலோசனைச் சபைகளையும், உத்ஸவங்களுக் கென்று வைத்திருக்கும் பிரபைகளையும் மற்று முள்ள வைகளையும் நோக்கி வீரவாகு தேவர் தம் மனத்தில் தெவிட்டாத ஆனந்தம் கொண்டனர். இப்படி வீர வாகுதேவர் வீரமகேந்திர புரத்தின் அணிகளையும் அழகுகளையும் பார்த்துப் பார்த்து ஆச்சரியமும் ஆனந்தமுமடைந்து போய்க்கொண்டிருக்கும்போது, அவர் ஒரு சிறைச்சாலையைக் கண்ணுற்றனர். அஃது இந்திரன் புதல்வனாகிய ஜயந்தனை அடைத்து வைத்

இருந்த சிறைச்சாலையாக இருந்தது. அதனைக் கண்டதும் வீரவாகுதேவர் ஒரு புறம் மறைந்து நின்று பார்த்துக்கொண் டிருந்தனர். அங்கே அச் சிறைச் சாலையின் காவலாளர்கள் ஜயந்தனை மிகக் கொடுமையாய் வருத்திக்கொண் டிருந்தார்கள். அப்பொழுது அவன் வெம்பி வெய்துயிர்த்துப் பின் வருமாறு புலம்பலானான்.

'ஐயோ! நான் எவ்வண்ணம் இத் துயராற்ற மாட்டுவேன்! இந்தப் பாவிகள் என்னை வருத்துகின்றனரே! என் தகப்பனார் இருக்கும் இடத்தைச் சொல் என்று வற்புறுத்துகின்றனரே! நான் என் செய்வேன்! இந்திரபோகமென்று இவ்வுலகில் எல்லோர்களும் சொல்லுகின்றபடி, எல்லாப் போகங்களையும் உல்லாசமாய் அனுபவித்து வந்த நானும் மற்றைத் தேவர்களும், இந்தக் கதிக்கு ஆளாகி நொந்து வருந்துகின்றோமே! என் செய்வோம்! எவ்வாறுய்வோம்! தக்கன் வேள்வியில், தேவர்கள் தலைகொழுத்து நந்தியை இகழ்ந்துபேசின நாசகாரணத்தா லன்றோ, இந்தத் தலைவிதி எந்தமக்கு வந்து நேர்ந்தது. ஈசன் கடுஞ்சாபத்தை எவரே மாற்றவல்லவர்கள்! அதனை மாற்ற அரனாலே யாகுமே யன்றி, வேறு எவராலும் இனைத்துணையும் முடியாதே! ஈசா, நேசா, அன்பர் மனத்தின் விசுவாசா, உன்னைக் கை யெடுத்து ஒரு கோடிவந்தனை புரிகின்றேன். அட்டாங்கமும் நிலம் தோய அடிகளில் வீழ்ந்து பணிகின்றேன். காலனை யுதைத்து நீ பாலனைக் காப்பாற்ற வில்லையா? தேவர்

களுக்கும் மூவர்களுக்கும் ஒருசமயம் திருவருள் சுரக்க, வெண்ணி நஞ்சை எடுத்து நீ நன்றாய்ப் பருக வில்லையா? அத்தகைய அருள்வடிவமான மூர்த்தி, அன்பே யுருவான ஆதியஞ் சோதி, அனாதிப் பெருஞ் சோதியாகிய நீ அடியேனைக் காக்கத் திருவருள் புரியல் வேண்டும். திரிபுரத்தை எரித்த உனக்கு எதுதான் வருத்தம்? எம்மானே, பெம்மானே, அம்மானே, ஆயிரந்திருநாம முடையானே, என்னையும் என்னைச் சார்ந்தவர்களையும் ஏற்றபடி நீ காத்தருளல் வேண்டும். கோபித்த கண்ணாலே நீ ஏறிட்டுப் பார்த்துக் குளிர்ந்த நோக்கத்தாலே என்மீது கடாக்ஷித்து, எங்களைத் தகுந்தபடி நீ காத்தருளல் வேண்டும்.' என்று ஜயந்தன் பலவாறாகப் புலம்பிக்கொண்டே சற்று அயர்ந்து தூங்கினான்.

அந்த வேளை அவன் கனவில் கந்தவேள் தோன்றினர். ஓராறு சிரங்களும், ஈராறு புயங்களும், கருணை பொழியும் கமலக்கண்களும் விளங்கத், திருவடித் துணைகளில் சிலம்பு கலகலவென ஒலிக்க, எந்தை பிரானாகிய சுந்தரக் குமரர், மைந்தன் கனவில் மாட்சியுடன் தோன்றி, 'அப்பனே, ஒப்பிலாமைந்த, அருந் துய ரடைந்து நீ அலமருதல் கூடாது. உளங் கலங்கல் வேண்டா நீ. அசுரரைக் கொன்று அமரரைக் காக்கவே அவனியிற் போந்து அவதாரம் செய் திருக்கின்றேன் யான். ஆகையால் என் அன்பா நீ பயப்படாதே, அணுவளவும் நீ அஞ்சாதே,' என்று தைரிய மொழிகளைக் கூறித் தேவபிரானார் மறைந்

தனர். மேலும், தம் தூதனாக வீரவாகு தேவரைச் சூரனிடம் அனுப்பியிருப்பதாகவும், அவன் துயரை அவர் போக்குவார் என்பதாகவும் அவனுக்குத் தைரியங் கூறி அறுமுகனார் மறைந்தனர்.

கடவுள் அருள்மொழிகேட்டு ஜயந்தன் கண் விழித்தபோது, காவலாளர்களெல்லோரும் வாயிலிலேயே படுத்துறங்கினர்; அவர்கள் தூக்கமும் மயக்கமும் அளவுகடந்துபோயிருந்ததனால், அவர்கள் கண்களுக்கு ஒன்றுமே தோன்றிற்றிலது; அவர்கள் மனத்தில் யாதுமே புலப்பட்டிலது. அந்தச் சமயத்தில் அங்கு வீரவாகுதேவர் வந்து, 'ஜயந்தா, உனக்கு ஜயமுண்டாகுக! அப்பனே, நீ யாதொன்றுக்கும் அஞ்சவேண்டுவதேயில்லை. அற்பரான அரக்கர்களையெல்லாம், பெருமானார், காற்றிற் பஞ்செனத் தூற்றியடிக்கப் போகின்றார். மாயாபுரிக் கரசனான தாரகாசுரனை மர்த்தனம் செய்து மாளவடித்த பிரானுக்கு எந்தக் காரியம்தான் அசாத்தியமாகும்? சூரபதுமனை மாளவடித்து அவனைச் சேர்ந்த உற்றார், உறவினர், நண்பர், படையாளரெல்லோரையும் அரைவிநாடியில், கந்தவேள், அதோகதிப்படுத்துவாரென்பது உண்மை, உண்மை, முக்காலும் உண்மை! சற்றேனும் ஜயந்தா நீ, சித்தங் கலங்கவேண்டுவதில்லை' என்று வீரவாகுதேவர் தேவேந்திரன் புதல்வனான ஜயந்தனுக்கு ஆறுதல் கூறி அவன் மனதைத் தேற்றினார்.

பின்னர் அங்கு நின்றும் புறப்பட்டு, அணு ரூபத்தோடே வீரவாகுதேவர் சூரன் கொலுவிருக்குமிடம்

போந்து, அக்காட்சியைக் கண்ணுறக் கண்டு அளவிலா ஆச்சரியங்கொண்டனர். சூரபதுமன் கொலுவிருக்கும் சுந்தரக் காட்சியும், ஒப்பற்ற மாட்சியும் யாரால் சொல்லத்தரம், எவரால் வருணிக்கமுடியும்! அந்தரத்தில் சந்திரன் குடைபிடிக்க, வருணன் பனிநீர் தெளிக்க, வாயுவென்பவன் மெல்லிய காற்றைச் சல்லாபமாய் வீச, அக்கினிபகவான் ஆங்காங்கே விளக்குகளாய் ஒளிர, மற்றுமுள்ள தேவர்கள் குற்றேவல்கள் புரியத் தேவகன்னியர்கள் அடப்பங்களேந்த, நாக கன்னியர்கள் கர்த்தனஞ்செய்ய, அரம்பையும் ஊர்வசியும் அற்புதமான பாடல்களோடு ஆடிக்கொண்டு திகழ, நவரத்தினமயமான மண்டபத்தில் பல ரத்தின கசிதமான சிங்காதனத்தின்மீது, சூரபதுமன் சுந்தரமாய்க் கொலுவீற்றிருந்தனன். ஒரு மூலையில் யாருக்கும் தெரியாமல் இருந்து, வீரவாகுதேவர் இந்த வேடிக்கைகளையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தனர். முருகப்பிரானின் திருவருளால், ஆகாயத்தினின்றும் ஒரு சிம்மாதனம் அற்புதமாய் இறங்கிக் கொண்டு வந்தது! அணு உருவத்தை நீங்கி, வீரவாகுதேவர் தமது சுயஉருவத்தைத் தாங்கி, ஐயன் அனுப்பிய சிங்காதனத்தின்மீது ஆரோகணித்தனர். சூரனுடைய ஆரவாரத்திற்கு இஃது யாதும் தோல்வியுற்றிருந்தது. வீரவாகுதேவரும் சூரபதுமனும் இரண்டு தனித் தனிச் சிங்காதனத்தில் எதிரெதிரே வீற்றிருந்தது, கோரசூரிய னொருவனும் குளிர்ந்த சூரிய னொருவனுமாக இரண்டு சூரியர்களெதிரெதிரே வீற்றிருந்ததுபோ லிருந்தது. சூரபதுமன் வீற்றிருந்தது அரக்கர் கொடுமையை மிகுத்துக்

காட்டிக் கொண்டிருக்க, வீரவாகு தேவருடைய வியூன் பெருந் தோற்றம் வைதிகநெறியிற் பரவுவா ருடைய வண்மை யனைத்தையும் விளக்கியது. வீர வெண்டையம் காலிலொலிக்க, வெற்றி வாளானது இடையிற் சிறக்க, மகரகுண்டல மானது காதினில் தயங்கச் சோதிமகுடம் சிரசில் விளங்கத் திருநுதலில் பூதியும் திலகமு மிலங்க, வீரவாகுதேவர் வீரதீர மாய்ச் சிங்காதனத்தில் வீற்றிருந்த திருத்தோற்றம், சத்துரு சங்காரம் செய்ய அவர் சித்தமா யிருந்தன ரென்பதை நன்கு காட்டியது.

இதையெல்லாம் பார்த்த சூரபதுமனுக்கு எவ் வளவு கோபமுண்டா யிருக்கு மென்பதைச் சொல்ல வேண்டுவதே யில்லை! உறுமினன், கறுவினன், அவன் ஓரே கூச்சல் போட்டான். போட்ட கூச்சலால், பூமி முழுவதும் கலங்கினது, ஆகாயமும் நடுங்கினது, ஆர் கலியென்னும் கடலும் குழம்பினது. 'ஆரடா நீ இங்கே அதிக்கிரமித்து வந்திருக்கின்றவன்? அச்சம் பயமில்லாமல், அடக்கமென்பது சிறிதும் காட்டாமல், அகங்கரித்து, ஆரவாரித்துக் கொட்டம் விளைத்துக் கட்டளை கடந்து எனக்கெதிரே தோன்றி, என்னிலும் உயரமாக வீற்றிருக்கின்றனை! என் பேரைக் கேட்ட மாத்திரத்தாலே, எண்டிசைகளும் கிடுகிடுக்கும், அண் டங்களனைத்தும் நடுநடுங்கும், என்னை மதியாத மூவ ருமில்லை, என் ஏவலின்கீழ்ப் பணியாத தேவருமில்லை! ஆயிரத்தெட் டண்டங்களையும் ஓரே கட்டாய்க் கட்டி யாளுபவன் நானென்பது உனக்குத் தெரியாதா?

பூலோக, புவர்லோக, சுவர்லோக, மஹாலோக, ஜன லோக, தபோலோக, சத்திய லோகம் என்கின்ற மேலேழு லோகங்களையும், அதல, விதல, சுதல, தராதல, ரசாதல, மஹாதல, பாதாளம் என்கின்ற கீழேழு லோகங்களையும் ஏழாட்ட மாட்டிப் பம்பரம்போல் எடுத்தெடுத் தாட்டவல்ல என்னை; சூரியனைப் பிடுங்கிச் சந்திரனை இழுத்து நக்ஷத்திரங்களை யெல்லாம் நாலுபக்கங்களிலும் சிதறவடித்துப் பதற வழித்து, நடுநடுங்கி என் ஏவல்களை யெல்லாம் அவைகள் நன்கே விநாடியில் செய்து முடிக்கும் வண்ணம் பணி கொண்டருளும் துணிவுடைய என்னை; அந்தரங் கலங்க, ஆகாயம் சுலுங்கக் கடல்களெல்லாம் குழம்ப, உலகமெல்லாமே ஒருவழிநில்லாது அல்லோல கல்லோலப்பட்டு மயங்கித் தியங்கி மாறுபட்டுக் கூறுபட்டுப் போகும்படி செய்யவல்ல என்னை; மூவரானாலும் சரி முப்பத்து முக்கோடி தேவரானாலும் சரி, கின்னரர், கிம்புருடர், சித்தர், வித்தியாதரர், கருடகாந்தருவர் எவரானாலும் சரி, என் கருத்துக் கிணங்காமல், என் விருப்பத்துக் கிசையாமல், என் கோரிக்கையை ஈடேற்றாமல், என் கொள்கைகளை நிறைவேற்றாமல் போவராயின், அவர்களை யெல்லாம் அப்படி யப்படியே பிடித்து வந்து, ஈனத் தொழில்களிலெல்லாம் ஏவிடக்கூடிய வீரதீர பராக்கிரமம் பொருந்திய என்னை; எவருக்கும் அஞ்சாத என்னை; எவராலும் கொல்ல முடியாத என்னை; எல்லா இயல்புகளும் அமைந்துள்ள என்னை; எல்லாராலும் வணங்கப்படும் என்னை, ஒருசிறிதும் மதியாது ஒரு பொருட் படுத்தாது என்

விலும் உயரமாக, உன்னத ஆதனத்தில் உட்கார்ந் திருக்கின்றனை! நீ யாவன்? உன் வரலாறு யாது? உனக்கிந்தக் கருவம் உண்டாவதற்குக் காரணம்யாது? மட்டித்தனத்தால் நினக்குக் கொட்டம் உண்டா யிற்று, மாறுபடும் அகங்காரத்தால் அஃதுன்னிடம் தோன்றி யிருக்கின்றதா? இப்போதே அடங்கி நீ தப்பிக்கொண்டு ஓடப் போகின்றாயா, என் கத்திக் கிரையாகி நீ ஏமனுலகம் சேரப் போகின்றாயா? சொல்லடா' என்று சூரபதுமன், வீரவாகு தேவரை நோக்கிச் சுடுசினத்தோடே இரைந்து பேசினன்.

இதைக்கேட்ட வீரவாகு தேவருக்கு உண்டான கோபம், இவ்வள வவ்வளவென்று சொல்ல முடியாது. ஆகவே, வீரவாகுதேவர் சூரபதுமனை நோக்கி, 'ஏடா! அஞ்சா நெஞ்சம் படைத்த அகங்காரப் பயலே! சண்டாள மிண்டாள சங்கடப்பயலே! அற நெறிவிடுத்து நீ மறநெறி பிடித்து, நலலோர்களையெல் லாம் நானுவழிகளில் வாட்டியும், மோனம் பூண்டு ஞானத்துறையில் நின்றவர்களுக் கெல்லாம் ஊனம் புரிந்து மானக்கேட்டை விளைத்தும், அந்தரவான வர்களை யெல்லாம் ஆகாயத்திற் பறக்க வடித்தும், அன்னோர் தம் மங்கையர்க் கெல்லாம் அவமானத்தை யுண்டாக்கியும், பற்பல விதங்களில் நீ உற்பாதம் விளைத்து வருகின்றனை? உன்னையும் உன்னைச் சேர்ந்தோர்களையும் பஞ்சு பஞ்சாகப் பதறு வடித்துக் கண்டங் கண்டமாகச் சிதற வடித்து, அதருமத்தை யெல்லாம் ஓட்டித் தருமத்தைத் தல

சிறக்க நாட்டித் தாரணி முழுவதையும் தாங்கியாளுவ தென்றே ஐயன் தோன்றியிருக்கின்றான். அகிலத்தில், அறுமுகப் பெருமான் அவதரித் திருக்கின்றான். பூவுலகில்! உன் அகங்காரமும் உன் ஆரவாரமும் உன் சட்டமும் உன்கொட்டமும் உன் குதூகலமும் உன் கொக்கரிப்பும் உன் ஆகாச் செயல்களும், ஐயன் முன்னே அணுவளவும் சாயவே சாயா! அநீதியென்பது உலகில் ஆகவே ஆகாது என்பதை யும், கடுமை விளைத்துக் கொடுமை செய்வது காசினி யில் உதவவே உதவாது என்பதையும் அரைக்கண மேனும் நீ அகத்திற் கருதவேயில்லை. எடா! அக்கி ரமப் பாவி, அகங்காரக் கொழுந்தே, அதருமமென்ப தற்கென்றே தோன்றிய ஆகாவழிப் பயலே, தரும மென்பதைத் தாரணியில் நிலை நாட்டுவதற்கே கந்தப் பெருமான் இந்தப் பாரில் வந்திருக்கின்றான்; அற மென்பதற்குத் தக்க அஸ்திவாரம்போட வேண்டு மென்றே, அறுமுகப் பெருமான் அவதரித்திருக் கின்றான். வன்ன வன்னமான பாணங்களை நீ என்ன என்ன விதமாய்ப் பிரயோகித்த போதி லும், மலைகள் மலைகளாய்ப் பிடுங்கி அவைகளை மண் ணாங்கட்டிகள் போல விட்டெறிந்த போதிலும், ஆகாயத்தில் பறந்து நீ அமர் செய்தபோதிலும், அந்த ரத்திற் சுழன்று சுழன்று நீ அகோர யுத்தம் விளைத்த போதிலும், ஐயன் வேலாயுதத்தின் முன் அவைக ளொன்றும் செய்யமுடியா. இப்போதும் நீ தப் பேதும் செய்யாமல், மூவர்களை வாட்டாமல், தேவர் களை வருத்தாமல், ஜயந்தனைச் சிறையினின்றும்

நீக்கிப் பயந்தவர்களை யெல்லாம் காப்பாற்றி விடுவை யாயின், தொல்லையுமில்லை, துயரமுமில்லை, யாரும் வருந்த வேண்டியதில்லை, நீயும் சாக வேண்டியதில்லை. ஐயன் தூதன் நான், நல்ல வழியைச் சொல்கின்றேன் கேள்! இவ்வாறு செய்து நீ இன்னலினின்றும் நீங்கப் போகின்றனையா? அல்லது ஆகா வழியிலேயே யுழன்று ஐயன் வேலினால் நீ ஆவி துறக்கப்போகின் றனையா?' என்று நீதியைப் போதித்துக் கொண்டே கோபமாய்க் கேட்டனர்.

இதைக்கேட்ட சூரனுக்கு மிகக் கோபம் வந்து விட்டது. எழுந்தான், இரைந்தான், எல்லா உலகங் களும் நடுங்க ஓரே கூச்சலிட்டான். 'அடா! அற்பப் பயலே, அறியாத பயலே, உனக்கென்னடா தெரியும்? அளவு கடந்து அதிகம் பேசவேண்டியதில்லை! என் உயிருள்ளளவும் ஜயந்தனை நான் விடப்போவதில்லை வந்த வழியைப் பார்த்துத் திரும்பி நீ செல்வை யாயின் உயிருடன் பிழைத்தாய், இன்றேல், மாண் டொழிந்து நீ மண்ணுக்கிரையாய்ப் போய்விடுவாய்! பத்திரம்! ஓடிப்போ' என்று சூரன் கடுங்காரத்தோடே கூவினன். வீரவாகுதேவரும் இதற்குத் தீரமான பதில் கூறினர்: 'அடா சூரா! இழிமனச் சண்டாளா! மழைக்குதவின குடை இடிக்குதவுமென்று கருது வதுபோல், இதுவரைக்கும் உனக்குத் துணையிருந்த வரத்தின் பலம் இனிமேலு முனக் குதவுமென்று ஒரு போதும் நீ கருதாதே. அமரர்களுக்கு நீ அரைக் கணமேனும் துயர் செய்யாதிருந்தால்தான் நீ பிழைப்

பாய், இல்லாவிட்டால், உன் உயிர் போய்விடு மென்று உறுதியாய் நினைத்துக்கொள்! வரங் கொடுத்தவனே அழிப்பதற்கு வந்திருக்கின்றான். பிழைக்க வேண்டுமானால், என் சொல்லைக் கேள், சாக வேண்டுமானால், உன் விருப்பப்படி நடந்து கொள்' என்று வீரவாகுதேவர் தீரமான மொழி களைச் செப்பவும், சூரபதுமனுக் குண்டான கோபம் சொல்லவே முடியாது.

ஆகவே, வீரவாகு தேவரைப் பிடித்துக் கட்டிப் புடைத்து வெட்டும்படி, சூரபதுமன் அசுரர்களுக்குக் கட்டளை யிட்டான். சூரனுக்கு, வீரன் எவ்வளவு புத்தி கூறியும், சூரன் மனம் மாறாதிருந்த தெவ்வண்ண மிருந்ததெனில், காஞ்சிரங்காய்க்கு அமுதூட்டிச் சமைத்திட்டாலும், அதற்குக் கடுங்கசப்பு மாறாத தன்மைபோலும், முக்காலும் காகம் முழுகிக் குளித் தாலும் அது கொக்காகவே யாகாது என்பது போலவு மிருந்தது. சூரன் கட்டளை பிறந்தவுடன், வீரவாகு தேவரை வெள்ள வெள்ளமாய் அரக்கர்கள் சுற்றிக் கொண்டார்கள். அனைவோரையும் வீரவாகுதேவர் அரைக்கணத்திற் கொன்றொழித்து விட்டு, ஆகாயத் திற் கிளம்பி வாகாய்ப் பறக்கத் தொடங்கினர். அவ ருடன் கூடவே, அற்புதமாய் விமானமும் மேற்கிளம் பியது. அரக்கர்கள் அப்போதும் அவரை விடவே யில்லை. அவர்கட்கெல்லாம் தலைவனாய்ச் சதமுகன் தோன்றி எதிர்த்தனன். அவனையும் வீரவாகுதேவர் அதோகதிப்படுத்தி விட்டனர். சதமுகன் மாண்டது

கேட்டு, ஐம்பது வெள்ளக் கணக்கான படைகள் தோன்றி வீரவாகு தேவருடன் வீரதீரமாய்ப் போர் புரிந்தன. அப்படைகளனைத்தினையும் ஐயன் தூதன் அரை விநாடியில் அழித்தொழித்துத் தேய்த்து மாய்த்தனன் பின்னர், வீரமகேந்திர நகரிலுள்ள மாட மாளிகைகள், கூடகோபுரங்கள், மண்டபங்கள், மந்திரங்கள், ஆஸ்தானங்கள், கோயில்கள், விமானங்கள், நந்தவனங்கள், நாடக சாலைகள் முதலான எல்லாவற்றையும், வீரவாகுதேவர் விஸ்வரூப மெடுத்துக் கொண்டு இடித்துப் பொடித்து அழித்து ஒழித்து ஆரவாரஞ் செய்தனர். அற்புதமான நகர முழுவதும் அல்லோல கல்லோலப்பட்டுப் போனதைச் சூரபதுமனறிந்து, சொல்ல முடியாத துயரத்திலாழ்ந்து, என்ன செய்வதென்று தெரியாமல் இதயந் துடித்துக்கொண்டிருக்கும்போது, வீரவாகுதேவரை எதிர்த்து ஆயிரம் வாகுவர்கள் தோன்றினர் மரங்களைப்பிடுங்கி வீரவாகு தேவர் அவர்கள் மீது வீசி, அவர்களனைவோரையும் எமனுலகம் சேர்த்தனர். இதனால், சூரன் துயரம் மேலும் மேலும் அதிகமாயிற்று. தந்தை படும் வருத்தத்தைச் சிந்தையிலுணர்ந்த வச்சிரவாகு என்பவன் பதினாயிரம் கந்துகங்கள் பூண்ட இரதமிசை ஆரோகணித்து வீரனோடு போரிட எழுந்தனன். இருவர்க்கும் சண்டை மிகக் கடுமையாய் நடந்தது. முடிவில், வச்சிரவாகு என்பவனை வானுலகஞ் சேர்ந்தனன். மேலும் மேலும் இடிசேதியே வருகின்றதென்று சூரன் இடிந்திடிந்து வருந்தினன். பிறகு, வீரவாகு தேவர் வெற்றிவேற் பெருமானைக் காண்பான் கருத்

துட்கொண்டு, வீரமஹேந்திர நகரினின்றும் திரும்பி, இலங்கைக் கோட்டையில் வந்து, ஆங்குச் சிறிது நேரம் தங்கி இளைப்பாறினர். சிவபூஜை வேளையில் கரடி புகுந்தது என்று சொல்வது போன்று, யாளி முகன் என்னும் கோரமுகன் அப்போது தோன்றி அமரிடத் தொடங்கினன். இஃதென்ன கொடுமை! இஃதென்ன கோரச்செயல்! ஓய்ந்த ஒருகணத்திலும், சாய்ந்து சங்கரா என்றிருக்க விடாது,—சண்டை யிடுவதற்கென்றே அன்றைப்போதும் சண்டாளனொருவன் தோன்றினன். அந்தோ! ஆயினென்ன, ஐப்பன் தூதனார் அரைக்கணமேனும் இளைப்பாரோ, சளைப்பாரோ, அல்லது, களைப்பாரோ? அஃது ஒருபோது மின்று. அந்தக்கணமே யாளிமுகனை, வீரவாகுதேவர், அந்தகனுலகத்திற்குச் செலுத்தி விட்டனர். வானவ ரெல்லோரும் மலர்மாரிபொழிந்தனர். அந்தரவாசிகள் துந்துபி முழக்கினர். வெற்றிவாகை சூடி, வீரவாகு தேவரும், கொற்றப்பிரானாகிய குமரேசரிடம் வந்து சேர்ந்தனர்.

எந்தை பெருமானார், வீரவாகு தேவரைக் கண்டு மகிழ்ந்து, எல்லாச் சங்கதிகளைப் பற்றியும் கேட்டரு ளினர். சங்கதிகளனைத்தையும் வீரவாகு தேவர் சாங்கோபாங்கமாய்ப் பெருமானுக்குக் கூறினர். தாம் திருச்செந்தூரினின்றும் புறப்பட்டுக் கடலைத் தாண் டத் தொடங்கினதும், ஆங்காங்கே அரக்கர்கள் தம்மை எதிர்த்துத் தம்மோடு போரிட்டதும், அவர்களெல் லோரும் தம்மால் அடிபட்டு உதைபட்டு மாய்ந்

தொழிந்ததும், பின்னர் தாம் வீரமகேந்திர நகர் வளப்பங்களைக் கண்டு மகிழ்ந்ததும், சிறைச்சாலையில் ஜயந்தனைத் தாம் கண்டதும், அவன்பட்ட அவஸ்தைகளைப் பார்த்துத் தாம் மனம் வருந்தியதும், அவனுக்குத் தாம் தேறுதல் கூறினதும், அணுரூபந் தாங்கித் தாம் அரக்கன் சபைக்குச் சென்று மறைந்து நோக்கிக் கொண்டிருந்ததும், அங்கு, ஐயனருளால் அழகிய சிம்மாதனமொன்று தமக்குக் கிடைத்ததும், அதன் மீது தாம் ஆரோகணித்திருந்ததும், சூரன் கோபித்துத் தம்மைத் தூஷித்ததும், தாம் கூறின நன்மதியை அன்னோன் கேளாது பதைத்ததும், தம்மை அவன் வருத்தத் தொடங்கினதும், தாம் அரக்கர்களையெல்லாம் அழித்தொழித்து, வீரமகேந்திர நகரைத் தூளி தூளியாக்கித் திரும்பினதும், மீண்டு வரும் போது வழியில் தாம் சங்காரம் செய்து ஜயக்கொடி நாட்டிக் கொண்டே செந்தின்மா நகரடைந்து ஐயன் திருவடியை அன்போடு பணிந்ததுமாகிய எல்லா விவரங்களையும் வீரவாகுதேவர் எம்பெருமானுக்கு மொழிந்தனர். எம்பெருமானார், எல்லாவற்றையும் கேட்டு மகிழ்ந்து, சூரபதுமனுதியோர் தலைவிதிக்காக மிகவும் பரிந்து, தாம் போரைத்தொடங்குவதே தமது கடமையாகுமென உறுதி கூறி யுத்தத்துக்கு ஆயத்தஞ் செய்தனர். தேவர்களெல்லோரும் திருவருளைச் சிந்தித்துக் குமரக்கடவுளுக்கு மங்களம் கூறி வாழ்த்தி மகிழ்ந்தனர்.

இஃதிவ்வாறிருக்கச் சூரபதுமன், எல்லா விவரங்களையுந் தெரிந்துகொண்டு வருமாறு, முன் விடுத்

திருந்த தூதர்கள் செந்தின்மா நகரடைந்து எல்லாச்
சங்கதிகளையும் அறிந்துகொண்டு, வீரமஹேந்திரபுரம்
சார்ந்து சூரபதுமனுக்கு அவைகளையெல்லாம் எடுத்
தோதுவாராயினர். 'எண்டிசையும் கொடிகட்டியாளும்
ஏகசக்ராதிபதியே கேட்டருள்க! தங்கள் ஏவலைத்
தலைமிசைத் தாங்கிச் செந்தின்மா நகரடைந்து சுந்தரக்
குமரன் தன் சங்கதி அனைத்தையும் தெரிந்து கொண்
டோம். அவரனுப்பிய தூதர் பேச்சைத் தாங்கள்
அவமதித்து விட்டதாக, அப் பெருமானாருக்குண்
டாகி யிருக்கும் கோபத்தை அளவிட முடியாது.
ஆகவே, போருக்கு அவர்கள் ஆயத்தஞ் செய்கின்ற
னர்கள். பூதகணங்கள் புடைசூழ்ந்து நிற்கவும், சிவ
கணங்கள் கட்டியங் கூறவும், இலக்க வீரர்களும்,
அனேக சேனைத் தலைவர்களும், எவ்வெப்புறங்
களிலும் தக்கவாறு ஏற்பாடுகள் செய்துகொண்
டிருக்கவும், ரத கஜ துரக பதாதிகள் மிக மிகக்
குழுமிக் கடல்பொங்கிவந்தது போன்று காட்சி விளைத்
துக்கொண் டிருக்கவும், உதயகிரி முகட்டில் உன்னதச்
சூரியன் தோன்றுவதுபோல, முருகப் பெருமானார்
முகதரிசனம் தந்தனர். அந்தப் பெருமையை யெல்
லாம் அளவிட்டுக் கூறல்முடியாது. ஆயிரம் பணாமுடிக
ளுடைய ஆதிசேடனை தலையசைக்க வல்லவன்;
ஆயிரம் தோள்களுடைய வாணாசுரனை தோளசைக்க
வல்லவன். எம்மால் அப் பெருமைகளைக் கூறல் எள்ளத்
தனையும் இயலாது. அவர் மொழிகளுக்குத் தாங்கள்
திருச்செவி கொடாததால், அவர்கள் படையெடுத்து,

வருவதென்னவோ உண்மை!' என்று அந்தத் தூதர்கள் அக்கிரமப் பாவியாகிய சூரனுக்குக் கூறினர்.

அதன்மீது சூரபதுமனுக்கு யாது செய்வதென ஒன்றும் தோன்றவில்லை. உடனே, தனது தம்பியாகிய சிங்கமுகனையும், புதல்வனாகிய பானுகோபனையும், அமைச்சர்களாகிய மேதிக் கண்ணன், துர்க்குணன், தருமகோபன் முதலானவர்களையும் வரவழைத்துச் சூரபதுமன் ஓர் ஆலோசனைச் சபை கூட்டினன். ஆயிரத்தெட்டு அண்டங்களையும் தான் கட்டியாண்டனனென்கின்ற ஓர் அரும் புகழானது குமரனனுப்பிய ஒரு சிறு தூதனால் போய்விட்டதென்றும், ஊரே அழிந்து பாழே ஆய் விட்டதென்றும், போதும் போதாததற்கு மேலும் மேலும் முனைந்து போருக்கும் வரப் போகின்றனராமென்றும் சூரபதுமன் அவர்களுக்குத் தெரிவித்து ஆலோசனை கேட்டனன். இதனைக் கேட்ட மந்திரிகள் பலவாறு பேசலாயினர். முதலாவது, மேதிக் கண்ணனென்பவன் மேன்மையாயெழுந்து, 'அரும்புகழ் படைத்த பெருந்திறல் மன்னா! ஆறுமுகனை நீ யாரென்று நினைத்துவிட்டாய். மும்மூர்த்திகளும் சேர்ந்து ஒரு தனி மூர்த்தியாய் அவதரித்தவனல்லனோ அவன்? அவனைவெல்ல எவனாலுமாகாது. தனக்கு இணையில்லாத தனிப் பரம்பொருள் அவன். அவனுடன் சண்டையிட ஒருபோதும் நீ நினைக்காதே. கிரவுஞ்சத்தை வதைத்துத் தாரகனைக் கொன்று, அரக்கர்களனைவோரையும் தரை மட்டமாக்கிய,

அற்புதப் பெருந்தகையாகிய அண்ணல் பெருமா னோடு, அரைக்கணமாயினும் நீ பகைதேடிக் கொள் ளாதே. ஒரு சிறு தூதன், சுண்டைக்காய் போன்ற மனிதன், சுண்டுவிரற் பருமனு மில்லாதவன், சுண் டெலி போன்றவனே அவன், சுண்டாங்கி என்றே சொல்லலாம் அவனை—அத்தகைய சின்னஞ் சிறு மனித னொருவனால் அவமான மடைந்தமே போதும். ஆதலினால், ஆருயிர் மன்னா! அற்புத வள்ளால்! ஆறுமுகனோடு நீ போரிடத் துணிதல் வேண்டா. உலகை யெல்லாம் புரக்கும் உத்தமன் அவன்; ஆதியஞ்சோதி அனாதிப் பரம் பொருள் அவன்; அன்பே காட்டி ஆனந்த மடை வோர்க்கு, இன்பநிலையருளும் ஈசன் அவன்; இறைவன் அவன்; காசினியையும் ககனத்தையும் அண்டாண்ட அகிலாண்ட பிரமாண்ட மூதண்டங்களையும், காற் றினிற் கறங்கைப் போலவும், அலைகடலினில் துரும் பைப்போலவும் ஆட்டவல்லஆற்றலுடையவன் அவன். அவனை நீ ஒருபோதும் பகைக்காதே.' என்று நன்மதி கூறிப் பொன்போ லுட்கார்ந்தனன். இதனைக் கேட்ட துர்க்குணனென்னும் மந்திரிக்கு மிகப் பெரிதும் சின மூண்டாய்விட்டது. ஒரு குதிகுதித்து ஓரே கூச்சலிட் டெழுந்தான் அவன். 'எந்தல் பெரு மானே, எல்லார்க்கும் மேலானே! இந்தப் பயல்கள் பேச்சை ஏனோ நீவிர் கேட்கவேண்டும்? பந்திக்கு முந்திக் கொள்வார்கள் இவர்கள், படைக்குப் பிந்திக் கொள்வார்கள். இவர்கள் பேச்சை ஒருபொழுதும் தாங்கள் கேட்க வேண்டுவதில்லை. இந்தக் கணமே

என்னை அனுப்புவீர்களாயின், ஏழுலகத்தையும் ஏழாட்ட மாட்டுவித்து, இளம்பிள்ளையாகிய முருகனைச் சிறைபிடித்து வருகின்றேன் பார்த்தருள்க. வில்லை வளைத்து அம்பைத் தொடுத்து வேகக் கணைகளை நான் நூறாயிரமாய் விடுத்து, மலைகளைப் பிடுங்கிச் சேனைகளின் தலைமேலெறிந்து, முருகன் படைகளை உருவில்லாமற் போகும்படி செய்கின்றேன். இந்தக்கணமே எந்தனக்கு விடைகொடுத்தனுப்புக'' என்று துர்க்குணனென்னும் மந்திரி தனது துர்க்குணத்தைக் காட்டிப் பேசினன்.

இப்படிப் பலபேர்கள் பலவிதமாகப் பேசிக் கொண்டிருக்கும்போது, பானுகோபன் கோபமீறி, அனைவோரையும் அமர்த்திவிட்டுத் தான் பேசத் தொடங்கினான். 'அண்ணா, இவையெல்லாம் என்ன யோசனை ? இந்தப் பயல்களால் ஒன்றுமே சாயாது ! எலி வேட்டைக்குத் தவிலடி ஏதுக்கு ? கையிலாகாத இந்த அசட்டுப் பதர்களெல்லாம், இப்போதுதான் குதித்து என்னென்னவோ கூச்ச விடுகின்றார்கள். நகத்தாற்கிள்ளும் செடியைக் கோடரி கொண்டு வெட்ட வைத்துக் கொள்ளுவது போல், அந்தத் தூதன் இங்கு வந்தபோதே அவனை அடக்கி நசுக்கிப் போடுவதை விடுத்து, இப்போது இவர்கள் என்னென்னவோ செய்துவிடுவதாய் இரைச்சலிட்டுப் பதட்டம் காட்டுகின்றார்கள். இஃதெல்லாம் ஊர் திரண்டு செக்குத்தள்ளினாற்போ லாகுமேயன்றி வேறொன்று. என்னை அனுப்புவீர்களாயின், இந்தக்கணமே

சென்று, ஆறுமுகன் சேனைகளை அடித்துப் புடைத்து விட்டு அனைவோரையும் நம்மிடம் சிறைபிடித்துவந்து சேர்க்கின்றேன். வெளுத்ததெல்லாம் பால் என்று கருத்தில் நினைத்துக் கொள்ளல் கூடாது. இங்கப் பையல்கள் இரைச்சலிடுவார்களை யன்றித் துணிந்து எக்காரியத்தையும் விரைந்து செய்ய மாட்டார்கள். இவர்களை நம்பினால் எந்தக் காரியந்தான் கைகூடும்? பிடித்தால் புளியங்கிளையைப் பிடிக்கவேண்டுமே யன்றி, முருங்கைக் கிளையைப் பிடித்தால் அதனால் என்ன பலனுண்டாகும்? முருங்கைக் கிளை முறிந்துக்கொண்டுதான் விழும். ஆகவே, அண்ணா! இந்த அசடர்கள் பேச்சை நந்தம் மனத்தில் ஒருபொருளாய்க் கொள்ளுதலாகாது. கிரவுஞ்சனைக் கொன்று தாரகனை மாய்த்த அப்போதே என்னை அனுப்பியிருந்தால், போராட்டமிட்டு ஏழாட்ட மாட்டியிருக்கமாட்டேனா? "பானுகோபன்" என்கிற என் பெயரைச் சொன்ன மாத்திரத்தில் பண்ணவர்கட்கும் பல்லுக்கிட்டும், விண்ணவர்கட்கும் மனது நடுங்கும். ஆதலால், தண்ணளிகூர்ந்து என்னை அனுப்பியருள்க! துரும்பைத் தூணாக எண்ணவேண்டாம், மண்ணாங் கட்டியை மலையென்று மயங்கவேண்டாம். வீணான ஆலோசனைகளையெல்லாம் செய்து மனம் நைந்து போவதை விடுத்து, வீர தீர சூர பராக்கிரமனான என்னைப் போருக்கு அனுப்புவீர்க ளாயின், அனைத்தையும் நிர்த்தூளியாக்கி அதோகதிப்படுத்தி வருகின்றேன், ஆறுமுகனைச் சிறைபிடித்துவருகின்றேன். இவ்வாறுசெய்து ஏற்றமடைவதை விட்டு, வீணாக ஏன்

காலம் போக்குகின்றீர்கள்?' என்று பானுகோபன் தனது தந்தையை நோக்கிப் பலவிதத்தாலும் தனது வல்லமையை விளக்கிப் பேசினான்.

இவ்வண்ணம் பானுகோபன், வீராவேசத்துடன் பேசிய பின், சூரபதுமனுடைய மற்றைப் பிள்ளைகளாகிய இரணியன், அக்கினிமுகன் என்பாரும் தமது தமையன் கூறினதற் கிணங்கவே, தமது பிரதாபங்களைக்கூறித் தாம் சென்று வேலவனைக் கட்டிக் கொணருவதாக உறுதிகூறி உக்கிரமாய்க் குதித்தார்கள். சூரனுடைய தம்பியாகிய சிங்கமுகன், அவர்களெல்லோரையும் அமர்த்திவிட்டுச் சில நன்மதிகளைத் தனது அண்ணனுக்குக் கூறுவானாயினன். அண்ணா, நான் தங்கட்கு இளையோனாயினும், அறியாதவனை யாயினும், நான் கூறும் இம் மொழிகளுக்குச் சிறிது செவி கொடுப்பீர்களாக! சரவணபவன் பகை நமக்கொரு போதும் ஆகாது. அண்ணா, தாங்கள், அவனை யாரென்று நினைத்துக்கொண்டீர்கள்? பஞ்ச கர்த்தரும் பராசக்தியும் சேர்ந்து பாலவடிவாய் அவர் பாரினில் அவதரித் திருக்கின்றார்; பாவிகளைக் கொன்று தேவர்களைக் காக்கவே, பரமர் இவ்வாறு திருவுருக் கொண்டு வந்திருக்கின்றார். அண்ணா, இதனை, தாங்களறியாது ஏதேதோ நினைத்துக்கொண்டு போரிடலாமென்று கருதுகின்றீர், பொடிப் பொடியாக்கி விடலாமென்று எண்ணுகின்றீர். இது மிக அழகாயிருக்கின்றது, பெரும் வேடிக்கையா யிருக்கின்றது! ஆகவே, ஐயந்தனை, இப்போதே, சிறையினின்றும் விடுவித்துத்

தேவர்களை ஒருபோதும் வருத்தாமலிருப்பதே தகுதி யாகுமல்லது, நாம் பிடித்த முயலுக்கு மூன்றே காலென்று உடும்புப் பிடியாயிருப்பது ஒருகாலும் சரியான செய்கையாகாது. மேலும், சிவபெருமானுர் வரம் தந்தபோது தம்மாலன்றி வேறெவராலுந் தங்களை அழிக்கமுடியாது என்னும் பொருட்படவன்றோ சொல்லியிருக்கின்றார்? அதனைத் தாங்கள் அகத்தில் வாங்கவில்லைபோ லிருக்கின்றதே, இந்தச் சூது தங்களுக்கு விளங்கவில்லைபோ லிருக்கின்றதே! அந்தச் சக்திதானே இந்தப்போது வேலுருவாகி முருகன் செங்கையிலமர்ந்து நம்மையெல்லாம் முறுக்கி யடிக்கப் பார்க்கின்றது. இதனை யறியாமல் இந்த உளறுவாயர்கள் குளறிக் கொட்டினார்கள் செல்வன், சொல்லுங் கஞ்சனென்று இவர்கள் கூறிய வெற்றுரை யெல்லாம் உப்புக்கு முதவாதென்பதை, உள்ளந் தன்னில் தாங்கள் உறுதியாய்க் கொள்ளல் வேண்டும். குறளி நூறார் கொளுத்தும், ஆனுல் ஒரு வீட்டை அணைக்க அதனுலாகுமா? ஒருபோதும் ஆகவே யாகாது. சொல்வார் சொன்னுல் கேட்பார்க்கு மதியில்லையோ? நன்மையும் தீமையும் நாமே அறிந்து கொள்ள வேண்டாவோ? ஆதலினுல், அண்ணு. ஐயன் குமரன் அழகிய வேலவன், முருகப் பெருமான் மும்மூர்த்திகள் வடிவினன், கந்தன் காங்கயன் சண்முகன் சரவணன், தேவரைக் காப்போன், சேனையின் அதிபன்,—அவனுடைய பகையை ஒருபோதும் தாங்கள் கொள்ளலே யாகாது. அவனுடைய சினம் சிறிது உண்டாயினும், அஃது அண்டங்களை யெல்லாம்

துண்டுதுண்டாகச் செய்துவிடும், சூரியனும் அதனால் 'சுக்கல் சுக்கலாய்ப் போய்விடுவான், சந்திரனும் வெந்து படுசாம்ப ராய்விடுவான், நாமும் நசுங்கி ஊர் பேரில்லாது போய்விடுவோம். ஆகவே, அண்ணா, ஆய்ந்தோய்ந்து பாராமல் [illegible]முத்திற் காலிட்டுக்கொள்ளாதீர்கள்' என்று சிங்கமுகன் சூரனுக்குத் திடமாய்ப் புத்திமதிகள் கூறினான்.

ஆயினுமென்? 'யானைவரும் பின்னே, மணியோசைவரும் முன்னே; கேடுவரும் பின்னே, மதிகெட்டுவரும் முன்னே!' எனக் கூறும் பழமொழிப்படி, சிங்கமுகன் கூறின நன்மதிகளெல்லாம், சூரனுக்கு நாராசத்தைக் காய்ச்சி நடுச் செவியில் ஊற்றினது போன்றிருந்தது. சிங்கமுகன் சொன்னவற்றையெல்லாம் சூரன் இந்தக் காதில்வாங்கி அந்தக் காதில் விட்டுவிட்டுக் கோபச் செந்தீயைக் கொழுந்துவிட்டெரியச் செய்து, சிங்கமுகனைக் கடிந்து சீறிச் சினந்து, கோபக் கொடுமொழிகளை வாரி வாரிக்கொட்டினான்: 'ஏடா! அற்பப்பயலே! அறிவிலாப்பயலே! வெட்கங்கெட்ட வீணாவீணனே! ஈனமானமில்லா இழிதகையாளனே! அச்சம் ப[illegible]ல்லாமல், அவமானமென்பது சிறிதேனும் தோன்றாமல், நீ எனக்கு இதம் போதிக்கவந்தனை போலும், உளறிக்கொட்டி ஊராராய்ச் சிரிக்க வைக்கப் பார்க்கின்றனை போலும்! அவனுக்குப்பயந்து, ஆயிரஞ் சிங்கமுகம் படைத்த நீ, ஆயிரத்தெட் டண்டங்களையும் கட்டியாளும் எனக்குப் பின்பிறந்த நீ, கோர முகத்தைக் காட்டுவதனாலேயே அனைவோரையும்

கொன்று மென்று தின்று விடவல்ல நீ, இரண்டாயிரங் கைகளாலும் உருண்ட உலகங்களையெல்லாம் உருட்டி உருட்டி விழுங்கவல்ல நீ, நடுநடுங்கி இப்போ தென்னவோ நாட்டிய மாடுகின்றனையே! இது மிக்க விந்தை! இது பெரிய வேடிக்கை! கலியாணத்திற்குப் பந்தற்காலை நட்டுவிட்டு, மழைபோலக் கண்ணீர்விட்டு அழுது தொலைக்கின்றனையே! அந்தக் குட்டிப் பையனும், அறிவில்லாத பேய்க் கூட்டங்களாலும் என்ன புரண்டு விடப்போகின்றது, என்ன அனர்த்த முண்டாய் விடப்போகின்றது? பல்லைக்காட்டிக் கெஞ்சுகின்றாய்! 'மானமிழந்த பின்வாழாமை முன்னினிதே' என்பதைச் சிறிதும்கவனியாமல்,'மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார், உயிர்நீப்பர் மானம்வரின்' என்பதைச் சிறிதும்யோசியாமல்,உயிர்மாத்திரம்வாழ்ந்து உழன்று கொண்டிருக்க யோசிக்கின்றனை போலும்! வேதாவானாலும் சரி, அவனைப் பெற்ற தாதாவானாலும் சரி, என்னை அசைக்க எவராலும் முடியாது. ஆதி சிவன் ஓதித்தந்த வரப்படி, நூற்றெட்டு யுகங்கள் வரைக்கும் ஆபத்தும் எனக்கொன்றும் 'வாராது', காற்றும் என் மேல் படாது என்பதைச் சித்தத்தில் நீ செம்மையாயுணர்ந்திருக்கின்றனையேனும், ஒரு சிறிதும் அறிவில்லாது,ஒரு சிறிதும் விவேகமில்லாது,சுத்த சூன்யமான மனதைப், பாழடைந்து பரிபக்குவமில்லாத மனதை என்னிடம் காட்டி, உன்னதமான தத்துவத்தை உயர உயரப் பறந்து போதிக்க வந்தனைபோலும்! சாட்டையில்லாது பம்பரம் ஆடுமோ, காரணமில்லாது காரியம் கிழுமோ? அதனைப் போன்றே சிவம் வேறு, சக்தி

வேறு என்றும், சத்தி வந்து என்னைக் குத்திக்கொன்று விடும் என்றும், என்னென்னவோ தத்துவம் ஏதேதோ போதிக்க வந்துவிட்டனையே? பளா பளா! நன்றா யிருக்கின்றது! இத்தகைய இழிதொழிலைப் புரிந்து உயிர் வாழ்வதைவிட, ஓடிப்போய் உயிர் விட்டு விடுவது நலம்! ஏடா! அதைரியமே குடிகொண்ட அறிவில்லாப் பையலே! இனிமேலென்னிடம் இவ் விதமான அசட்டுப் பேச்சைப் பேசாதே; ஆகாவழிப் பையலென்று பேரெடுக்காதே; தேவர்களை நானென் னவோ விடப்போவதில்லை; ஜயந்தனை நானென் னவோ சிறைநீக்கப் போவதில்லை! குட்டிப் பைய னையும் குள்ளரான மனிதர்களையும் ஆட்டிப்படைத்து அனர்த்தப்படுத்தி விடுகின்றேன் பார்!' என்று சூரபதுமன் பேசினான்

இவ்வாறு சூரபதுமன் பேசக்கேட்ட சிங்கமுகச் சூரன் மனதிலுண்டான துயரத்திற்கு அளவென் பதேயில்லை. தான் எவ்வளவுதான் நற்புத்தி கூறின போதினும், கறந்தபால் கறந்தபடியே உள்ள உண்மை களை உள்ளபடியே எடுத்துரைத்த போதினும், தன் அண்ணனாகிய சூரபதுமனுக்கு அகம் மாற வில்லை யன்றே என்னும் துயரமே சிங்கமுகன் மனத்தில் துயர் செய்யா நின்றது. ஆகவே, சிங்கமுகன் தன் மனதைச் சிறிது சாந்தப்படுத்திக் கொண்டு, தான் தெரியாது சொல்லிவிட்ட குற்றத்திற்காகத் தன்னை மன்னிக்கும் வண்ணம் தன் தமையனாகிய சூரபதுமனை மிகப் பெரிதும் வேண்டிக்கொண்டு தன்னூர் சென்றனன்

சூரபதுமன் போருக்கு வேண்டிய ஆயுத்தங்களெல்லாம் செய்யும்படி தன் சேனைத் தலைவர்கட்கும் மற்றுமுள்ளோர்கட்கும் கட்டளை யிட்டனன். ஆறுமுகப் பெருமானும் அதருமப் பூண்டுகளையெல்லாம் அழித்துவிடுவதாய்க் கூறி, வேலைக் கரத்திலேந்தி * வேலை கடந்து செல்லத் தீர்மானித்தனர். விண்ணவர்க்கும் பண்ணவர்க்கும் மண்ணவர்க்கும் எல்லார்க்கும் இனி மங்களமே யுண்டாகுமென்று, இருடியரும் வானவரும் இதயங் களிகூர்ந்தனர்.

---

* வேலை—சமுத்திரம்.

## போரூரான் போர்முடித்த வேடிக்கை.

சிவசுப்பிரமணியர் தமது பரிஜனங்கள் புடை சூழ்ந்துவர, வீரமகேந்திர நகர் நோக்கிப் போருக்குப் புறப்பட்டனர். அன்ன வாகனத்தின் மீது நான்முகனாகிய பிரமன் ஒருபால் விளங்கவும், கருடவாகனத்தின் மீது திருமால் மற்றொருபால் விளங்கவும், சிவகணங்களும் பூதகணங்களும் திரண்டுமொய்க்கவும், வீரவாகு தேவரும் இலக்கத்தொன்பது பேர்களும் புடைசூழ்ந்துவரவும், முருகப் பெருமானார் திருத்தேர் மீது ஆரோகணித்துத் திருச்செந்தூரி னின்றும் புறப்பட்டுக் கடல்கடக்கத் தொடங்குவா ராயினர். இந்தக் காட்சி காணருங் காட்சியா யிருந்தது. அனேக காததூரம் நீரிற் கால்படாமலே கடல்வழி நடந்து, இலங்கையுந் தாண்டிப் பின்னும் பலகாதங் கடந்து, மிக்க ஆரவாரத்துடன் அனைவோரும் வீரமஹேந்திரநகருக் கருகிற் சார்ந்தனர். முருகப் பெருமானார் தமது திருக் கூட்டங்களோடும், வீரமஹேந்திர நகருக்குள்ளே போயிருத்தல் விரும்பப் படுவதன்றாகுமென்றும், அந்த நகருக்கு வெளியே தனிப்பாசறை

ஒன் றமைத்துக்கொண்டு அதில் வீற்றிருத்தலே தகுதி யுடைய தாகு மென்றும் திருமாலும் அயனும் பெரு மானுருக்குக் கூற, அவரும் அதுவே சரியாகு மென்று சம்மதித்துத் தேவத்தச்சனுகிய விசுவகருமனை நோக்கி ஒரு தனிப்பாசறை அமைத்துத் தரும்படி கட்டளை யிட்டனர். அன்னனும் அக்கட்டளையைச் சிரமேற்றூங்கி, ஏமகூட'மென்னும் பாசறை ஒன்றை இந்திரலோகம்போ லமைத்துத் தந்தனன். ஆங்குக் காணப்பட்ட அற்புதமான வீதிகளும், அழகிய விளக்குகளின் சோதிகளும், செழுமையான சாலை களும், சீருடன் விளங்கிய பூஞ்சோலைகளும், வாவி களும், கூபங்களும், தடாகங்களும், தாவர வினைதங் களும், ஆவணங்களும், காவணங்களும், மகர தோர ணங்களும, கல்லாற்சமைத்த வாரணங்களும், அனை வோரையும் ஆச்சரியமடையும்படி செய்தன.

இஃதிங்ஙன மிருப்ப, நாரதபகவான் வீரமகேந்திர நகருட்போந்து சூரபதுமனைக் கண்டனர். நாரத பகவா னில்லாத புராண மெஃதிருக்கின்றது? கலக மில்லாமல் உலகமில்லை யென்பதும், சேட்டை யில்லா மல் பிரதிட்டை யில்லையென்பதும் அவருடையகொள் கைக ளல்லவா? ஆனல், அவர் மஹானுபாவ ராத லானும்,மாபெருந் தவசிய ரானதானும், நல்ல எண்ணத் தோடே நல்ல கலகமாய் மூட்டுவதேயன்றிக் கெட்ட எண்ணத்தோடு யாதொரு துட்டகாரியமும் செய்வ தில்லை. ஆகவே, அப்பெரியார் இப்போது சூரபதும னைக்கண்டு அவன் சுள்ளாப்பை அதிகரிக்குமாறு

செய்தனர் : 'ஆயிரத்தெட் டண்டங்களையும் கட்டியாண்ட அசுரேசனே ! இன்னும் நீ என்ன உறங்கிக்கொண் டிருக்கின்றனையோ ? ஆறுமுகன் உன்மீது போரெடுத்து வந்திருக்கின்றான் ! ஏமகூடப் பாசறை யொன்றை உன் நகரத்தின் வடபுறத்தி லமைத்து, யானை சேனை பரிவாரங்களுடனும் ஆரவாரஞ் செய்துகொண் டிருக்கின்றான் ! நீ இன்னும் தூங்கிக்கொண் டிருக்கின்றது வேடிக்கையாகவே யிருக்கின்றது !' என்று நாரதபகவான் சிறிது குதூகலத்தியமாய்க் கூறவே, சூரபதுமனுக்குக் கோபம் மிகவே மூண்டெழுந்தது. 'அறியாப் பையல் அகங் கொண்டனன் போலும் ! போனாற் போகின்றானென்று 'ஏனோ தானோ'வென இதுகாறும் இருந்தேன் ! அளவுக்கு மிஞ்சியும் இப்போது அமர்தொடுக்க வந்தனனோ ? நன்று நன்று, மிகநன்று ! இனியாகட்டும் விடுவேனோ நான் !' என்று சூரபதுமன் சுடுகோரமாய்ப் பேசினன். இதைக்கேட்ட நாரதர் விலவிறச் சிரித்து 'உன் சாந்தம் மிக நன்றாயிருக்கின்றது ; தாரகனைக் கொன்று கிரவுஞ்சத்தை நாசப்படுத்தி, உன்மகனையும் தன் தூதனாலேயே மாய்வித்து உன் நாடு நகரத்தையும் அவனாலேயே அழித்தொழித்து—இவ்வளவும் செய்த ஈசன் புதல்வனைச் சின்னஞ் சிறுவனென்றும், அவனாலே என்ன செய்ய முடியும் என்றும், மிக அசட்டையாய் நீ கருதுவது மிக அழகாகவே யிருக்கின்றது !' என்று ஏளனமாய்க் கூறினர். இதனால் சூரபதுமனுக்குக் கோபம் மேலும் மேலும் புகைந்தெழுந்தது ; ஆகவே, அவன் நாரதரை நோக்கி, 'அப்படியா, நான் பார்க்கின்

றேன்; தாங்கள் சென்றருள்க! அந்த அறுமுகனை இந்தக்கணமே பிடித்துவந்து, சிறைச்சாலையில் நான் அடைக்காவிட்டேனானால், என்பெயர் சூரபதுமனாகுமா? அவனையும் வாட்டுகிறேன், அவனைச் சார்ந்தோர்களையும் * வீட்டுகிறேன்!' என்று கோபத்தோடு குதித்துப்பேசினன். நாரதரும், தாம் வந்த நோக்கம் தக்கபடி முடிந்து விட்டதென விடைபெற்றேகினர்.

பின்னர், கோரமனத்தை யுடைய சூரன், வருணனை அழைத்துவர ஏவலாளரை விடுத்தனன். அவர்கள் சென்று, சூரபதுமன் கட்டளையை வருணனுக்குக் கூற, வருணனும் நடுநடுங்கி ஓடிவந்து சூரபதுமன் காலில் வீழ்ந்தான். சூரபதுமன் கோபத்தோடே வருணனை நோக்கி, 'ஏடா! வருணா! ஏழைக் குறும்புத்தனம் செய்தனையே! என் எதிரிகள் இங்கு வந்து சேரும்படி எப்படி நீ வழி விடுத்தனை? என் உத்தரவின்றி, எவ்வாறு நீ இவ்வாறெல்லாம் செய்தனை? நீ வேடக்கும்பிடு, வீண்கும்பிடெல்லாம் போடுபவனென்று, எனக்கு நன்றாய் இதயத்தில் தெரிந்தேயிருக்கின்றது! உனக்குத் தக்கதண்டனை விதிக்கப் போகின்றேன் பார்!' என்று உறுமிக் கறுவி ஓரே கூச்சலிட்டான். அதனைக்கேட்டு வருணன் மிக நடுங்கிப்போயினன். அவன் மிக்க வணக்க ஒடுக்கத்தோடே சூரபதுமன் காலினில் வீழ்ந்து, 'எந்தலே! என்மீது தாங்கள் கோபித்துக் கொள்ளுதல் ஆகாது'

* வீட்டுகிறேன் = கொல்கிறேன்.

போருரான் போர்முடித்த வேடிக்கை.]

வருக்கிளைத்தவன் பிள்ளையார் கோயிலாண்டி' என் பதற்கிணங்க, ஏழையாகிய என்மீது இவ்வளவு சினங் கொண்டால், எவ்வண்ணம் நான் தாங்குவேன், எவ்வாறு நான் சகிப்பேன்! நீர்மேற் கால்படாமலே, மேலே தாவியே ஆகாயத்திற்பறப்பதுபோலப் போனார் கள் அவர்கள்! ஆகவே, என் அதிகாரம் அவர்க ளிடத்தில் ஒன்றுமே சாயாமற்போயிற்று. என்னை மன்னிக்கவேண்டும். என்னைக் காப்பாற்றவேண்டும்.' என்று பன்முறை வணங்கிப் பலவாறு வேண்டிக் கொண்டனன். போறைப் போகின்றனென்று சூரன் வருணனைப் போகவிடுத்தனன். இவ்வாறு சாக்குப் போக்குகள் சொல்லி வருணன் தப்பிக்கொண் டோடினது எவ்வண்ண மிருந்ததெனில், ஒருவன் ஒரு குளத்திற்போய்க் குளிக்கும்போது, முதலை ஒன்று அவன் காலைப் பற்றிக்கொள்ள, அதன் வயிற் றைப் பக்குவமாய்த் தடவிக்கொடுத்து, அதனிடத்தி னின்றும் தப்பித்துக்கொண் டோடுவதுபோல் இருந்தது.

இதுநிற்கச் சூரன் இனிச் சண்டை தொடங்கு வதே சரியாகுமென்று தீர்மானித்துத் தனது புதல்வ னாகிய பானுகோபனை அழைத்து, 'என் அருமைப் புதல்வனே! எதிரிகள் நமது நகரத்தை நெருங்கி விட்டார்களென அறிகின்றேன். உன் வீரதீர புஜபல பராக்கிரமத்தைக் காட்ட இதுவே நல்ல சமயம். இவன் பாலன்முன் என் பாலனாகிய நீசென்று சண்டை யிட்டு மண்டையுடைப்பதே தகுதி, அவன் தைரி

யத்தைப் பார்த்தனையா? அவன் அகங்காரத்தை அறிந்தனையா? என் வன்மையை அறியாது, என் தன்மையை உணராது, செக்கோட்டி போன்ற அந்தச் சின்னஞ் சிறுபையல், என்னைப்பற்றி ஒன்றுமே அறிந்துகொள்ளாது, இங்கு வந்து ஏறு மாறுகளும் தாறுமாறுகளும் விளைக்கின்றனன் பார்! கொள்ளிபோற் கொட்டாத தேளைப் பிள்ளைப்பூச்சி யென்றல்லவா, உலகத்தில் நினைத்துக் கொள்வார்கள்! சிங்கக்கூட்டங்கள் சூழ்ந்திருக்கும் குகையைநெருங்கி, நரிக்கூட்டங்கள் தாவி வந்தாற்போல நம்மை எதிர்க்க. அந்தப் பையனும் அவன் கூட்டங்களும் நம்நகரத்தை நெருங்கிவந் திருக்கின்றார்கள்! நீ இப்போதே பெரும் படை கொண்டுசென்று, அவர்களைக் கூறுகூறாக்கி நீறுநீறாக்கி மார்றார்களை யெல்லாம் கூற்றுவனுக் கிரை யாகச் செய்துவரக் கடவை!' என்று கூறினன். பானுகோபனும் போர்க்கோலங்கொண்டு சென்றனன். இதை நாரதரா லறிந்த குமரப்பெருமானார், வீரவாகு தேவரைப் போர்க்கோலங்கொண்டு செல்லுமாறு பணித்தனர். பெருமானார் கட்டளையைச் சிரமேற் றாங்கி வீரவாகுதேவரும் போர்க்கோலங்கொண்டு செல்ல, இரண்டு சேனைகளுக்கும் பெரும்போர் தொடங்கிவிட்டது. இந்தச் சண்டையின் அகோர பயங்கரம் யாராலும் சொல்ல முடியாது. இந்தப் போரில் அனேக அசுரர்கள் மடிந்தார்கள், அனேக பூதர்கள் மாண்டார்கள். முதலில் அனலி யென்கின்ற அசுரப்படைத் தலைவனுக்கும், சிங்கன் என்கின்ற பூதத்தலைவனுக்கும் போர் நிகழ்ந்தது. பெரும்போர்

விளைத்துக் கடுங்கொலை நிகழ்த்தியபின், சிங்கன் அனலியைக் கொன்றனன். அனலி மடியவும், சண்டன் என்னும் அசுரன் சிங்கனை எதிர்த்து வந்தனன். தண்டு கொண்டு சிங்கன் மோதச் சண்டனும் உயிர் மாய்ந்தனன். மேலும் தண்டகன் முதலான பூதப்படைக்கு எண்ணிறந்த அசுரர்கள் இரையாகி மாண்டனர். இதையெல்லாம் பார்த்து மனம் சகியாத பானுகோபன், தானே நேரில் எதிர்த்துவர, அவனைப் பூதப்படைத்தலைவருளொருத்தனாகிய உக்கிரன் என்பவன் எதிர்த்தனன். இருவர்க்கும் கடும்போர் நிகழ்ந்தது. முடிவில் உக்கிரன் இறந்தனன்; அவன்பின் வந்த தண்டியும் மாய்ந்தனன். பூதர்கள் அனேகர் மூர்ச்சையாய்க் கலைந்தோடிப் போனார்கள்.

இவ்வண்ணமே, பின்னர்வந்த பூதத் தலைவர்களும் பூதப்படைகளும் பானுகோபன் தீய கணைகளினால் மயங்கி மாய்ந்து தயங்கிச் சாய்ந்து போகவே, வீரவாகு தேவர் தாமே பானுகோபனை நேரில் எதிர்த்து வந்தனர். இவரைக் கண்டதும் பானுகோபனுக்கு எரிகனல்போற் சினம் கிளம்பிவிட்டது. ஆகவே, அவன் வீரவாகு தேவரை நோக்கி, 'ஏடா! வீரவாகு, எங்கிருந்தடா நீ எமனைப்போல் தோன்றினாய்? உன் ஓட்டமெல்லாம் இங்கு ஒன்றுமே சாயாது. முன்னம் நீ வந்து, முதல்தரமான துன்மார்க்கச் செயல் புரிந்து, ஊரைக்கொளுத்தி நாட்டைப் பாழ்படுத்தி, என் நகரத்தையெல்லாம் என்னென்னவோ ஆக்கிவிட்டு, அசுரர்களையெல்லாம் ஆயிரமாயிரக் கணக்காய்க்

கொன்றொழித்து வென்று வந்தோமென்று தருக்கிச் செருக்குக் கொள்கின்றனையோ ? அந்த எண்ணத்தை நீ இப்போது அரைக்கணமேனும் கொள்ளவேண்டிய தில்லை. உன்னை இப்போதே என் வாளுக்கிரையாக்கு கின்றேன் பார் !' என்று கோடிகோடியாய்க் கணை களை மாரிபோற் பொழிந்தான். உடனே இருவர்க்கும் பெரும் சண்டை மூண்டுகொண்டது. வீரவாகுதேவர் அசுரனையும் அசுரப்படைகளையும் மிகவும் வாட்டி வருத்தவே, பானுகோபன் வேறொரு வழியுங்காணாது மேகத்தில் மறைந்து மோகனாஸ்திரம் விடுத்தனன். மோகனாஸ்திரமும் அதிவேகமாய் வந்து வீரவாகு தேவர் முதலான அனைவோரையும் மாள்விக்காத குறையாய் மயக்கத்தி லாழ்த்திவிட்டது. இதைக் கண்ட தேவர்கள் ஒன்றுந் தோன்றாது திகைத்து வருந்தி, உன்மத்தம் பிடித்தவர்கள்போல் ஒருபுறம் விழித்து நின்றார்கள். ஆயினும் அவரவர்கள் மனக் குறையை ஆட்கொள்ளுவதே தமது கடமையாய்க் கங்கணங் கட்டிக்கொண் டிருக்கின்ற குமாரப்பெரு மானார், வீரவாகுதேவரையும் பூதப்படைகளையும் காத் தருளக் கடைக்கண் பார்வை புரிந்து, மோகனாஸ்தி ரத்தின்மீது அதி மோகனாஸ்திரத்தை விடுத்தனர். ஆச்சரியகரமாய், அஃது, ஆகாயமெங்கணும் பரவிச் சென்று, அசுரர்க ளெல்லோரையும் நானாபக்கங் களினும் சிதறவடித்துப் பதறச்செய்து, வீரவாகு தேவர் முதலானவர்களையும் வெற்றியோடு எழுப்பி விட்டது. பானுகோபனும் பயந்து நடுநடுங்கினான் ! பக்கத் துணையாய்த் தனக்கு உற்றவர்க ளனைவோ

யையும் அவன் இழந்து, மேகமண்டலத்தில் மறைந்து தன் அரண்மனைபோய்ச் சேர்ந்தனன். வீரவாகு தேவர் விஜய வேலவனுடைய மகிமையை யுன்னி யுன்னி, உடல் குழையவும், உரோமங்கள் சிலிர்க்கவும், என்பெலா நெக்கு நெக்குருகவும், இதய முருகி இசைகள் பயிலவும் பெருமான் புகழைப் பெரிதும் போற்றுவா ராயினர்: "ஹே! சங்கரன் மதலாய், சண்முகப்பெயராய், திருமான் மருகா, தேவர்கள் தலைவா! உன் பெருமையை என்னெனக் கூறுவேன்! உன் மகிமையை ஏதெனச் சாற்றுவேன்! தளர்ந்தாருடைய தளர்வை நீக்கி, வதைவாருடைய வாதையைப் போக்கி, அனைவோர்க்கும் நீ ஆதரவு செய்வதாலன்றோ, ஆபத்பாந்தவ னென்னும் பெயரை அற்புதமாய் நீ பெற்றிருக்கின்றனை! ஹே! ஆபத்பாந்தவா, அனாதரக்ஷகா, ஆதியஞ்சோதியாய், அன்பே வடிவானோய்! ஏழையே மாகிய எங்கள்மீது, இன்னருள் புரிந்து, பொன்னருள் சுரந்து, கடைக்கண் நோக்கம் பாலித்து எமைக் காத்தநின் தன்மையை, நின் வன்மையை என்னென வியப்பேம்! ஏதென மொழிவேம்! பாவத்தைப் போக்கும் பரிசுத்தப் பொருளே, ஆபத்தை நீக்கும் ஆருயிர்த்துணையே, அருமருந்தன்ன திருவருட் செல்வா, அழகும் அன்பும் ஒருமிக்கத் தோன்றினாய்! உமையாள் பாலனாய் உலகினில் தோன்றிப் பவசாகரம் கடக்கத் தனிப்பெரும் புணையாய் நீ விளங்குகின்றனை! கோரத்தொழில் செய்யும் சூரனதியோர் நலியக் கூரிய வேலொடும் நீ குவலயத் துதித்தனை! உம்பரும் முனிவரும் வம்பரால் நையாதவண்

ணம் அம் பொன் சேவடிபால் ஆட்கொள நீ நின்றனை ! கருணைமுகம் தழைக்கக், கற்பகம்போல் கரம் விளங்க, அமுதவாரிபோல் அருளை நீ தருகின்றனை ! எம்மைக் காத்தனை ! எம்மைக் கரையேற்றினை ! எம்மை ஈடேற்றினை ! எம்மை இசைபாட வைத்தனை ! உன் பொன்னருள் வாழ்க ! உன் புகழ்த்திறம் வாழ்க ! உன் நன்னயம் வாழ்க ! உன் நளினம் வாழ்க ! உன் புனிதம் வாழ்க ! உன் வதனம் வாழ்க ! உன் நயனம் வாழ்க ! உன் நல்லருள் வாழ்க !' என்று வீரவாகுதேவர் வெற்றிவேலவர் மீது, நேத்திரத்தில் நீர் பெருகத் தோத்திரம் கூறி மகிழ்ந்தனர்.

இஃதிங்ஙனமிருப்ப, மேகமண்டலத்தில் மறைந்து பானுகோபன் வீடுபோய்ச் சேர்ந்ததும், எல்லாச் சங்கதிகளையும் சூரபதுமனறிந்து, இதயம் தன்னில் மிகவும் வருந்தி, ஊரையெல்லாம் ஒரு கொடியிற் புரட்டி விடுவதாகக் கூறிப் போருக்குப் புறப்பட ஆயத்தமாயினன். பல லக்ஷக்கணக்கான அசுரர்களும் பல லக்ஷக்கணக்கான பூதர்களும் சண்டைக்கு மிண்டிக் கொண்டு நின்றனர். இந்தக் கடும்போரில், பூதப் படைத்தலைவனாகிய உக்கிரன் என்பவன் சிங்கமுகன் மைந்தனாகிய அதிசூரனையும், வீரவாகுதேவர் அசுரேசனையும் கொன்று பெரும் வெற்றியைக் காட்டவே, சூரபதுமனே நேரில் முனிந்து வந்து, வீரவாகுதேவராதியோரைச் சோகமுறச் செய்தனன். இதைக் கண்ட கந்தவேள் மனம்பொறாராய், அனிலன்விடும் தேர்மீது ஆரோகணித்தருளி, சூரபதுமனெதிரில்

சுந்தர வீர சுகுமார சுப்பிரமமாய்த் தோன்றினர். படைகளை விலக்கிப் பாலகுமாரன் எதிர்தோன்றினது எவ்வண்ண மிருந்ததெனில், மேகங்கள் விலகச் சூரியன் ஒளிர்வதுபோன் றிருந்தது. சூரபதுமன் முற்பிறப்பில் இயற்றி யிருந்த நல்வினைப்பயனல் சுந்தரக் குமரனைத் தரிசிக்க நேர்ந்ததாயினும், அவனியற்றிய அளவிடமுடியாத தீச்செயல்களின் பயனுல் அவன் அஞ்ஞானத்தில் அமிழ்த்தப் பெற்றுத் தேவசேனுதிபதியிடம் வாதிட்டுப் போரிடத் தூண்டப்பட்டான். ஆகவே, அவன் முருகப் பெருமானை நோக்கி, 'ஏ! பாலா! என்ன தைரியங் கொண்டு என்னிடம் சண்டைக்கு வந்தனை! பாலன் நீ: பாமலை போல்பவன் நான்! சின்னஞ் சிறுபையல் நீ: ஆயிரத்தெட்டண்டங்களையும் கட்டியாளும் அதிபல பராக்கிரம அரசன் நான்! காற்றில் பறக்கும் இலவம்பஞ்சு போல்பவன் நீ: அண்டங்களெல்லாம் துண்டுதுண்டாய்ப் போனுலும், ஆகாயமும் பூமியும் தலைகீழாய்ப் புரண்டாலும், அசைக்க முடியாதபடி நிலைத்திருப்பவன் நான்! ஆலோசனை யில்லாமல் சிறுபிள்ளைத்தனமாய் ஆட்டம் போடுபவன் நீ: அகோர பயங்கரமான தவங்களெல்லாம் புரிந்து, அரனுரையும் என்பால் அதிவேகமாய் ஓடிவரச்செய்து நூற்றெட்டு யுகங்கட்குக் குறையாமல் ஆட்சிபுரியவும் அனைத்தாரும் அதிகாரங்களையும் செலுத்தவும் வரப்பிரசாதங்கள் பெற்றவன் நான்! உண்மை என்னவோ இவ்வண்ணமிருக்க, இளங்கன்று பயமறியாது என்கின்ற வண்ணம் என்னிடம் போரிடத் துணிந்தது மெத்த விந்தையா யிருக்கின்றது.

என்னுடன் போரிட உன்னாலே யாகுமா? கடலிற் துலாக்கட்டி இரு கை சலிக்க இறைத்தாலும், ஒரு கை நீராவது வடிக்கமுடியுமோ?' நீ ஓடிப்போய் ஆடிப்பாடி விளையாடுவதை விட்டு, என்னிடம் போரிடவந்தது ஏறுமாறான செய்கையே யாகும். இன்னும் நீ என் பேச்சைக் கேளாது, புகைந் தெழுந்து போரிட வருகுவையாயின், உன்னையும் உன் சேனைகளையும் சின்னாபின்னமாய்ச் சிதறவடித்துப் பஞ்சுபஞ்சாகப் பதறவழித்துக் கழுகிற்கும் காகத் திற்கும் கூகைக்கும் பருந்திற்கும் நாய்க்கும் நரிக்கும் பேய்க்கும் பிசாசுக்கும் பெருவிருந் தளித்துப் பேர் பெறுகின்றேன் பார். ஓடிப்போ பாலா, ஒழிந்துபோ நீயா!' என்று கடுகினத்தோடு கடுகடுத்துப் பேசி னன்.

இதைக்கேட்ட சரவணபவனாரும் 'சரிதான்! சண் டையிட்டுப் பார்த்தால் சாமர்த்தியம் விளங்கிவிடும்' என்று சுருக்கமாய்க் கூறிச் சுடுசரங்களை மழைபோற் பொழிந்தனர். சூரபதுமனும் வீரதீரத்தோடு தன்னா லானவரைக்கும் சமரிட்டுப் பார்த்தான். ஒன்றும் முடியவில்லை; அவனால் ஏதொன்றும் ஆகவில்லை. பெருமானாருடைய சர்வ சக்தித்துவத்திற்கு முன் பேயனுடைய வன்மையெல்லாம் யாதொரு பயனும் தராமற் போயிற்று. ஆகவே, சூரபதுமன் தனது அஸ்திரசஸ்திரங்களை யெல்லா மிழந்து வெட்கத்தால் தலைகுனிந்து நின்று காற் கட்டைவிரலால் நிலத்தைக் கீறிக்கொண் டிருந்தனன். அப்போது முருகப்பெரு

மூர்த்தி அவனை விளித்து, 'ஏடா! சூரா! நன்றாய் நிமிர்ந்து நன்றாய் நோக்கிப் பார்! அகத்தால் நீ அறிவிழந்து, மதத்தால் நீ மதிமயங்கிப் பித்தம் தலைக்கேறினது போலத் தத்துப் பித்தாவென்றுளறி: என்னை வைது, என்னை வசைகூறி, என்னை நிந்தித்து, என்னை அவமதித்து என்னென்னவோ பேசினாய், ஏதேதோ குளறினாய். வல்லோனுக்கு வல்லோன் தொல்லுலகிலுண்டென்பதையும், நீ அரைக்கணமேனும் அகத்திற் பதிக்காமல், கள்குடித்த பேய்போலும், தேன் குடித்த நரிபோலும், மதுவருந்தின மர்க்கடம் போலும், சினம்பொங்கிய தீபரைப்போலும் குதித்துங் கூத்தாடி ஏசிப்பேசி ஏறுமாறுகள் விளைத்துத் தாறுமாறு புரிகின்றனை. வல்லமையையெல்லாம் நல்ல காரியத்திற் செலுத்துவதை விட்டு, வரப் பிரசாதங்களையெல்லாம் தகாவழியிற் செலுத்துவையாயின், அறக்கடவுளே உன்னை அரைவிநாடியிற் கொல்லாதா? இப்பொழுதாயினும் நீ ஜயந்தனைச் சிறையினின்றம் விடாவிட்டால், உன்னையும் உன்னைச் சேர்ந்தோர்களையும், உன் யானை சேனை பரிவாரங்களையும், உன் மந்திரிகள் தந்திரிகள் சேனைத் தலைவர்களையும் என் சக்தி வேலாயுதத்திற்கு உற்ற இரையாக்கி விடுவேன்! தனக்கெதிரி யாருமில்லையென்று தம்பிரான்போல் தலைவிரித்தாடி அகங்காரக் கொழுந்தாய் அக்கிரமமே புரியும் உன் உடலைக் காகமும் கழுகும் கொத்தித் தின்னவும், நாயும் நரியும் பற்றிப் பிடுங்கவும், பேயும் பூதமும் பிளந்து விழுங்கவும், யாவருங் கண்டு வாய்திறந்து நகைக்கவும் இந்தக்கணமே செய்துவிடவல்லேன் யான்! என்ன சொல்லுகின்றாய்

சூரா! ஜயந்தனை விடப்போகின்றனையா, வந்ததைப் படப்போகின்றனையா?' என்று நன்மதி கூறி அவன் மறுமொழியை எதிர்பார்த்தனர்.

ஆனால் சூரனை வாய்திறந் தொன்றும் பேச வில்லை. அவன், தான் நிராயுதபாணியாகவும் திக்கற்றவன் போலும் நின்றுவிட நேர்ந்ததை நினைந்து நினைந்து வருந்தி வருந்தி மெல்லத் தன் வீடுபோய்ச் சேர்ந்தனன். உப்பிட்ட பாண்டம்போல் சூரன் உள்ளம் நைந்து அனல்வாய்ப்பட்ட மெழுகுபோல் உருகி உருகிக்கொண் டிருக்கும்போது வீரர்களும் பூதர்களும் அவனது நகரத்தை அழித்துப் பாழ் படுத்தினார்கள். இதனால் சூரபதுமனுடைய துயரம் மேலும் மேலும் பெருகிக்கொண்டே யிருந்தது. இதைக்கண்ட பானுகோபன் தன் தந்தைக்குச் சமாதானம் சொல்லியும், சூரபதுமனுக்கு மனம் தேறவில்லை. புலிச்குருளை எலிக்கடிக்குப் பயந்து நடுங்குமோ என்றும், யானைபடுத்தால் குதிரை மட்டமாவது இராதா என்றும், குழந்தைப் பருவத்திலேயே எட்டிச் சூரியனைப் பிடித்துத் தொட்டிலில் வைத்துக் கட்டிக்கொண்ட தனது வீரலை மடக்க ஒருவராலும் முடியாதென்றும், ஆனால் குட்டிப்பாம்பானாலும் மட்டத்தடி யொன்றுவதுகொண் டடிக்க வேண்டுமென்று சொல்லுகின்ற கொள்கைப்படி, தான் படையெடுத்துப் போய்க் குமரக்கடவுளைப் பிடித்துக் கொண்டு வருவதிற் சந்தேகமில்லையென்றும் பலவிதமாய்ப் பானுகோபன் வீரமொழி கூறிப் பெருத்த சைனியத்தைத் திரட்டி யழைத்துக்கொண்டு போர்க்குச் சென்றனன்.

யுத்தகளத்திற்கு அவன் சென்று வீரவாகுதேவரைப் போருக்கழைத்து மாயப்படை விடுத்து எல்லாச் சைனியங்களையும் கட்டிச் சுத்தோதகக் கடலிலழுத்தி விட்டனன். இந்த வீரச்செய்தியையும் தன் புதல்வன் வெற்றிக் கொடிநாட்டினதையும் சூரன் கேட்டு மனம் மிக மகிழ்ந்தனன். ஆனால் தேவர்கள் இதனால் அடைந்த துயரம் சொல்லமுடியாது. வெண்ணெய் திரண்டுவரும்போது தாழியுடைந்து போனதுபோலாயிற்றே என்றும், கைக்கெட்டினது வாய்க் கெட்டாமற் போயிற்றே என்றும் தேவர்களெல்லோரும் நனிமிகத் துயருற்றார்கள். நாரதபகவான் வேகமாக ஓடிவந்து, ' சண்முகப் பெருமானே, கேட்டருள்க! நாம் செய்த அனைத்தாம் செயல்களும் விழலுக் கிறைத்த நீராகப் போய்விட்டதே! யானைகளைப் பிடிக்க வேடர்கள் செய்துவைத்த படுபள்ளத்தைக் கவனியாது, அவைகள் தாவிச்சென்று அதனில் வீழ்வதுபோன்று, பாதகன் செய்த மாயச்செயலைக் கவனியாது, வீரவாகுதேவரும் அவரது சைனியங்களும் சேர்ந்து அதிற் சிக்கிக்கொண்டு சுத்தோதகக் கடலில் அமிழ்ந்து கிடக்கின்றனர். அவர்களைக் காப்பது ஐயனாகிய நினது கடன்!' என்று அறுமுகப்பெருமானார் திருமுன்னர் அறிவித்துக் கொண்டனர். ஐயனும் தனது அழகிய வேலாயுதத்தை விடுக்க, அது வாயுவேக மனோவேகமாய்ப் பறந்து சென்று, கடல்களையெல்லாம் வற்றச்செய்து திடமுடன் வீரரெல்லோரையும் மீட்டுக்கொண்டு வந்து சேர்த்தது. வீரர்களெல்லோரும் வெற்றி வேலைச் சிந்தமுவந்து பக்திசெய்து துதித்தனர்.

சூரனே மனமுடைந்து மாழ்கினன். பானுகோபனைக் கொல்லாது திரும்புவதில்லை யென்று வீரவாகுதேவர் தீரமாய்ச் சபதஞ் செய்துகொண்டனர்.

உடனே, வீரர்களும் பூதர்களும் சென்று வீர மகேந்திர நகரின் மதில்களையிடிக்கத் தலைப்பட்டனர். இதைக்கண்ட சூரபதுமன் வெகுண்டு புலிமுகனென்பவனைப் போருக்கனுப்ப அவனும் மடிந்தனன். வீரர்களும் பூதர்களும் வீரமகேந்திர நகருக்குத் தீ வைத்து விட்டார்கள். நகர முழுவதும் பற்றியெரியும் போது, அதனை அவிக்குமாறு சூரன் சப்தமேகங்களை ஏவினன். வீரவாகுதேவரோ வடவாக்கினி விடுத்து அந்த மேகங்களையெல்லாம் சிதற வடித்தனர். இதனால் சூரனது கண்கள் சிவந்து நெருப்புப் பொறிகளை வீசின. தன்னை மறந்து அவன் சன்னதங்கொண்டெழுந்தபோது, அவன் மகனாகிய இரணியனென்பான் அவனைத் தடுத்துச் சில நன்மொழிகளைக் கூறலாயினன்: 'அண்ணா! ஆறுமுகனை நீ யாரென்று நினைத்துக்கொண்டனை! திரிமூர்த்திகளும், சக்தியும் ஒன்றுகூடித் தேவதேவனாய் அவதரித்தவனே அப் பேரருளாளன்! அவனை வெல்ல உம்மாலு மாகாது, வேறு யாராலும் ஆகாது! இரும்பை எவ்வண்ணம் செல்லானது அரிக்க முடியாதோ, அவ்வண்ணமே, சிற்பர தற்பர குருபரனாகிய குமரனை வெல்ல எவராலு மாகாது! சமுத்திரத்தில் வீழ்த்தப் பட்டவர்கள் எவனது வேலாயுதத்தினால், எவனது அருளினால் பிழைத்து அக்கடலி னின்றும் உயிர் தப்பினார்களென்பதைத் தெரிந்தும் இவனிடம் நாம் பகை

காட்டலாமா? அண்ணன்செய்த மாயமெல்லாம் அவனிடம் அவலமாய்ப் போயிற்றே! அதற்குமுன்னே, சிற்றப்பன் செய்த சண்டையிலும் வெற்றியடைந்தவன் யாவன்? தலையறுபட்டவன் எவன்? நாம் என்ன பாடுபட்டுச் சண்டையிட்டாலும், அறுமுகனிடம் யாதொன்றும் சாயாது. பரம்பொருள் அவன். பக்தசகாயன் அவன். அவனுக்குக் கெடுதிவிளைக்க அரைக்கணமும் நினைக்காதீர்! ஆறுமுகனிடம் நீர் பகைதேடிக் கொள்ளாதீர்! படைத்த வரங்களையும் பாழ் விறைத்துவிடாதீர்! இந்தக் கணமே ஜயந்தனை விட்டு விடுக; அன்றேல் வந்ததைப் படுக!' என்று, இரணியன் சூரனுக்கு இதமான மொழிகள் கூறினான்.

இதைக்கேட்ட சூரன் கடுகடுத்து, வெடுவெடுத்து, இரணியனை நோக்கி, 'எடா! அகந்தை மிகக்கொண்ட அறியாத பையலே! எறும்பைப் பூதமென்றும், ஈயைப் பேயென்றும் கருதி என்னிடமா நீ இத்தகைய ஈனப் பேச்சைப் பேசவந்தனை! என்ன விபரீத காலமடா உனக்கு இந்தத் துர்ப்புத்திவந்தது? பித்துப் பிடித்ததா, உன்னைப் பேய்தான் பிடித்ததா? குட்டி மனிதனுக்கும் குறளின் கூட்டங்களுக்குமா அடங்கி நான் ஒடுங்கி நடப்பவன்? மானங்கெட்டும் உயிர்வாழ வேண்டுமென்று என்மகனாகிய நீயா இதயத்தில் கருதுவது? ஆட்டிற்குப் புலியடங்குமா? எலிக்குப் பூனை பயப்படுமா? அசட்டுப் பயல்களுக்கு அமரேசனாகிய நானா அடங்குவது? என் உப்பைத்தின்றும், ஏன் உனக்கு உணர்வில்லை? என் உதிரத்திற் பிறந்தும் ஏன் உனக்குச் சௌரியமில்லை? குட்டிப் பையனுக்கா

என்னைக் கும்பிடும்போடச் சொல்லுகின்றனை? குமா னென்னும் சிறுபையலுக்கா என்னைத் தலைவணங்கி, அவன் தாளில் வீழச் சொல்லுகின்றனை? என் வரப் பிரசாதத்தின் வன்மையாலே, என் தபோபலத்தின் மகிமையாலே, நினைத்த மாத்திரத்திலே கணக்கில்லாத சரங்களைப் பொழிந்து, பகைவர் கூட்டங்களைப் பஞ்சு பஞ்சாக்கி விடுவேன்; எதிரிகளையெல்லாம் என்பென்பாக உதிர்த்துவிடுவேன்! ஈனப்பேச்சைப் பேசிக் கொண்டு இனி என் எதிரில் நில்லாதே!" என்று கூற்றுவனைப் போலக் கடுமையாய்ப் பேசினான்.

இதனைக்கேட்ட இரணியன் தனது தந்தையின் அறியாமைக்காக மிகப்பெரிதும் இரங்கி, மனம் சலித்துச் சினம் மிகுந்து போருக்குப் புறப்பட்டனன். ஆறுபுயமுடைய இரணியன் சரிதை முழுவதும், வீரவாகு தேவருக்கு நாரதர் கூறினார். அவன் மாயவித்தைகள் கற்றதும், மாசில்லாத வரங்கள் பெற்றதும், சண்டனுலகத்தைப் பொடிப்பொடியாக்கினதும், குபேரனுலகத்தைக்கொள்ளையடித்ததும், தேவர்களை யலறச் செய்து திக்குதிக்காய் அவர்களைஓட்டி வாட்டி வதைத்ததும், ஆனால் அவன் குமரன் பதத்துக்குக் குறைவில்லா அன்புபூண்டதும், தன் தந்தைக்கு அவன் தக்க புத்திகள் போதித்ததும் அதை அவன் கேளாமற் போனதுமாகிய எல்லாச் சங்கதிகளையும் வீரவாகு தேவருக்கு நாரதர் கூறிப் போருக்கு அனுப்பினார். இரணியனுக்கும் வீரவாகு தேவருக்கும் இணையில்லாத பெரும்சண்டை மூண்டுகொண்டது. இச் சண்டையில் இரணியன் தோல்வியடைந்தனன். பிறகு

தன்னுயிரைக் காத்துக்கொள்வதற்கும், இறந்துபோ வார்க்கு ஈமக்கடன், கருமக்கிரியைகளைச் செய்து முடிப்பதற்கும் இரணியன் ஒரு மீனுருவாக மாறிக் கடலில் ஒளித்துக்கொண்டனன். இந்தச் சேதியை அறிந்த அக்கினிமுக னென்பான் அமர்க்களத்திற்குப் போந்து பெரும்போரிட்டுத் தானும் மடிந்தனன். ஆனால் அந்தப் போரில் வீரவாகுதேவர் தம்பிமார்களா கிய எழுவர் இறந்துவிட்டனர். இதை அறிந்த வீர வாகுதேவர் சாலவும் மனம் வருந்திக் கதறினார்: 'ஆரு யிர்த்தம்பியரே, அருமைச் சோதரரே! என்னைவிட்டு நீவிர் எப்படிப் பிரிந்து போனீர்கள்? இந்தப் பிரி வாற்றாமை எந்தனைப் பெரிதும் வருத்துகின்றதே! பிடாரிப் பிள்ளையைப் பேய் அடிப்பது எங்காயினும் உண்டா? உங்களுக்கு மரணம் எந்த விதத்தில் நேர்ந்த தென்பதை, ஒரு சிறிதும் அறியாமல் என் உளம் வாடு கின்றது! என் செய்வேன்! என் தம்பிமாரே! எங்குத் தான் சென்றுள்ளீர்! எவ்வண்ணமா யிருக்கின்றீர்! ஒன்றும் அறியேனே' என்று வீரவாகுதேவர் பதறிக் கதறிப் பதைபதைத்துப் புலம்பினர். பின்னர் எமன் மீது மிகப் பெருஞ் சினங் கொண்டு, 'ஏடா ஏமா! எப்படியடா என் தம்பியரைப் பிடித்துச் சென்றாய்? சூல டமருகத்தோடு கபாலமழு வேந்திய சுடலையாடி யாகிய சுந்தரேசனை வழிபட்ட மார்க்கண்டனைப் பிடிக்கவந்து, காலா லுதைபட்ட கதையை இதற்குள் நீ எப்படி மறந்துவிட்டனை? ஐயன் நுதற்பொறி யிற் பிறந்த அறுமுக னடிய ரல்லோமா யாங்கள்! இப் பொழுதே என் தம்பியரை எப்படியாயினும் கொடு வந்து சேர்த்தா லாயிற்று! இன்றேல் உன் நகரம்

இன்றே பாழ்போயிற்று!' என்று ஒரு நிருபத்தை வீரவாகுதேவர் எழுதிவிடுத்தனர். அதைக் கண்ட அந்தகன் விதிர் விதிர்த்து நடு நடுங்கி, எங்கெங்கும் தேடி எழுவரைக் காணாது, இறுதியில் ஈசனுலகத்தில் அவர்களைக் கண்டு பிடித்து வீரவாகு தேவரிடம் கொண்டுவந்து சேர்த்து, 'ஐயனே, என் மீது சினம் கொள்ளவேண்டியதில்லை. தான் சாக மருந்து தின்பா ரெவராயினு முளரா? தங்களிடம் பகைமை பாராட்டித், தயித்தியருக்கா நான் சயித்தியோபசாரஞ் செய்வேன்! யான் ஒருபோதும் தங்கட்குத் தீங்கு நினையேன்! தங்களைச் சேர்ந்தோர்களுக்கும் கொடுமை புரியேன்! என்னைக் காத்துங் கரையேற்ற வேண்டும்' என்று பொன்னடியில் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு தன்னுலகு சேர்ந்தனன்.

இரணியனிறந்த சேதி கேட்டுச் சூரனுடைய மூவாயிரம் புதல்வராகிய அசுரர்கள் போர்க்களத்திற்குப் போந்து, விஜயன் முதலிய வீரர்களுடன் பொருதுமாண்டனர். பின்னர் தருமகோபனென்னும் மந்திரியும் போருக்கு வந்து அவனும் மடிந்தான். இவற்றையெல்லாம் கேட்டுப் பானுகோபன் தன் தந்தையாகிய சூரபதுமனிடம் வந்து, 'அப்பா, நான் கூறுவதை அருள் சுரந்து கேட்டருள்க. கந்தப்பெருமானை எந்த வழியினும் நீவிர் ஏளனமாய்க் கருதல் கூடாது. அவன் தேவதேவன், திருவருட்பெரியோன், அவன் பரம் பொருள்! அரன் திருநுதலினின்றுமெழுந்த அக்கினிப் பொறியாலே உண்டானவன் அவன்! அதனால் தான், நான் புரிந்த இந்திர ஜால

மஹேந்திர ஜாலங்க ளெல்லாம் ஏதும் அவனிடம் பயன்படா தொழிந்தன; அசுரர்க ளெல்லோரும் அப ஜயப்பட நேரிட்டது! சுத்தோதகக் கடலில் அவன் சேனைகளைச் சுருட்டிக் கொண்டுபோய்ப் போட்டும் அனைவோரும் உயிர்பெற்றுத் தரைமீது நின்று விட்டார்கள்! இஃதெல்லாம் என்னவிந்தை! எந்தையே, நீவிர் எம்மீது இரக்கங்கொண்டு, ஜயந்தனைச் சிறையி னின்றும் நீக்கித் தேவர்களையும் வருத்தாது விடுத்துச் சண்முகனோடு நட்புகொண் டிருத்தல் வேண்டும்!' என்று பாதத்தில் வீழ்ந்து பன்முறைகேட்டுக் கொண்டான். எவ்வளவு தான் சொல்லியும் பாதகன் மனம் இரங்கவேயில்லை. ஆகவே, பானுகோபனைப் பார்த்துச் சூரபதுமன் சீறிவிழுந்து, 'நல்லறிவில் லாது நடுநடுங்கிச் சாகுபவனே! அடா! பானுகோபா! எனக்காநீ புத்தி சொல்ல வந்தனை? அறியாப் பைய னுக்கும் அவனைச் சார்ந்த குறளின் கூட்டங்கட்கும் அடங்கி, நாமா, ஒடுங்கி நடப்பது? மானமிழந்து வாழுவதைக்காட்டினும் உயிரை யிழந்து சாதல் மேலன்றோ? அறிவிழந்து, உணர் விழந்து, மதியிழந்து, மானங்கெட்டு, ஈனமடைந்து, இந்தப் பேச்சை என்னிடம் பேச வந்தனையே! பானுகோபன் என்னும் பெயர்போய், பதர்களின் முதல்வனென்னும் பெயரே உனக்குக் கிடைத்துவிடும். இனி என் முன் நில்லாது இப்போதே ஓடிப்போ!' என்று வெடுவெடுத்துப் பேசினன். இதனல் பானுகோபன் மனத்தில் மிகவும் வெறுப்படைந்து சலிப்படைந்து வீரவாகுவை யெதிர்த்துப் போருக்குச் சென்றான். அகோர பயங்கர யுத்தம் இருவர்க்கும் அநேக

நாழிகை நடந்தது இறுதியில், வீரவாகுதேவர் வாளினுக்குப் பானுகோபன் இரையானான். முருகப் பெருமானார் மிகவும் மகிழ்ந்து, வீரவாகுதேவரை வியந்து, 'ஏ! பானுகோபனைக் கொன்ற பராக்கிரமசாலியே! தம்பி யுடையான் படைக்கஞ்சான் என்பது உன்னாலேதான் உண்மை மொழியானது. உனக்கென்ன வரம் வேண்டும் கேள்!' என்று அருள்மொழி கூறினார். இதைக்கேட்ட வீரவாகுதேவர் இறைவனடி பணிந்து, 'பெருமானே! நுந்தம் பொன்னடி வழுத்தும் புண்ணியமே என்றென்றும் என்னுள் நிலைத்திருப்பதாக வரம் தந்தருளவேண்டும்' என்று கேட்டுக்கொண்டனர். 'அவ்வண்ணமே யாகுக' என்று பெருமானார் மனமுவந்து வரமளித்தனர். பானுகோபன் மடிந்த செய்தியைக் கேட்டுச் சூரபதுமனும் பதுமகோமளையும் அழுதுபுலம்பி அளவில்லாத துயரத்துள் ஆழ்ந்தனர்.

உடனே, சூரபதுமன் முன்னிருந்ததைக் காட்டிலும் பன்மடங்கு சினங்கொண்டு, தூதரை அனுப்பித் தன் தம்பியாகிய சிங்கமுகனை வரவழைத்தனன். அவன் வந்து அனைத்தாகும் சங்கதிகளையும் அறிந்துகொண்டு, மீண்டு மொருமுறை தன் அண்ணனுக்கு நற்புத்திகளைக் கூறக் கருதி, 'என் அண்ணா! ஏழுலகத்தையும் கட்டியாளும் ஏந்தலே! நான் சொல்லும் வார்த்தைகளை நன்றாய்ச் செவி மடுத்துக் கேட்டருள்க! சண்முகநாதனைச் சாமானிய மனிதனாய்க் கருதக்கூடாது என்று நான் முன்னமே சொல்லவில்லையா? என்பேச்சைத் தட்டிக்கொண்டு இகல்

விளைக்கச்சென்றீர்: என்னவாயிற்று? கொடுக்கொடுந்தேள்போல நீர் பிடிக்கிழந்து தலைகுனிந்து நின்றதன்றியும், பாம்பானது அடுக்கடுக்காய் முட்டையிட்டு, உடைத்துடைத்துத் தின்பதுபோல, மைந்தர்கள் மூவாயிரவரையும் எமனுலகம் அனுப்பினீர்! நாம் செய்த அநியாயத்தினாலேதான் நாசங்கள் ஏற்பட்டுக்கொண் டிருக்கின்றன! அற்பநாசம், சொற்பநாசமா? மாடமாளிகை யிருந்ததெல்லாம் போய்த் தரைபோடுதளர மட்டமானது போன்று அனைத்தும் பாழாய்ப் படுசூனியமாய்ப் போயிற்றே! பானுகோபன் செத்தபிறகு பாரில் நமக்கென்ன விருக்கின்றது? பூமியில் இன்னும் போர்விளைக்கக் கருதுதல் தகாது. இனிமேலாயினும் இடும்பு விளைப்பதை விடுத்து நாம் நாதன்பால் நட்புரிமைகொள்ளுவதுநல்லது; அவ்வாறு செய்வதனால் மலைபோல் வந்த துயரமெல்லாம் பனி போல் நீங்கிவிடும் என்பதிற் சந்தேகமில்லை! அண்ணா, என் வார்த்தையை இன்னும் நீர் தட்டாதீர்!' என்று இதமொழி கூறி எதிரே நின்றனன். மூர்க்கனாகிய சூரபதுமன் சுடுசினத்தோடு பதில் கூறவே, சிங்கமுகன் வெகுண்டு போருக்குப் புறப்பட்டனன். சிங்கமுகன் செய்த யுத்தம் மிகவும் பயங்கரமானதா யிருந்தது. அவன் பூதங்களை வாரி ஆகாயத்தி லெறிந்தனன்! வீரவாகுதேவருள்ளிட்ட அனைவோரையும் அவன் விசையான கணைகளாற் கட்டி உதயகிரியி லெறிந்தனன். இவை யெல்லாம் கேட்டு முருகப் பெருமானே போரிட அவன் முன் வந்தனர். அப்போதும் சிங்கமுகன் பூதர்களை வாரி வாரியுண்டு விலாப் பெருத்து நின்றனன். ஆயினும் ஐயன் முன் அற்பன் யாது

செய்ய முடியும்? குமரக்கடவுள் சமரிடத் தொடங்கி, அசுரர்களெல்லோரையும் அதோகதிப்படுத்தி, அம்புகளை விடுத்து வீரர்களையும் பூதர்களையும் உதயகிரியினின்றும் கொண்டுவந்து சேர்த்து, இறுதியில் சிங்கமாமுகனை வச்சிராயுதத்தால் மாய்த்தனர். தேவசேனாதிபதி மீது தேவர்கள் பூமாரி பொழிந்தனர். ஐயன் பெருமையைப் புகழ்ந்து அனைவரும் வாழ்த்துக்கூறி மங்களம் பாடினர். சூரபதுமன் சொல்லொணாத் துயரக் கடலி லாழ்ந்து கதறிப் புலம்பினன்.

பானுகோபன் இறந்துபட்டதும், சிங்கமுகன் செத்தொழிந்து சிவலோகம் சேர்ந்ததும், சூரபதுமனுடைய காரத்தையும் கோரத்தையும் அதிகப்படுத்தினவேயன்றி, அவனுக்குச் சிறிதேனும் புத்திவரும்படி செய்யவில்லை. ஆகவே, அவன் தானே போருக்குச் செல்லப் புறப்பட்டனன். அவ்வாறு தானே சென்று சமரிடத் தொடங்குதற்கு முன் தனக்குத் துணையாக வருமாறு அனைத்தண்டங்களிலுமுள்ள அசுரர்களெல்லோருக்கும் செய்தி அனுப்பினன். அக்கட்டளைக் கிணங்க அண்டத் தசுரர்களெல்லோரும் கணக்கு வழக்கில்லாதபடி, அனேககோடி வெள்ளங்கள் கொண்ட தொகையினராய், எள் விழவும் இடமில்லையென்று கூறும்வண்ணம் எங்குப் பார்த்தாலும் நிறைந்துவிட்டனர். சூரபதுமன் அவர்களையெல்லாம் கண்டு மன மிக மகிழ்ந்து அழகிய தேர்மீ தாரோகணித்துப் போர்க்கோலங் கொண்டனன். அற்புதமான பொற்புள்ள மற்றோ ரிரதமீது ஆறுமுகப் பெருமானும் போருக்கு ஆயத்தமாயினர். ஆயின் சிவ

கணங்களுக்கும் பூதகணங்களுக்கும் அண்டத்தசுரர்களைக் கண்டவுடன் அக மிக நடுங்கிப்போயிற்று. அண்டத்தசுரர்களின் பயங்கரத் தோற்றத்தையும் பாதகச் செயல்களையும் கண்டு, வீரர்களும் பூதர்களும் பதைபதைத்து விதிர்விதிர்த்து நடுங்கும்போது, திருமால் தோன்றி அவர்களுக்குத் தைரியங் கூறினர். ஈசன் நுதற்பொறியி னின்றும் எம்மான் அவதரித்துள்ளதும், விராட்புருட சொரூபமாய் விளங்கி அவர் விஸ்வரூபங் காட்டினதும், தாரகாசுரனை வதைத்ததும், சிங்கமுகனை மாய்த்ததுமாகிய எல்லாவற்றையும் அறிந்தவர்கள் அண்டத் தசுரர்களைக் கண்டு எள்ளத்தனையும் அஞ்சவேண்டுவதே யில்லையென்றும், அவர்கள் யாவரும் பெருமான் கைவேலிற்கு இரையாகிப் போயொழிவார்க ளென்றும் இருடிகேசன் திடப்படுத்திக் கூற, வீரர்களும் பூதர்களும் ஒருவாறு மனம் தேறினார்கள்.

பிறகு வீரப்படையும் சூரப்படையும் சண்டைக்கெதிர்ந்து மிண்டிக் கொண்டன! சுப்பிரமணியக் கடவுளும் சூரபதுமனும் எதிரெதிர் தோன்றிப் படைகளைச் செலுத்திக்கொண் டிருந்தனர். மூவர்களை மூனைந்துவந் தெதிர் நின்று, நூறாண் டெதிர்த் தழித்திடினும், ஆயிரத்திலொரு பங்கேனும் குறையாது என்று சொல்லும்படி, அவ்வளவு அதிகமான வெள்ளத்தொகைகள் கொண்ட அண்டத்தசுரர்க ளெல்லோரும் அதிக பயங்கரமாய் ஒன்று சேர்ந்துகொண்டு, ஐயனை எதிர்த்து அமரிடத் தொடங்கினர். அண்டத்தசுரர்களின் பயங்கரத் தோற்றம் ஆதிசேட

றாலும் சொல்ல முடியாது. யானைமுகத்தவர் பலர்: பூனை முகத்தவர் பலர்: புலி முகத்தவர் பலர்: எலி முகத்தவர் பலர்: மர்க்கட முகத்தவர் பலர்: குக்குட முகத்தவர் பலர்: பெருச்சாளி முகத்தவர் பலர்: பெரிய யாளி முகத்தவர் பலர்: மகிடமுகத்தவர் பலர்: சகடமுகத்தவர் பலர்: வட்டிகை முகத்தவர் பலர்: ஒட்டகை முகத்தவர் பலர்: மண்டூக முகத்தவர் பலர்: மாயமுகத்தவர் பலர். இத்தகையோர் எண்ணில்லாத பேர் வந்தனர். வாடைக்காற்றில் அகப்பட்ட இலவம் பஞ்சினைப் போலவும், சண்டமாருதக் காற்றில் அகப்பட்ட கொசுக்கூட்டங்களைப் போலவும், அண்டத்தசுரர்களையெல்லாம் பெருமானார் அதோகதிப்படுத்தி விட்டனர். மேலும், பற்பல அண்டங்களினின்றும் பற்பலவிதமாய் அசுரர்கள் புற்றிலிருந்தும் ஈசல் புறப்படுவதுபோலப் புறப்பட்டுக்கொண்டிருக்கவும், அவர்களனைவோரையும் முருகப்பெருமானார் அடித்துத் தொலைத்தொழித்து, அண்ட வழிகளையும் அடைத்து விட்டனர். பின்னர் சூரபதுமன் சுப்பிரமணியப் பெருமானாரோடு நேரில் நின்று போரிட்டு அண்டவழிகளை மீண்டும் திறந்துவிட்டனன். வந்தவர்களையும் பெருமானார் அந்தகன் உலகத்திற் கனுப்பி விட்டனர். இப்போது சூரபதுமனுக்கு உண்டான கோபம் இவ்வளவினதென்று இயம்பவே இயலாது. ஆகவே, முருகப்பிரானுடன் சூரபதுமன் பெரும் போர் புரிந்தனன். இவன்செய்த கடுஞ்சமர் மிகவும் விந்தை வாய்ந்ததா யிருந்தது. சூரபதுமன் பல்வேறுருவங்களை யேற்றுச் சுப்பிரமணியப் பிரானோடு

அமர் புரிந்தனன். மலையைப் போன்றும், கடலைப் போன்றும், மத்த கஜத்தைப் போன்றும், பருத்த சிங்கத்தைப் போன்றும், மழைமின்னலிடியைப் போன்றும், மகிடம் மேட முதலியவற்றைப் போன்றும் மாயப்போர் சூரன் புரிந்தவிதம் யாதெனச் சொல்லலாகும்? ஞானஸ்திரம் கொண்டு நாதன் அம் மாயைகளை யெல்லாம் அழித்துத் தொலைக்கவே. சூரபதுமன் அண்டங்கட்குள் எல்லாம் புகுந்து புகுந்து மறைந்து மறைந்து மாயச்சண்டையை மனம்போனவாறெல்லாம் செய்தனன். பெருமானும் அவன் பின்னை தொடர்ந்து தொடர்ந்து பெரும்போர் விளைத்து மிக வேடிக்கை விளைத்தனர்.

அதன்மீது, சூரபதுமன் தன் ஜபம் சாயாதது கண்டு, மாயையை நோக்கித் தியானஞ்செய்ய மாயையுந்தோன்றி, யாது வேண்டுமெனக் கேட்டனள். செத்தவரெழுவதாகத் தக்க வரமளிக்குமாறு சூரன் வேண்டினன். சஞ்சீவி பருவதத்தைக் கொடுவந்தால், சமரிற் செத்தவர்கள் உயிர் பிழைப்பார்களென்று மாயை கூறச் சூரபதுமன் அவ்வாறே செய்யவும், சிங்கமுகன், புலிமுகன், கரிமுகன், எரிமுகன், பானுகோபன், தருமகோபன் முதலான எண்ணிறந்த அசுரர்கள் மீண்டும் உயிர்பெற்றுப் போருக்கு வந்தனர். அவர்களையு மொருகணத்தில் ஐயன் துவைத்துப் போக்கவும், சூரபதுமன் சக்ரவாகப் பறவையி னுருக்கொண்டு சண்டைக்கு வந்தனன். இறையவரான முருகப்பிரானும் இந்திரனை மயிலாக வரும்படி மொழிந்து, அம் மயிலின்மீது

ஆரோகணித்துச் சக்ரவாகத்தோடு பொருதுசென்று
ஓடவிட்டடித்து அதனைச் சாடித் தொலைத்தனர்.
பின்னரும் சூரன், அவனிபோலும், அலைகடல்
போலும், கனலைப்போலும், காற்றைப்போலும் பற்பல
உருவங்கள் தாங்கி உற்பாதமாய்ச் சண்டைவிளைக்க
அந்த மாயைகளையும் கந்தப்பெருமானார் போக்கி
யருளினர். அப்புறம், சூரபதுமனுக்கு ஞானக்கண்
திறந்தது. நாதனைக்கண்டு நெஞ்சார அவன் துதித்
தான். ஈசனுமவனே, எல்லார்க்கும் இறைவனுமவனே,
தலைவனுமவனே, தற்பரமான சிற்பரம் பொருளு
மவனே என்று சூரன் உள்ளுக்குள் அறிந்து உத்த
மனை நெஞ்சில் நத்திப்பாடினான். ஆயினுமென்? ஆதியி
லிருந்து வாட்டிய அகோரகன்மம் சூரனை மேலும்
மேலும் வாட்டி மதியை மயக்கி மறுபடியும் போரிடத்
தூண்டிற்று. ஆகவே, மீண்டும் மீண்டும் வேறுவே
றுருவமடைந்து தாண்டவமாடிக்கொண்டே சூரன்
போர் விளைத்துக்கொண்டு அண்டகடாகம் அனைத்
தாகும் உலகங்களும் சுற்றிச்சுற்றி வரவும், ஆறுமுகப்
பெருமானாரும் அவனை விடாது பற்றிப்பற்றி அமர்
புரிந்துகொண் டிருந்தனர். இஃது எம்பிரானுக்குப்
பெரியதொரு திருவிளையாடலா யிருந்துகொண் டிருந்
தது. இதையெல்லாங்கண்ட திருநெடுமால், இளைய
பிரானை நோக்கி, 'எம் பெறலரும் ஏந்தலே! கேட்
டருள்க! இப்பாதகனோடு இனியும் சமர் செய்து
கொண்டிருத்தல் கூடாது. அக்கினி, தூர்ச்சனர்,
பகைவர் முதலானோருக்கு அதிக இடம் தந்து
பெரிதும் வளர விடுதல் விரும்பப்படுவ தாகாது;
ஆதலின், இப்பாதகனை இப்போதே எமனுலகம் சேர்ப்

பிக்கவேண்டும்?" என்று மொழிந்தனர். உடனே சண்முகப்பெருமானாரும், சத்திவேலை யெடுத்துச் சண்டாளன்மீது விடுத்தனர். அவ்வேலாயுதமானது அக்கினிமயமாய் எழும்பி வருவதைக் கண்டு சூரன் நடுநடுங்கிக் கடலினுள் மறைந்து ஒரு மாமரமாய் மாறி நின்றனன். வேலாயுதமும் விடாது சென்று, மாமரத்தை இருகூறுப்பப் பிளந்தது. சூரபதுமன் அப்போதும் தன்னாலானவரைக்கும் மல்லுக்கட்டிப் பார்த்தனன். ஆனால் அஃதொன்றும் பயன்படாமல், சிவனுடைய கால வேலாயுதமானது, சூரனை இருகூறாகப் பிளந்துவிட, அவன் ஒருபாதி மயிலும் மற்றொருபாதி சேவலுமாக மாறினன். எந்தப் பாவத்தையும் போக்கும் கந்தவேள், சேவலைக் கொடியாகப் பிடித்து, மயிலை வாகனமாகக் கொண்டனர். அந்தர துந்துபி சுந்தரமாய் முழங்கிற்று. ஆகாயத்தினின்றும் பூமாரிபொழிந்தது. முந்தி மயிலும் சேவலுமாயிருந்த தேவேந்திரனும் அக்கினி பகவானும் தத்தம் உருவத்தைக்கொண்டனர். எந்தமையாளும் சுந்தர சண்முகனார், அசுரனாகிய கலாபமயில்மீதேறிக் குக்குட கேதனத்தைப் பொற்கரத்திற் றாங்கிப் பாசறைக்குச் சென்று, தேவர்களனைவருக்கும் திவ்விய தரிசனம் தந்தனர்.

இஃதிங்ஙனமாகச் சூரனிறந்த சேதியறிந்து பதுமகோமளை படுகளம் வந்து சேர்ந்தனள். தன் கணவனை ஆங்குக் காணாது அவள் மிகப்பெரிதும் துயருற்று அலமந்து வாடிவருந்தி ஏங்கித் திகைத்து, இரைந்தழுது புலம்பினாள்: "ஆருயிர்க்கினிய! என்

அருமருந்தே, என் கண்ணாளா, என் கணவரே! எப்படி நீ என்னைவிட்டுச் சென்றனை? அடாது செய்பவர் படாதுபடுவ ரென்பது போலவும், ஏழை அழுத கண்ணீர் கூரியவா ளொக்கும்' என்பது போலவும், எல்லாம் உன்னிடமே ஏறுமாறின்றி நடந்துவிட்டிருக் கின்றதே! நான் என்னதான் சொல்லியும், உன் தம்பி சிங்கமுகன் எவ்வளவுதான் புத்திமதிகள் கூறியும், ஏதொன்றையும் நீ கேளாமல், இயம னுலகம் போய்ச் சேர்ந்தனையே! சௌரியம் செல்வ முடையவர்களுக்கு அவகுண மாகாதென்று எத்தனையோ முறை நான் எடுத்தெடுத்துச் சொன்னேனே! தேவர்களையும், தேவ மாதர்களையும் சிந்தை வருந்துமாறு ஒன்றும் செய்ய லாகாது என்றும், அவர்கள் மனம் கொதித்தால் உன் உடலம் வெந்துபோகு மென்றும் கிளிப்பிள்ளைக்குச் சொல்வதுபோல பதினெண்ணாயிரம் தரம் நான் கூறி னேனே! 'அரசன் அன்று கொல்லும் தெய்வம் நின்று கொல்லும்' என்கிறபடி அக்கிரம மொன்றும் அவனியில் தலையெடாது, அநீதி யென்பது அகிலத்தில் ஓங்காது என்று பன்முறை நான் கூறியும், காது கொடுத்துக் கேளாமல் காற்றில் என்னைப் பறக்க விட்டனையே! என் உயிர்க்குயிரான பிராணநாதனே, ஆயிரக் கணக்கான ஆண்டுகள் ஆணியடித்துக்கொண்டு அவனியில் அரசாள்வேனென்ற அதிவீர தீரசூர கம்பீரனே, காட்டிலெறித்த நிலவைப் போன்றும், விழலி லிறைத்த நீரைப் போன்றும், உன் வரப் பிரசா தங்க ளெல்லாம் இப்போது பலனொன்று மின்றிப் பாழடைந்து விட்டனவே! நான் என்செய்கேன்!

எங்குப்போயுய்வேன்! மக்களையும் பறிகொடுத்தனை, வினைதேடிக் கொண்ட என் நாயகா? நீயே "வேலா யுதத்திற் கிரையாய்விட்டனை! அந்தந்தோ! இறைவன் பகைமை இமைப்போதும் ஆகாதென்று சொன் னேனே! என் பேச்சைக் கேளாது என்னை இந்நிலை மைக்குக் கொண்டுவந்தனை! ஒருகணமும் இனி நான் பூமியில் வாழேன்! ஒருகணமும் நான் உயிரோ டிரேன்!' என்று சூரபதுமன் மனைவியாகிய பதும கோமளை அழுது புலம்பித் தீயினிற் குதித்து ஆவி துறந்தனள். இறந்த புதல்வரின் மனைவியரும் எரி நெருப்புக்கிரையாய் மடிந்தனர்கள். சூரபதுமன் மைந் தரிலொருவனான இரணியனென்பவன் சமரில் தப்பிக் கடலிலொளித்துக் கொண்டான் என்று நாம் முன்னம் கூறியிருக்கின்றோம். அவன் இப்போது வெளிவந்து, அனைவோரையும் சிந்தித்து அழுது கதறினான்: "அப்பா! அண்ணா! எல்லாரும் என்னைவிட்டுப் போனீர்களே! அந்தந்தோ! இக்கொடுமையை யாரிடம் கூறுவேன்! இக்கஷ்டத்தை யாரிடம் சொல்லுவேன்! இரும்புலக்கை யானது தேய்ந்து உளிப்பிடிபோலாய் விட்டதே! கட்டுங்குலைந்து கனமுங்குலைந்து நான் தட்டுக்கெட்டுத் தடுமாறித் தவித்துக்கொண் டிருக் கின்றேனே! என்செய்வேன்! என் அப்பாவோ! என் அண்ணாவோ! தேரோடே நின்று நீ தெருவோடே அலையென்று நினைக்கவிட்டு என்னைப் பதைக்கவிட் டுச் சென்றீர்களோ! நான் எவ்வாறு துயராற்றுவேன்! நான் எவ்வாறு இதையெல்லாம் சகிப்பேன்! நெஞ்சிலே வெந்து நீறாகி, இந்த உலகத்தில் எத்தனைநாள் நான்

உயிரோடிருப்பேன்! என்னைப் போலப் பாவி உலகில் யாரிருப்பார்கள்" என்று இரணியன் பலவாறு இரைந்தழுது, பின்னர் தனக்குத் தானே ஒருவாறு தேறி, அனைவர்க்கும் செய்யவேண்டிய கருமக்கடன்களைச் செய்து முடித்தான்.

இஃதிவ்வாறாக, முருகப்பெருமானார் விடுத்த கட்டளையின்படி, வீரர்களும் பூதர்களும் ஓடிச்சென்று, தேவேந்திரன் புதல்வனான ஜயந்தனையும், தேவர்கள் யாவரையும் சிறையினின்றும் விடுவித்துப் பெருமானார்முன் கொடுவந்து சேர்த்தனர் அப்போது ஜயந்தனுக்கும் தேவர்களுக்கும் உண்டான மகிழ்ச்சிப் பெருக்கை யாராலே அளவிடக்கூடும்? ஆனந்தக் கூத்தாடினார்கள். அவர்கள், ஐயன் புகழ்ப் பதம் பாடினார்கள். ஜயந்தன், ஜயவேலன் திருப்பாத கமலங்களில வீழ்ந்து, "எந்தையே! எம்பெருமானே, நின் புகழ் கூற யாவரால் இயலும்? அருட்கண்ணால் எங்களை அகங்குளிரநோக்கி, ஆபத்துகளினின்றும் எங்களை அற்புதமாய் விடுவித்தனையே! அல்லல்கள் ஆயிரங்கோடி, தொல்லைகளோ கோடானுகோடி, அவற்றினின்றும் எம்மையெல்லாம் அன்புடன் காத்தனை! எந்தமைக் காக்க இந்தத் திருவுருவுடன் நீ வாரா திருப்பையாயின், தேவர்களாலும் அயர் நீக்கமுடியாது, மூவர்களாலும் அவர்களைக் காக்க முடியாதே! பிரமனறியாத பிரணவத்தின் பொருளைப் பரமசிவத்திற்குரைத்த பண்புடையாளனே, நண்புறு தேவனே! நின்தன் பெருமை கூறவும், நின்தன் திருப்புகழ்பாடவும் ஆயிரநாவுடைய ஆதிசேடனாலு மாகாதென்றால், எந்தமைப்போன்ற ஏழை மதியினரால்

அந்தக் காரியம் ஆய்விடப் போகின்றது ? சரவணப் பொய்கையி லவதரித்த சண்முகக்கடவுளே, அரனார் திருநுதற்பொறிகளே ஆறு திருவுருவான பெரியோனே, சிறைச்சாலையில் நான் சிந்தை வருந்தி நொந்து நைந் துருகும்போது என் கனவில் தோன்றி, எனக் காதாரங்கூறி, என்னைத் தைரியப்படுத்தி, என் மனத்தில் களிப்பை யுண்டாக்கிய நின் பெருந்தகைமைக்கு என் குலத்துள்ளோர் வாழையடி வாழையாக நினக்குத் தொண்டுபூண்டு, நின்னைப் பணிந்துவரக் கடமைப்பட் டிருக்கின்றனர். பின்னர் நின் தூதனையும் அனுப்பி என்னைத் தேற்றுவிக்கச் செய்த நின் மாட்சியும் நின் அருட் பெருக்கமும் என்னாலே எடுத்துரைக்கற்பாலதோ ? வேலைக் கரத்திற் றாங்கிய வீராதி வீரனே, வேதத் துள்ளுறை பொருளாய் விளங்கிக் கொண்டிருக்கும் விண்ணோர் பெருமானே, நின் ஐயன் புகழைக் கூற என்னால் தரமில்லை ! கடலைக் கடந்தாய், படையெடுத்து வந்தாய், காதக அசுரரைக் காற்றிற் பஞ்செனை ஊதியடித்தாய், எம்மைக் காத்தாய், எம்மைக் கரையேற்றினாய், எம்மை இரக்ஷித்தாய், எம்மை ஈடேற்றினாய் ! நின் பொன்னடிபோற்றி, நின் பூவடி போற்றி, நின் திருவடி போற்றி, நின் சேவடி போற்றி ' என்று வியந்து, புகழ்ந்து, வியன்புகழ் பாடி, ஐயனுடைய அருட்டிறங் கொண்டாடிப் போற்றிப் பணிந்து ஏற்றித் துதித்தனன்.

பின்னர், வெற்றிவேற் பெருமானார் வீரமகேந்திர நகரத்தைக் கடல் கொள்ளும்படி விட்டுவிட்டு, வீரர்கள் கட்டியங்கூறவும், பூதர்கள் புடைசூழ்ந்து

வரவும், வெண்சாமரைகள் அலைகள் வீசுவதுபோல
இருபக்கங்களிலும் இரட்டப்பெற்று விளங்கவும்,
சங்கமுதலிய வாத்தியங்கள் பொங்கி யொலித்து
மங்களகரத்தைக் காட்டவும், தங்கமயில்மீது துங்கமா
யிவர்ந்து, வருணன் வழிகாட்ட வாரிதியைக்கடந்து,
செந்தின்மா நகரத்திற் சிறப்பாய் வந்து சேர்ந்தனர்.



## தேவகுஞ்சரியார் திருக்கலியாணம்.

திருச்செந்தூருக்கு வந்து சேர்ந்ததும் முருகப் பெருமானார் தமதண்ணலாகிய சிவபிரானை உமையொடும் தாபித்து அன்னாருக்குத் தம தன்பார்ந்த பூசனைபுரிந்து, பக்திக்கடலில் பரமானந்தமாய் மூழ்கினர். ஆங்குத் தேவரும் பூதரு மியற்றிய அரஹரவென்னும் கோஷமானது ஆகாய முகட்டை எட்டியது. பின்னர், எம்மை யாளும் இறைவனார் அவண்நின்றும் புறப்பட்டுத் திருமாலும் திசைமுகனும் தம்முடன் விளங்கவும், தேவர் கூட்டமும் வீரர் குழாமும் பூதகணங்களும் சேனைக்கடலும் முன்னும் பின்னும் முறை முறையாய்த் தொடர்ந்து வரவும், அரஹர வென்னும் கோஷமும் ஜயஜய வென்னும் சப்தமும் ஆகாய மெங்கணும் நிறைந்து மிளிரவும், மங்கள ஆரவார மாப்பெருங் கோலத்துடன் திருப்பரங்குன்றத்துக்கு வந்து சேர்ந்தனர். பாவிகளெல்லோரையும் தொலைத்துச் சூரனாதிபோரையும் வேரோடழித்த வெற்றிச்செயலைக் குறிக்கவும் வீரச்செய்கையை விளக்கவும், அழகிய நகரமொன்றை ஆங்கே அமைக்கக் கருதிப் பெருமானார் தமது திருவுளத்தை விண்ணவர்கோனாகிய தேவேந்திரனுக்குத் தெரிவித்

தனர். அன்பனும், ஐயன் திருவாக்கைப் பொன்போ லேற்றுக்கொண்டு, விசுவகருமனை அழைத்து விசால மான நகரமொன்றை அமைக்குமாறு கட்டளையிட்ட னன். விசுவகருமனும் அவ்வண்ணமே செய்ய உடன் பட்டுக் கோயில்களும், குளங்களும், மதில்களும், மண்டபங்களும், மாடமாளிகைகளும், கூடகோபுரங் களும், நந்தன வனங்களும், சுந்தரப் பொழில்களும் நாலுபக்கங்களிலும் நன்கு விளங்கும்படி அரிய பெரிய நகரமொன் றமைத்தனன். இவ்வாறு, திருப்பரங் குன்றமென்னும் திருப்பதி யுண்டானபின், குமரப் பெருமானார், ஆங்கே, கோயில்கொண் டருளினர். ஏனையோரும் தத்தமக்கென்று விதிக்கப்பட்ட இடங் களிலே வீற்றிருந்தனர்.

இவ்வமயம் பராசர புத்திரர்கள் அறுவரும் இறைவனடிபணிந்து, தத்துவோபதேசம் செய்தரு ளும்படி நத்திவேண்டினர். கருணையே உருக்கொண்ட கடவுட் பெருமானார், மிகப்பெரிதும் மனமிரங்கி, ஒன்றேயான ஓங்கார வண்மையையும், இரண்டறக் கலத்தல் இன்னதாகு மென்பதையும், மூன்றை அடக்கவேண்டிய முறைகளின் விவரங்களையும், நான்மறைப் பொருளின் ஆன்ற உண்மைகளையும், ஐந்தவித்தவர்களுடைய ஆற்றற் பெருக்கு அளப்பரி தாகு மென்பதனையும், ஆறுதாரத்தின் அற்புதநிலை களையும், ஏழாவரணங்களின் இயல்பினையும், எண் குணப் பெருமானுடைய ஏற்றம் முதலியவற்றையும் பராசர புத்திரர்கட்குப் பரிவுடன் உபதேசித்தருளி னர். அவர்கள் எம்மானைப் பணிந்து போற்றி, 'தேவ

தேவா! திருவருட்கடலே! எளியேமைக் காத்தளந்தல் பெருமானே! பிறவிக் கடலிற் பெரிதும் சுழன்று சுழன்று வருந்திக்கொண் டிருந்த பேதையே மாகிய எமக்கு ஞான தீபத்தைக் காட்டி நற்கதிக்கு வழி யுண் டாக்கினையே! நின் தன் திருவரு ளிருந்தவா றென்னே! நின் தன் கருணைத்திறம் விளங்கினவா றென்னே; சூராதியோரை வதைத்துத் தேவராதியோரைக் காத்தது போன்றே, பாவமாதியவற்றின் தொடக்கறுத்து ஏழையேம் பரிபக்குவ மடையுமாறு செய்தனையே, பண்ணவனே, விண்ணவனே, பன்னிரு கண்ணவனே! நின் பதமலர் வாழ்க! நின்திருமுகம் வாழ்க! நினது கமலக்கண் வாழ்க! நினது கருணைக்கண் வாழ்க!' என்று தோத்திர பாலைகளால் துதித்துப் போயினர்.

பின்னர், தேவேந்திரன், தன் அருமைக் குமரியாகிய தெய்வகுஞ்சரி யம்மையைச் சண்முகவடிவேற் பெருமானுக்குத் திருமணம் செய்துகொடுக்க விரும்பித் தன் கோரிக்கையைத் திருமாலிடமும் திசைமுகனிடமும் தெரிவித்துக்கொண்டனன். தேவேந்திரன் கொண்ட விருப்பத்தைக் கேட்டுத் திருமாலாரும் பெருமானாரும், திசைமுகனாரும் நான்முகக் கடவுளும் அகம்நிறைந்த பெருமகிழ்வு கொண்டு, 'நண்பா! இந்திரா! நின் விருப்பத்தைக் கேட்டு அளவில்லா பேருவகை எய்தினோம் நாம் அனைவரும் சிக்குண்டிருந்த இன்னலினின்றும் நம்மை யெல்லாம் விடுவித்த பேருதவிக்கு, வையகமும் வானகமு மாற்றலரிதன்றோ? ஆதலின், நின் ஒப்பற்ற ஒரு புதல்வி, அழகினின் மிக்க பவழக் கொடியாள், தங்கம்போன்ற இங்கிதவடிவாள்,

தெய்வத்தன்மை விளங்கும் திருமுக ஒளியாளாகிய தெய்வகுஞ்சரி அம்மையை, அருளே பொழியும் அறுமுகத் தோற்றமும், கருணையே விளங்கும் கமலக் கண்களும், அமுதமே துளிக்கும் அரவிந்த வாய்களும், வெற்றிவேல் தாங்கிய வீரமாம் புயங்களையு முடைய முருகப் பெருமானுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தலே சால்புடைத்து!' என்று ஆதரித்துப் பேசினர். உடனே, இந்திராணிக்குத் தூதரை யனுப்பிச் சேதி அறிவிக்கப்பட்டது. தூதரால் அனைத்தும் அறிந்து கொண்ட இந்திராணி, தெய்வயானையை அயிராவதத் தின்மீதேற்றி அழைத்துக்கொண்டு திருப்பரங்குன் றம் வந்து சேர்ந்தனள். தேவேந்திரன் இந்திராணி யைக் கண்டதும் மிகவும் மனமகிழ்ந்து, நடந்த சங்கதிக ளனைத்தையும் சாங்கோபாங்கமாய் அவளுக்குக் கூறிச் சண்முகக் கடவுளே தமது குலதெய்வமாவரெனவும் சாற்றினன். எண்ணில்லாத ஆண்டுகள் இன்னலில் உழன்றுகொண் டிருந்த தம்மைக் காத்துக் கரை யேற்றின பெருமானாருக்குத் தமது அருமந்தப் புதல் வியாராகிய தெய்வ குஞ்சரியாரைத் திருமணஞ் செய் வித்தலே தகுதி யானதால், அவ்வாறு செய்யத் தான் உறுதிசெய்துகொண் டிருப்பதையும் இந்திரன் இந்திராணிக்குக் கூறினன். இந்திராணியின் மனம் அப்போது ஆனந்த சாகரத்தில் அமிழ்ந்தே போய் விட்டது. அனைத்தையும் நினைத்து நினைத்து இந்தி ராணி அகமகிழ்வு கொண்டதோடும், இத்தருணம், அவள் தன் புதல்வனாகிய ஜயந்தனைக் காணப்பெற்ற தும், தங்கவேலவரையே தனது நன் மருகனாக

வாய்க்கப் பெறுவதும், அவள் மனக்களிப்பை ஆயிர மடங்கு அதிகமாகும்படி செய்துவிட்டன. இந்திராணி, தன் குமாரனாகிய ஜயந்தனைக் கண்குளிர நோக்கி அவன் கைகளைப் பிடித்து முத்தமிட்டு, 'அப்பா குழந்தாய்! அனேக ஆண்டுகள் நீ அல்லலி லுழன்று தொல்லையுட்பட்டு, எந்தை பெருமானருளால் தப்பிப் பிழைத்து இப்போது வந்து சேர்ந்தனையே!' என்று ஆசைமொழி கூறி அன்பு பாராட்டினாள். ஜயந்தனும் தனது தாயை வணங்கி, ஆனந்த பரவசனாயினான்.

பின்னர், தேவேந்திரன், தேவசேனாதிபதியை வணங்கி, 'எம்மைக்காத்த ஏந்தல் பெருமானே! சொல்லொணாத் துயரத்தி னின்றும் எம்மை நீக்கி எம்மைப் புரந்தருளின ஒப்பில்லாத நின் உதாரச் செய்கைக்கு, என்ன கைம்மாறுதான் ஏழையேன் செயப் போகின்றேன்! அழகும் குணமும் ஒருங்கே வாய்ந்த அற்புதக்கன்னியும், எனது புத்திரியுமாகிய தெய்வ குஞ்சரியை நினக்குச் சமர்ப்பிக்க நெஞ்சத்தில் அவாக் கொண்டுள்ளேன். ஆதலின், அவளை யேற்று ஆதரித் தருள்க!' என்று வினயங்கூறி வேண்டிக்கொண் டனன். முருகப் பெருமானும், அதற்குத் திருவுள மிசைந்தனர். உடனே, தேவேந்திரன் தூதர்களை நாற்றிசைகளிலும் போகவிடுத்துத் திருமணச் செய்தியை அனைவோருக்கும் தெரிவித்தனன். இம்மங்கள சங்கதியைக் கேட்ட அமரர்களும், அரசர்களும், இருடிகளும், துறவிகளும், இல்லறத்தாரும், நல்லறத்தாரும் நூறுயிரக் கணக்கினராய்த் திருப்பரங்குன்றம்

வந்து சேர்ந்தனர். இந்த அழகிய தோற்றத்தை வருணிக்க எவராலும் முடியாது. அவரவர்கள் நிலைமைக்குத் தக்க வண்ணம் விடுதிகளமைக்கப்பட்டன. திருப்பரங்கிரி நகரத்தைத் தேவருலகத்துக்குமேலாகத் தோற்றமாறு அனைவரும் சேர்ந்து அற்புதமாய் அலங்கரித்தனர். திருக்குமரனின் திருமணங் கண்டு களிக்கக் கைலையினின்றும் கடவுட் பெருமானும் மதுரை மீனாக்ஷி அம்மையாருடன் திருப்பரங்குன்றம் வந்து தரிசனந் தந்தருளலும், சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தது போன்று, திருமண வேளையில் தேவ நாயகன் தரிசனமும் கிடைத்ததே யென்று அனைவரும் மனமகிழ்வடைந்தனர். உடனே தேவேந்திரன் தன் செல்வப் புத்திரியை அழைத்து வரக் கட்டளையிட்டனன். அனைவரும் ஆனந்திக்கும் படி அவள் மெல்ல நடந்து வந்து தந்தையின் பக்கலில் நின்றனள்.

பஞ்சிதனின் மெல்லடி பனிப்ப வரை யின்பாற்
குஞ்சரி நடந்த செயல் கூறு புதுமைத்தோ
செஞ்சுடர்வை வேலுண்டய செம்மலடி தீயே
னெஞ்சக வடுக்கலினு நின்றுலவு மென்றால்

என்றபடி, செவ்வொளியினையும் வடிக்கப்பட்ட தன்மையினையுடைய வேற்படைதாங்கிய குமாரக்கடவுளின் திருவடிகள் எனது கொடிய மனமாகிய மலையினுள் நின்றுலாவும் என்றால் தெய்வயானை யம்மையார் தனது பஞ்சினு மெல்லிய திருவடிகள் பதைப்புற மலையின் பக்கத்தில் தனது நாயகனுடன் உவகை பூப்ப நடந்தசெயல் ஒரு புதுமையன்றே. வெள்ளையானையி

ளால் வளர்க்கப்பட்ட தெய்வயானை யம்மையார் மிக மென்மையான செவ்விய தளிர்கள் பின்னிட விளங்கு கின்ற சிறிய திருவடிகளால் நடந்து வந்ததைக் கண்டு திருமகளும் கலைமகளும் துதித்தார்கள். மகிழ்வுற்று நிற்கின்ற இந்திரன் தெய்வயானை யம்மையார் எதிரே வந்தவுடன் அத் தேவகன்னிகையை விவாக மண்டபத்தி னெதிரே யழைத்துச் சென்றான். முனிவர்களும் தேவர்களும், 'அன்னையே வாழி' என்று கூறித், திருவடி மலர்களை வணங்கினார்கள். தெய்வயானை, அக் கூட்டத்தினை யுட்கொண்ட அப்பெரிய சபையா னது வணங்காநிற்பச் சபையினி லெழுந்தருளியிருக் கின்ற உமாதேவியாரையும் சிவபெருமானையும் வண ங்கி, வேற்படையாளரான குமாரக்கடவுளைக் கண்டு விரைவில் நாணமுடையவ ராயினார். தெய்வயானை யம்மை வணங்கியவுடனே, அழகிய நெற்றித் திருக் கண்ணுடையரான சிவபெருமான் நன்றாய்க் கடாக்ஷித்த னர். உமாதேவியார், அழகிய வளைய லணிந்த திருக் கரங்களை நீட்டி தெய்வகுஞ்சரி யம்மையை உச்சி மோந்து தன் பக்கலில் இருக்கச்செய்தனர்.

முருகப்பெருமானும் தெய்வயானை யம்மை யாரும் திருமணக்கோலம் கொள்ளும் சிறப்புள்ள காட்சி எவராலும் சொல்லமுடியாது. தேவரும் மூவ ரும் மன்னரும் மாதவரும் அங்கே மின்னிப் பொலிந்த உன்னதத் தோற்றமானது, வானுலகமே பூவுலகினில் இறங்கிவிட்டதோ என்று கூறும்வண்ணம் விளங்கி னது. குமாரப் பெருமானார் திருமண மண்டப வாயிலில் வந்து சேரவும், இந்திராணி அஷ்ட மங்க

லங்களுடன் அவரெதிர் சென்று அவரது திருவடித் தாமரைகளிற் பாலேவிட்டு அருச்சனைசெய்து ஆலாத்தி சுற்றி அன்புடன் அழைத்துச்சென்று திருமணமண்டபத்தின்கண் அற்புதமான ஒரு சிங்காதனத்தில் அமர்ந்திருக்கச் செய்தனள். பின்னர், தெய்வகுஞ்சரியம்மையாருக்கு அணி பணிகள் பூட்டி அலங்காரம் செய்து, திருமகளும் கலைமகளும் அவரை அழைத்து வந்து, குமரக்கடவுள் வலப்புறத்தில் வீற்றிருக்கச் செய்தனர். தேவதுந்துபி முழங்கப் , பதினெண் வாத்தியங்கள் ஒலிக்கத் தும்புருநாரதர் கீதம்பாட, வேத வேதியர்கள் மறையொலி பயில, மாதவமுனிவர் ஆசிகள் கூற, அரம்பையாதியர் நர்த்தனம் புரிய, மன்னர் முதலானோர் பல்வகைப் பரிசுகள் வழங்க, அனைத்திற்கும் மேலாக எம்மையாளும் பரமசிவனார் தண்ணளி எங்குமே தழைக்கத் தேவர்கள் நறுமலர் மாரியாய்ப் பொழியத் தேவசேனாதிபதிக்கும் தேவ குஞ்சரி அம்மையாருக்கும் திருமணம் மிகச் சிறப்பாய் நடக்க ஆரம்பித்தது.

தெய்வயானையுடன், செவ்விய கதிர்வேலினையுடைய முருகன், வெவ்விய சிங்காசனத்தி லெழுந்தருளியிருத்தலைப் பார்த்து அனைவருந் தொழுது துதித்தனர். அப்பொழுது அன்னையும் அப்பனுமான பார்வதி பரமேசுவரர்கள் அரிய திருவருள் புரிந்தனர். தேவராஜன் அங்ஙனம் சிங்காதனத்தி லிருந்த இருவரின் அழகைத் தரிசித்துப் புகழ்ந்து, கரங்களாற் றொழுது, தொழுத கரங்களைத் தலைமீது குவித்து விளங்கினான். இந்திரனுடைய கட்டளையால் திரு

மஞ்சனம், சிறந்த மலர்கள், இவையன்றி மற்ற வேண்டிய பிறபொருள்கள் யாவையும் குறைவறக்கொண்டு சபையினிடத்து அன்னப் பறவையும் அஞ்சுமாறு நடந்து, அரிய இந்திராணி வந்தனள். அப்பொழுது இந்திரன் பன்னிரு திருத்தோள்களை யுடைய குமரக் கடவுளின் எதிரிலிருந்து முறையாக அக்கடவுளின் பொன்னடிகளைப் பூசை செய்யத் தொடங்கினான். உரைத்தற்கரிய வெட்கத்துடனே மயிலனைய இந்திராணி, நல்ல ஒப்பற்ற கரகத்திலிருந்த நீரினால் அபிஷேகஞ்செய்ய, அனைவரும் புகழுகின்ற இந்திரன், குமாரசுவாமியின் மெல்லிய திருவடிகளைத் தொட்டு விளக்கினான். குமாரசுவாமியின் திருவடிகளைச் செழுமைவாய்ந்த நீரினால் அபிஷேகஞ்செய்து, கைகளில் நிறைபவிருந்த சந்தனக் குழம்பினைப் பூசி அழகிய மலர்தரித்து அகிற்புகை காட்டி நெய்யின்மிக்க அழகிய தீபத்தால் ஆராதனை செய்தனன். பிறகு இந்திரனும், இந்திராணியும் பாதபூசை செய்துகொண்ட உடனே, பரமசிவனும் பார்வதியும் பாதபூஜை செய்துகொண்டனர். அப்போது பரமசிவத்தின் கைகளில், தேவேந்திரன் அவளை தாரைவார்த்துக் கொடுத்தனன். அதன்பிறகு இந்திரன், சண்முகப் பெருமானுடைய வலதுகரத்தில் தெய்வயானை யம்மையின் இடதுகரத்தைச் சேர்த்து, 'இனி இவ் வம்மை, உமது சொந்தம்' என்று பணிந்து நின்றான். குமாரப்பெருமான் தெய்வகுஞ்சரியைத் திருக்காத்தா லேற்றருளினார். பிரமதேவன் முதலிய தேவர்களால் ஆசீர்வதிக்கப்பட்டுக் கொடுக்கப்பட்ட மங்கல சூத்திரத்தினை வாங்கிச் சண்

முகப்பெருமானார் தமது அழகிய கைகளால் தெய்வ யானையம்மையின் கழுத்தில் அணிந்தார். அப்போது மத்தளங்கள், தக்கைகள், வலம்புரிச் சங்குகள், பேரிகை முதலிய வாத்தியங்கள் முழங்கின. நவவீரர் களுங் கணநாதர்களும் ஆரவாரஞ் செய்துகொண்டு குமரக்கடவுளை வணங்கி மகிழ்ந்தனர். தண்ணிய துளவமணிந்த திருமால், கமலாசனனான பிரமன், அட்ட திக்குப் பாலகர், இந்திரன் முதலாகிய தேவர் களு மற்றுள்ள இருடிகள், தவசிகள் முதலிய அனை வரும் அத் திருக்கோலத்தினைத் தரிசித்தார்கள். அப் பொழுது தாமரைமலரி லிருந்த பிரமன் எரியுந் தீயினை யும் உபகரணங்களையும் அழைப்பித்துக், குமரக் கட வுளைக் கொண்டு தூய்மையான வேள்வியைச் செவ் வனே செய்வித்தனன். குமரவேள், ஒள்ளிய நுதலா ளான தெய்வயானை யம்மையுடன் விளங்காநின்ற கலி யாணப் பந்தலைப் பிரதட்சணஞ் செய்து, அம்மியின் மீது எம்பெருமாட்டியின் சிறிய திருவடிகளை வைத் தருளினார். பிறகு அருந்ததியைப் பார்த்தனர்கள். இவ்வாறு திருமணம் முடிந்த பின்னர், தெய்வயானை யம்மையுடன் செவ்வொளி வாய்ந்த வேற்படையேந் திய குமரவேள், அன்னை தந்தையர்களான பார்வதி பரமேசுவரர்களை அன்புடனே பிரதட்சணஞ் செய்து முறையாக மூன்றுதரந் திருவடிகளை வணங்கினார். சிவபெருமானும் உமாதேவியாரும் தங்கள் திருவடி களில் விழுந்து வணங்கிய மகனையும் மருமகளை யும் ஆசீர்வதித்து அன்புடன் எடுத்தணைத்து அருள் செய்து தமதருகிலிருத்தி உச்சிமுகர்ந்து, 'உமக்கெமது

முதன்மையைக் கொடுத்தேமென்று' உரைத்தருளி ஞர். பார்வதி தேவியாரும் சிவபெருமானும், மகனார்க் கும் மருமகளார்க்கும் தலைமை யளித்தருள்செய்தலும் திருமணச் சாலையுள் ளிருந்த தாமரை ஆசனனான பிரமதேவன் முதலிய தேவர்களும் முனிவர்களும் தெய்வயானை யம்மையின் வமிசத்தின ரனைவரும் அவர் கள் திருவடிகளைத் தலைமீதுகொண்டு வணங்கினார்கள். சண்முகப் பெருமானையும் தெய்வயானை யம்மையை யும் திருமண மண்டபத்தி லிருந்த அனைவரும் முறை யாக வணங்குதலும் அவ ரனைவருக்கும் அருள்புரிந்து உடன்வந்த பரிசனங்களுடன் நீலகண்டரான சிவ பெருமானும் உமாதேவியாரும் விரைவாக மறைந்த னர். மறைந்தவுடனே ஆச்சரிய முள்ளவர்களாய்த் திருமணச்சாலையி லிருந்த தேவர்களும் முனிவர்களும் உயிருக்குயிராய் எங்கு நிறைந்த அப்பெரியவர்களின் தன்மையை எண்ணித் தம் வாய்களால் அவர்கள் திருநாமங்களை உரைத்து ஆரவாரித்தனர். பிறகு தெய்வயானை யம்மையாருடன் வீற்றிருக்கும்* குமார சுவாமியைத் தரிசித்துக் கவற்சியி னீங்கினார்கள். உமா தேவியாரும் சிவபெருமானும் எழுந்தருளியிருந்த பீடத்தின்மீது குமாரக்கடவுள் தெய்வயானையம்மை யாருடன் எழுந்தருளியிருக்க, அச் செயலினைக்கண்டு யாவரும் மகிழ்ந்தனர்.

இவ்விதமாக அனைவரும் வணங்கி வாழ்த்திய வுடனே, சிங்காதனத்தி னின்றும் இறங்கி அனை வரும் தொழுது உடன்வரா நிற்பச் சிறந்த சண்முகங் களை யுடைய இன்மலரான குமரவேள், மங்களவாத்தி

யங்களுடன் சென்று, தெய்வயானை அம்மையாருடன் தமது திருக்கோயிலை அடைந்தனர். அப்பொழுது குமாரக்கடவுள் இந்திரனுக்கும் திருமால் பிரமன் முதலிய தேவர்கட்கும் பிறருக்கும் தக்கவாறு விடை கொடுத்துத் தமது பரிசனங்க ளனைத்தினையும் ஆலயத்தின் வெளிப்புறத்தில் முறையே காவல்செய்யும் வண்ணம் திருவருள் புரிந்தனர். இவ்வாறு முருகப் பெருமானும் தேவகுஞ்சரி அம்மையாரும், திருப்பரங்குன்றத்திற் சிறிதுகால மிருந்து, பின்னர், தேவேந்திரன் வேண்டுகோட் கிணங்கித் தேவருலகஞ் சென்று, ஆங்கே தேவதச்சனைக்கொண்டு தேவநகரத்தை முன்னிருந்த வண்ணமே புதிதாக நிருமித்துத் தேவேந்திரனுக்கு மகுடாபிஷேகம் மிக மேன்மையாய்ச் செய்வித்து அவனுடைய அரசுரிமைப் பட்டத்தை அவனுக்கீந்தனர். இவ்வண்ணம் தேவர் குறை முடித்து, அன்னோர் செய்த பூசனைகளை யேற்றுத் தேவசேனாதிபதியான தெய்வப்பெரியோரும் தேவகுஞ்சரி அம்மையாரும் கைலயங்கிரிக்குச் சென்று, ஆங்கே, கந்தமாதனமென்னும் சுந்தர வரையின்கண் திருவோலக்கங் கொண்டருளி, அடியார்க்கெல்லாம், திருக்காட்சி தந்துகொண் டிருந்தனர்.



## வடிவழகனார் வள்ளியை மணத்தல்

'வேழ முடைத்து மலைநாடு, மேதக்க சோழவள நாடு சோறுடைத்து, பூழியர்கோன் தென்னாடு முத் துடைத்து, தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடு சான்றோ ருடைத்து' என்று ஆன்றோர் கூறியிருக் கின்ற வண்ணம் சான்றோர் பலர் திருவவதரித்த திரு நாடே தொண்டை நாடாகும். கல்வியில் மிகுத்துச் செல்வத்தில் திளைத்து ஞானத்திற்பழுத்த அத் தொண்டை நாட்டில், மிக்க வளம்பம் பொருந்திய வெள்ளிமலை யென்னும் வியன்பெரு மலையினருகில், மேற்பாடி யென்னும் சிற்றூர் ஒன்று உண்டு. ஆங்கே, நம்பிராஜன் எனப் பெயர்வாய்ந்த வேடராஜனொரு வன் அரசோச்சிக்கொண் டிருந்தான். அவனுக்கு ஆண் பிள்ளைக ளிருந்தும் பெண்குழந்தை ஒன்றேனு மின் மையால், அவன் தனக்குப் பெண்குழந்தை உண் டாதல் வேண்டுமென்று மலைத்தெய்வத்தை நோக்கித் தவம்புரிந்துகொண் டிருந்தான். அந்தக் காலத்தில் திருமாலான பெருமானார் மௌனமுனி யெனப் பெயர் தாங்கி அண்மையில் தவஞ்செய்துகொண் டிருப்ப, அவர்க்கெதிரே இலக்குமியார் ஒரு மான் வடிவந் தாங்கிச் சென்றனர். குமரகுருபரன் திருவருள்

பாலித்தபடியே, ஒரு பெண் குழந்தை மிக்க வனப்புள்ளதாய் ஜனித்தது. அவ் வமயம், நம்பி ராஜ னென்பான் தன் மனைவியோடும் தன் பரி வாரத்தோடும் தினைப்புனத்தைப் பார்வையிடக் கருதி அவண் வந்து சேர்ந்து, அக் குழந்தையின் அழுகைக் குரலைக்கேட்டு, அவ் வொலி எங்கிருந் துண்டாகின்ற தென்பதை நோக்கி அவ்விடம் போய்ப் பார்க்க, வானச்சந்திரன் பூமியிற் படிந் தொளிர்கின்றதோ என்று கூறும்வண்ணம் மிக்க வனப்பு வாய்ந்த பெண் குழந்தையைக் கண்டான். அப்போது அவனடைந்த ஆனந்தத்திற்கு அளவென்பதேயில்லை. பிறவிக் குருடன் கண் பெற்றது போலவும், தேடிப்போன பொருள் நேரில்வந்து தானே கிடைத்தது போல வும், நம்பிராஜன் அக மகிழ்ச்சிக் கடலில் திளைத்து நின்றனன். ஆடினுன், பாடினுன், ஆனந்த பரவச னுய் விட்டவன். கோடிசந்திரப் பிரகாசமாய்க் குளிர்ந்து விளங்கும் பெண்ணரசியாம் குழந்தை யை நம்பிராஜன் தன் கைபார எடுத்துக் கண்களி லொத்திக்கொண்டு அதனுடைய அழகிய கன்னங்களில் அன்பான முத்தந் தந்து, தன் மனைவி யிடம் அதனைக் கொடுத்தனன். அவ்வேட அரசன் பத்தினியான உத்தமியும் பெறலருஞ் செல்வம் காணக் கிடைத்ததுபோல, அளவில்லாப் பேருவகையுடன் குழந்தையை ஏந்திக் கொஞ்சிக் குலாவினள். பின்னர் நம்பிராஜனும் அவன் மனைவியும் தமது பரிவாரங் களுடன் தெய்வக் குழந்தையைத் தமது இல்லத்திற் கெடுத்துச் சென்றனர்.

நம்பிராஜன் தவப்பேறே தவப்பேறு; அவன் வீட்டிற்குக் கிடைத்த பாக்கியமே பாக்கியம்! ஈடு எடுப்பு மில்லாத எம்பிரான் புதல்வராயவதரித்து, எவ்ராலு மியற்ற முடியாத வீரத் தொழில்களைத் திரமாய்ப் புரிந்து, சூராதியோரை வேரோடழித்துப் பாரினின்றும் தொலைத்துத் தேவரையும் மூவரையும் திக்குப் பாலகரையும் மற்று முள்ளோரையும் காத்துக் கரையேற்றின கருணையங் கடலாகிய எம்மான், பெம்மான், திருமான் மருகனாகிய தேவ சேனாதிபதியையே மருகனா யடையப்போகிற ஒப்பற்ற பாக்கியம் நம்பிராஜன் பெறப்போகின்றனனென்று உம்பர் நாட்டு வானவர்கள் இம்பர் நாட்டின்மீது பூமாரிபொழிந்து பொலிவுறச் செய்தனர். தெய்வ இயற்கை வாய்ந்த திருக்குழந்தை வந்து சேரலால், நம்பிராஜன் இல்லம் செம்பொன் மயமாய் விளங்கினது; சுந்தர மென்பதே வீட்டைச் சுற்றிக் கவிந்துகொண்டது. எங்கு மில்லாத இங்கிதம், எவரும் கண்டறியாத இலக்குமீகரம், அந்த வீட்டை அழகுபெறச் செய்துவிட்டன. தெய்வக் குழந்தையைத் தரிசித்துப் போகலா மென்று வருவோரும், போவோரும், ஆனந்தக் கூத்தாடி அகமகிழ்வோரும், செஞ்சொற் கீதங்களை நெஞ்சாரப் பாடிக் களிப்பவருமாக அவ்விடம் அமரர் நாட்டையும் தோல்வியுறச்செய்தது. தேரும் திருநாளும் நிகழ்வது போல நம்பிராஜன் மனைக்குத் திரள்திரளான மக்கள் வந்துகொண்டும் போய்க்கொண்டு மிருந்தனர். குழந்தைக்குப் பொட்டிட்டுத் தொட்டிலிட்டு, அணிமணிகள் பூட்டி அழகினுக்கு அழகு செய்வதுபோல

ஆதர மிகுதியால் அலங்கரித்துப் பார்த்துங் குழந்தையின் தாயும் குறமாதர்கள் மற்றுள்ளோரும் தாலாட்டிப் பாராட்டினர். குறிசொல்வதில் தேர்ந்த குறமாதர்கள் குழந்தையின் பாதாதிகேசம், கேசாதி பாதம் உற்றுற்றுப் பார்த்து, ஆனந்த பரவசராய் அகங் குழையப் பெற்று, 'இந்தக் குழந்தையின் வடிவை, என்னவென்று இயம்புவேம் நாம்! தெய்வத் திருவடிவாகவே திருமேனி யெங்கும் பொலிகின்றதே! மனித உருவாகக் குறியொன்றும் காணப்படவில்லையே! பங்கய முகமும், இங்கித ஒளியும், அஷ்டமி நிலாவைப் பழித்த அழகான நெற்றியும், வில்லை இகழ்ந்த சொல்லரும் புருவமும், மானையும் மீனையும் வேலையும் விடத்தையும் தோல்வியுறச்செய்யும் தூய்மையான கண்களும், குமிழ்நாசியும், கொவ்வை வாயும், கமுகை நிகர்த்த கந்தரப் பெருமையும், பூவினைப் போன்ற பாதங்களின் வனப்பும், பவழமே யொத்த நகங்களின் நேர்மையும் நோக்குந்தோறும், நோக்குந்தோறும் திருவருள் பாலிக்கத் திருவவதாரஞ் செய்ததாய்க் காண்கின்றதே யன்றி, மானிடக் குழந்தையாய் மாநிலத்தில் தோன்றிற்றெனச் சொல்வதற்கே யில்லை. ஈசன் திருவருள்; எம்மான் திருவருள்; குமரன் திருவருள்; குன்றுதோ றாடினான் திருவருள்; முருகனே வந்து திருமண முடிப்பான் போலும்!' என்று குறியிலக்கணங் கூறிக் குழந்தைக்கு மங்களம் பாடினர். இந்தத் திருக்குழந்தைக்கு வள்ளியம்மை யெனப் பெயர் வழங்கலாயது.

வள்ளியம்மை என்னும் இத்தெய்வத் திருக் குழந்தை நாளொருமேனியும் பொழுதொரு வண்ண முமாக வளர்ந்து, செங்கீரைப் பருவமும் சப்பாணிப் பருவமும் அம்புலிப்பருவமும் தளர்நடைப் பருவமும் கடந்து, பார்த்தோர் மகிழும் வண்ணம் பரமானந்தத் திருக்கோலங் காட்டிச் சிறுமியருடன் கூடிப் பூச் சூடிப் பந்தாடி விளையாடி வந்தனள். இவளுக்குத் தக்க பருவம் வந்தவுடன், தன் தந்தையின் கட்ட ளைப்படி, அன்பின்மிக்க சேடியர் அருகே புடை சூழ்ந்துவரத் தினைப்புனங் காக்கச் செல்வதுண்டு. அவ்விடம் அமைத்துள்ள அழகான பரணின்மீது வள்ளியம்மையார் நின்றுகொண்டு, அங்குப் பறந்து வரும் பறவைகள்மீது கவண்கற்களெறிந்து அதட்டி விரட்டி ஆலோலமென்று கூவுவார். இந்தத்தோற்றம் மிகுந்த சுந்தரம் வாய்ந்ததா யிருந்தது: வள்ளியம்மை யின் மொழிகளைக் கேட்டுக் கிள்ளைகளும் வெட்கிச் செல்லா நிற்கும்; குரலின் இனிமையைக் கண்டு குயில் களும் வெட்கிப் போய்விடும் ; மருண்ட கண்களைப் பார்த்து மானினம் மயங்கா நிற்கும் ; சாயலை நோக்கித் தோகை மயில்களும், நடையை விபந்து நளின அன் னங்களும் தயங்கி மயங்கி நின்றுவிடும் இவ்வித வனப் புடன் இளம்பெண் ணரசியாகிய வள்ளியம்மையார் தினைப்புனத்தில் காவல்செய்துகொண் டிருக்கும் போது, நாரதமுனிவர் திரிலோக சஞ்சாரஞ் செய்து நாதமினிய கீதம் பாடிக்கொண்டு அங்கு வந்து சேர்ந் தனர். வந்த நாரதமுனிவர் வள்ளியம்மையாரைச் சேய்மையில் நின்று தரிசித்து, அவர் கந்தவேளுக்

குகந்த பத்தினியாதல் வேண்டுமென்றும், முன் பெரு மானார் அளித்திருந்த வரம் கைகூடுங்காலம் நேர்ந்த தென்றும் கருத்துட் கொண்டனர். ஏற்கனவே இந்த நோக்கத்தை மனத்தின்கண் வைத்துக்கொண்டு, முருகப்பெருமானாரும் திருத்தணிகையில் அமர்ந் திருந்தனர். அவ்விடம் நாரதர் சென்று, ஐயனடி பணிந்து அன்னாருடைய அருட்டிற மனைத்தையும் பாடிப்பரவி, வள்ளியம்மையாரைத் தாம் தரிசித்து ஆனந்தமடைந்த அற்புத வரலாற்றினையும் பெரு மானார் அவ்வம்மையாரைக் கடிமணம் புரியவேண்டு மென்பதையும் விவரித்துக் கூறி வேலவனைத் தூண் டினார்.

வேற்கைப் பெருமானாரும் நாரதர் சொன்னதைக் கேட்டு வேட்கை மிகக்கொண்டு, சிகையிற் பலகறை யொடு பீலி துலங்கவும், மார்பின்கண் மாலைகளும் அணிபணிகளும் இலங்கவும், சந்திரனைப் போன்ற முகத்தில் சுந்தரமான திலகம் ஒளிரவும், இடையில் சல்லடை இறுக்கி உடுத்து, முகத்தில் மீசையை முறுக்கிவிட்டு, மான்தோலையும் தூணியையும் பொன்னாலாகிய தண்டினையும், வானவில்லைப்போன்ற வனப்பான வில்லையும் தரித்துக்கொண்டு, காலிற் சிலம்பு கலீர் கலீரென் றொலிக்க, ஆனந்தமான நடை நடந்து, அற்புதமான ஒயில் காட்டி, வேட வேடத் துடன் வேடுவர் மகள்பால் நெருங்கினர். அங்குப் போந்து, அவர் தமது விருப்பத்தைத் தெரிவிக்க, வள்ளியம்மையார் அவர் சொல்வது சரியன் றென் றும், அறநெறிக் கொவ்வாததென்றும், தமது தந்தை

தாயாரும் மற்றுமுள்ள உற்றார் உறவினரும் ஆடவ ரொருவர் அங்கு வந்திருப்பதைக் காண்பரேல் ஆபத்து விளையு மென்றும் கூறிக்கொண் டிருக்கும் போதே, நம்பிராஜன் எதிர்ப்படும் தோற்றம் தெரிந் தது. அப்போது நிகழ்ந்த ஆச்சரியத்தை என்னெ னக் கூறலாம்! வேற்கைப் பெருமானார், அந்தக்கணமே, வேங்கைமரமாக மாறி நின்றனர். நம்பிராஜன் தன் மகளருகில் வந்து ஆதரமொழிகள் கூறிக்கொண்டிருக் கும்போது, என்றுங்கண்டிராத வேங்கை மரமொன்று தனதெதிர் நிற்பதைப் பார்த்து அளவில்லா ஆச்சரிய மும் அகக்களிப்புங் கொண்டவனாய், அம் மரம் அங்கு எவ்வாறு தோன்றிற்றெனக் கேட்டனன். நம்பி ராஜனுடன் வந்திருந்த குறவர்களும் மறவர்களும் அம் மரத்தை வெட்டிவீழ்த்தி விடுவதாய்க் கூறிக் குதித்த ஆத்திரம் சொல்ல முடியாது. ஆயினும் அவசர புததியோடு அவர்களவ்வாறு செய்யவொட் டாது, நம்பிராஜன் அவர்க ளெல்லோரையும் தடுத்து விட்டுத் தன் அழகிய புத்திரியுடன் அன்பான மொழி களைக் கூறிக்கொண்டு, அம் மரமானது அருமையும் பெருமையும் வாய்ந்திருக்கின்ற தென்றும் அதன் அழகிய நிழலில் அவள் தங்குவது நன்றாயிருக்கு மென்றும் புகன்றனன். அவ்வாறு கூறிவிட்டு நம்பி ராஜன் தன் பரிஜனங்களுடன் தன் இருப்பிட மேகவும், முருகப்பிரானார் மிக்க வனப்புவாய்ந்த உருவு மேற்றுக்கொண்டு வள்ளியம்மையார் எதிரே நின்றனர். அந்தத் தோற்றத்தைக் கண்டு வானவரும் மயங்கினர் ; தானவருங் கலங்கினர். அவ்விதமான

சுந்தர வடிவத்தைத் தாங்கிக் கந்தவேள் வள்ளி யம்மையார் தம்மை மணத்தல் வேண்டுமென்று இரந்த காட்சி எழிலுடையதா யிருந்தது. ஆனால் வள்ளியம்மையார் அதற்குச் சிறிது மிணங்காது முருகப்பெருமானாரை ஏசிப் பேசிப் போகச் செய்தனர்.

பின்னர் சிறிதுநேரம் மறைந்திருந்த முருகப் பிரானார், நம்பிராஜன் ஆங்கு வருவதை யறிந்து ஒரு கிழவடிவங் கொண்டு, நம்பிராஜன் முன்சென்று அவனை ஆசீர்வதித்தனர். நம்பிராஜன் அத் திருத் தோற்றத்தைக் கண்டு அடங்கா மகிழ்ச்சிகொண்டு, 'பஞ்சுபோல் நரைத்த தலையோடும், பரமசிவனாரைப் போன்ற திருவுருவத்தோடும் எழுந்தருளிய எந்தல் பெருமானாரே, தண்ணளிபுரிந்து தாங்க ளெழுந்தருளின காரணத்தைத் தமியேற்குத் தயை யுடன் தெரிவித்தருளல் வேண்டும்' என்று வேண்டிக் கொண்டனன். அதனைக்கேட்ட அறுமுகக் கடவுள், 'துங்கமான கங்கை நதியின் தீரத்திலிருந்து மேருவையும் சுற்றித் திரமாய் நடந்து, இங்குவந்து இப் போதுதான் சேர்ந்தனம். சிறிது நாள் இங்குத் தங்கி, அகப்பற்றையும் புறப்பற்றையும் துறந்து, ஐம்புலனை அடக்கி ஐயன்பதத்தை நாடித் தவம்செய்யக் கருதி யிருக்கின்றேம். ஆதலின், உன் மக்கள் மனிதரைக் கொண்டு எமக்கு ஆதரவளித்து எம் விரதத்தை நிறைவேற்றுவாயாக!' என்று நம்பிராஜனை நோக்கி நய மாய்க்கூறினர். அதைக்கேட்ட நம்பிராஜனுக்கு இயம்ப முடியாத மகிழ்ச்சியுண்டாயிற்று. தன் குமாரத்தி

யாகிய தவப்பெருஞ் செல்வியை நோக்கி, 'என் அரு மந்தக் குழந்தையே! ஆருயிர்ச்செல்வி! இந்த விருத் தாப்பியருக்கு எள்ளளவும் தவறாது, உபசாரங்கள் செய்து நீ மனமகிழ்ந் திருக்கக்கடவை. தேனும் தினைமாவும் தந்து தெய்வம்போல அவரைப் பாவிக் கக்கடவாய். தினைப்புனத்துக் கருகிலேயே அவர் தவஞ்செய்துகொண் டிருப்பாராக!' என்று நம்பி ராஜன் நகைமுகத்துடன் கூறினன். வள்ளியம்மை யார், அவ்வாறே வள்ளலுக்கு உபசாரங்கள் செய்து கொண்டிருந்தனர் அவ்வாறு நிகழ்ந்துகொண்டு வர ஒருநாள் பரமன் திருக்குமரனார், பசியால் வருந்துவ தாகப் பாசாங்கு செய்தனர். அப்போது அவர் போட்டவேடம் யாராலும் சொல்லமுடியாது. வயிற் றின் குடல் முறுக்கிப் பிடிப்பதுபோன்றும், ஆவி துள்ளித் துடித்து அப்போதே அகன்று விடுவது போன்றும், அவர் பாசாங்குசெய்து போட்ட கூச்சல் அந்தப் புனமெங்கும் பரவிற்று. அதனைக் கண்ட வள்ளியம்மையார், அகமிக மருண்டு, தேனும் தினை மாவும்வேண்டிவேண்டித் தந்தனர். பசிதணிந்தவுடன், தாகத்தால் வருந்துவதாகக் கிழவர் பாசாங்கு செய்த னர். உடனே, வள்ளியம்மை வயோதிகரை, அடுத்த சுனைக்கு அழைத்துச் சென்று தாகசாந்தி செய்து கொள்ளுமாறு வேண்டினர். தாகசாந்தி செய்துகொண் டானதும், வயோதிகர் தமதுள்ளக் கருத்தை வள்ளி யம்மையாருக்குத் தெரிவிக்க, அவர் அதற் கிணங்கா தது கண்டு, குமரக்கடவுள் தமது முன் பிறந்தோராகிய விநாயகரைத் தோத்தரித்து, அவர் ஓர் யானையுரு

வுடன் தோன்றித் தமக்கு உதவிபுரியுமாறு வேண்டினர். அக்கணமே விநாயகர், யானையுருக்கொண்டு ஓடிவந்தனர். வள்ளியம்மையார் மிகப்பெரிதும் பயந்து முருகப்பிரானுரை வலிதிற் பற்றிக் கொண்டனர். 'பெரியோரே அடைக்கலம், பேரறிவுடையீர் அடைக்கலம்!' என்று வள்ளியம்மையார் வயோதிகரைப் பிடித்துக் கொள்ளலும், அறுமுகக்கடவுள் தமது நிஜவுருவங் காட்டினர். மகுடங்கள் விளங்கும் அறுமுகக் காட்சியும், கருணைபொழியும் கமலக்கண்களும், பவள வாயும் பரந்த மார்பும், சிங்கார மயிலும் சேவற் கொடியும் விளங்க, முருகப்பிரானுர் திருக்காட்சி தந்தருளலும், வள்ளியம்மையார் பெருமானுருடைய மலரடிவீழ்ந்து நமஸ்கரித்துத் தாம் கூறிய இழிசொற்களை மன்னிக்குமாறு வேண்டினர். பின்பு, பெருமானுர் முன் நிகழ்ந்தவை யனைத்தையும் கூறித், திருமால் மகளே தினைப்புனம் காக்கும் வள்ளிநாயகியா ரான தையும் நன்கு விளக்கினர். அதன்பிறகு முருகக்கடவுள் வள்ளியம்மையாரை நோக்கி, 'அழகினில் மிக்க பவழக்கொடியே, நீ தினைப்புனம் செல்வாயாக! நான் அங்கு வருகின்றேன்' எனக் கூற, அம்மையார் அகமிக மகிழ்ந்தனர்.

பின்னர் ஒருநாள் நடுநிசியில் முருகப்பெருமானுர், நம்பிராஜனுடைய அரண்மனை சென்று பாங்கியினுடைய உதவியினுல் வள்ளி நாயகியாரைச் சிறைகொண்டு போயினர். இஃதறிந்த நம்பிராஜன் மிகச் சினங்கொண்டு, குமரக் கடவுளின்மீது படை பெயர்த்துச் சென்றனன் எண்ணிறந்த வீரர்கள், கணக்கிலாத

நிரர்கள், குமரக் கடவுளின் குக்குடத் தொனியாலே, மடிந்து வீழ்ந்து மண்ணுடன் மண்ணாயினர். இதனால் வள்ளியம்மையாருடைய உள்ளம் வருந்தி உடலம் துடித்தது. நாரதரும் அங்கு வந்து ஆறுதல்கூறி, ஐயனுடைய அருளை நாடினர். இதனையெல்லாம் கண்ட இறைவனார்க்குக் கருணைபெருகி மனம் கரைந்தது. இறந்தவரனைவோரையும், அக்கணமே, எழுப்பி விட்டனர் பெருமானார். நம்பிராஜனும் எம்பிரானடி வீழ்ந்து வணங்கி நெஞ்சம் குழைந்து நெக்குநெக்குருகிக் கொண்டாடினான். அனைவோருடைய விருப்பத்தின்வண்ணம் குமரக் கடவுளும் வள்ளியம்மையாரும் சிற்றூர் சென்று சிறப்புடன் விளங்க, ஆங்கே, திருமணக்கோலம் மிகச் செவ்வியின் நடந்தேறினது. பின்னர், தெய்வப் பெரியோரிருவோரும் திருத்தணிகை சென்றிருந்து, சின்னாட் கழிந்த பிறகு, கைலைவரையின்கணுள்ள கந்தவரை சேர்ந்தனர். அழகு சான்ற அத் திருமலையின்கண், தேவசேனாதிபதியார், வள்ளி தெய்வயானை சகிதராய் வீற்றிருந்த வியன்பெரும் காட்சியைக் கண்டு தேவர்களெல்லோரும் பூமாரி பொழிந்தனர்.

முற்றிற்று.

